# தமிழகத் தொல்லியல் கழகம்

மே/பா. கல்வெட்டியல் துறை, தமிழ்ப் பல்கலைக்கழகம்,
தஞ்சாவூர் - 613 005.

## செயற்குழு

| | | |
|---|---|---|
| தலைவர் | : | கோ. விசய வேணுகோபால் |
| துணைத் தலைவர்கள் | : | நடன காசிநாதன்<br>என். சேதுராமன் |
| செயலர் | : | செ. இராசு |
| பொருளாளர் | : | கா. ராஜன் |
| இணைச்செயலர் | : | சு. இராசகோபால் |
| உறுப்பினர்கள் | : | இரா. தமிழாதன்,<br>இல. தியாகராசன்,<br>வள்ளி சொக்கலிங்கம்<br>வெ. வேதாசலம்<br>சு. இராசவேலு<br>கரு. இராஜேந்திரன்<br>எஸ்.எம். கமால்<br>ப. சண்முகம்<br>எ. சுப்பராயலு. |

# ஆவணம்

(இதழ்: 6)

# AVANAM

(Vol. 6)

எ. சுப்பராயலு
பதிப்பாசிரியர்

தமிழகத் தொல்லியல் கழகம்
தஞ்சாவூர்
1995

ஆவணம்: 6 (1995)

**Avanam**, Journal of the Tamil Nadu Archaeological Society, Thanjavur.



இவ்விதழ் இந்திய வரலாற்று ஆய்வுக் கழகத்தின் (INDIAN COUNCIL OF HISTORICAL RESEARCH) நல்கை உதவியுடன் வெளியிடப் பெறுகிறது. இவ்விதழில் வெளியிடப்படும் செய்திகளுக்கு அவ்வக் கட்டுரை யாசிரியரே பொறுப்பு.

---

கணிப்பொறிமூலம் அச்சுக்கோர்த்தோர்:
**கணபதி கிராபிக்ஸ், சென்னை-40.**

அச்சிட்டோர்:
**பாரி ஆப்செட் பிரிண்டர்ஸ், சென்னை - 13.**

# பொருளடக்கம்

# பதிப்புக் குறிப்பு

ஆவணம்:6 சரியாக ஓராண்டு இடைவெளிவிட்டு வருகிறது. இனிமேல் ஓராண்டுக்கு ஓர் இதழ் என்ற ஒழுங்கு நிலை பெறும் என நம்பலாம். இதற்கு கட்டுரையாளர்கள் மிகவும் ஒத்துழைப்பு நல்க வேண்டும். கட்டுரைகளை நன்கு திருத்தித் தவறாமல் தட்டச்சு செய்து இருபடிகளை அனுப்புவது நல்லது. செய்திகள் சிதறாமல், பக்கங்களைக் கூடுமானவரை குறைத்து அனுப்ப முயல்க. செய்திகள் புதியன என்பதை உறுதி செய்தபிறகு அனுப்புக. நிறைய படங்கள் அனுப்பலாம்.

இவ்விதழ் வெளியீட்டில் திருவாளர்கள் ப. சண்முகம், கா. ராஜன் ஆகியோர் மிகவும் பங்கேற்றனர். இதனை அழகுற அச்சிட்டு உதவிய பாரி ஆப்செட் பிரிண்டர்ஸ், சென்னை 13 அவர்களுக்கு நன்றி.

எ. சுப்பராயலு

## நன்றி

ஆவணம் இதழில் இந்தியத் தொல்லியல் அளவீட்டுத் துறை (ASI), தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத்துறை முதலிய பல அரசு நிறுவனங்களைச் சேர்ந்த அலுவலர் வெளியிடும் புதிய கண்டுபிடிப்புகள் மீதான பதிப்புரிமை அவ்வந் நிறுவனங்களையே சாரும், அவற்றை வெளியிட இசைவளித்த அவ்வந் நிறுவனத்தாருக்கு நன்றி.

# கிரந்த எழுத்துக்களும்
## அவற்றிற்கு நிகரான தமிழ் எழுத்துக்களும்

| | | |
|---|---|---|
| அ | a | 𑌅 |
| ஆ | ā | 𑌆 |
| இ | i | 𑌇 |
| ஈ | ī | 𑌈 |
| உ | u | 𑌉 |
| ஊ | ū | 𑌊 |
| எ | e | |
| ஏ | ē | 𑌏 |
| ஐ | ai | 𑌐 |
| ஒ | o | |
| ஓ | ō | 𑌓 |
| ஔ | au | 𑌔 |
| ருo | ṛ / ṛi | 𑌋 |
| ளுo | l̥ | 𑌌 |

| | | |
|---|---|---|
| க | k | 𑌕 |
| க$_2$ | kh | 𑌖 |
| க$_3$ | g | 𑌗 |
| க$_4$ | gh | 𑌘 |
| ங | ṅ | 𑌙 |
| ச | c | 𑌚 |
| ச$_2$ | ch | 𑌛 |
| | j | 𑌜 |
| ச$_4$ | jh | 𑌝 |
| ஞ | ñ | 𑌞 |
| ட | ṭ | 𑌟 |
| ட$_2$ | ṭh | 𑌠 |
| ட$_3$ | ḍ | 𑌡 |
| ட$_4$ | ḍh | 𑌢 |
| ண | ṇ | 𑌣 |
| த | t | 𑌤 |
| த$_2$ | th | 𑌥 |
| த$_3$ | d | 𑌦 |
| த$_4$ | dh | 𑌧 |
| ந | n | 𑌨 |

| | | |
|---|---|---|
| ப | p | 𑌪 |
| ப$_2$ | ph | 𑌫 |
| ப$_3$ | b | 𑌬 |
| ப$_4$ | bh | 𑌭 |
| ம | m | 𑌮 |
| ய | y | 𑌯 |
| ர | r | 𑌰 |
| ல | l | 𑌲 |
| வ | v | 𑌵 |
| ழ | ḻ | |
| ள | ḷ | 𑌳 |
| ற | ṟ | |
| ன | ṉ | |
| ச$_0$ | ś | 𑌶 |
| | ṣ / sh | 𑌷 |
| | s | 𑌸 |
| | h | 𑌹 |

2,3,4 என்பன வர்க்க எழுத்துக்களை ஒலி பெயர்க்கக் குறிக்கப்பட்டுள்ளன. கிரந்தத்தில் கூட்டெழுத்துக்களாக வருபவற்றைப் பிரித்து தனித்தனி எழுத்துக்களாகக் கொடுக்கலாம்.

# 1. நெகனூர்ப்பட்டி தமிழ் - பிராமிக் கல்வெட்டு

*சு. இராசவேலு, சென்னை*

**இடம்:** தென் ஆர்க்காடு இராமசாமி படையாட்சியார் மாவட்டம் செஞ்சி வட்டத்தில் (செஞ்சிக்கு 10 கிலோ மீட்டர் வடகிழக்காக) நெகனூர்ப்பட்டியின் மேற்கே உள்ள 'அடுக்கண்கல்' என்ற குன்றின் கீழ்அடுக்கில் இயற்கையாக அமைந்துள்ள குகையில் கூரை விளிம்பில் இக்கல்வெட்டு உள்ளது.

**காலம்:** சுமார் கி.பி. 3 - 4 ஆம் நூற்றாண்டு.

குகையில் படுக்கைகள் இருந்ததற்கான தடயங்கள் உள்ளன. கூரையின் உட்புறத்தில் வெண்மை நிறத்தில் தீட்டப்பட்டுள்ள மனித ஓவியங்கள் அழிந்தநிலையில் உள்ளன. பிராமிக் கல்வெட்டு நான்கு வரிகளில் மிகவும் மெலிதாகக் கீறப்பட்டுள்ளது. கல்வெட்டினைச் சுற்றிச் சதுரவடிவில் கோடு போடப்பட்டுள்ளது.

பெரும்பொகை என்ற ஊரைச் சேர்ந்த செக்கந்தி என்பவரின் தாய் செக்கந்தண்ணி என்பவள் செய்வித்த பள்ளியை இக் கல்வெட்டு குறிப்பிடுகிறது. பெண் துறவிகள் கந்தி, கவுந்தி என்ற பெயர்கள் வைத்துக் கொள்வதை இலக்கியங்கள் சுட்டுகின்றன. எனவே செக்கந்தியும் பெண்ணாக இருக்கக்கூடும்.

'பெரும்பொகை' (பெரும்பொகய்) என்ற ஊர் அதே பெயரில் நெகனூர்ப் பட்டியிலிருந்து 3 கி.மீ. தெற்காக அமைந் துள்ளது 'பெரும்பொகய்' என்பதற்கு பெரிய குகை உள்ள ஊர் எனப் பொருள் கொள்ளலாம். இங்கும் சமணப்படுக்கைகள் உள்ள குகை உள்ளது.

இக்கல்வெட்டு தமிழ் - பிராமி எழுத்து வளர்ச்சிநிலையை எடுத்தியம்பும் ஒரு சிறந்த கல்வெட்டாகும். கல்வெட்டில் மெய் யெழுத்துக்கள் யாவும் புள்ளியுடன் காணப்படுகின்றன. அனைத்து எழுத்துகளிலும் தலைக்கட்டு காணப்படுகிறது. இகர உயிர்க்குறி வளைத்து இடப்பக்கமாகச் செல்கிறது. 'ப' எழுத்தின் இரண்டு மேல் விளிம்புகளும் சமமாக உள்ளன. 'ள' எழுத்து புகளூர் தமிழ் - பிராமிக் கல்வெட்டை ஒத்துள்ளது.

1. பெரும்பொகய்
2. செக்கந்தி தாயியரு
3. செக்கந்தண்ணி செ
4. யிவித்த பள்ளி

வரைபடம் - 1

# 2. சித்தன்னவாசல் களஆய்வு

சு. இராசவேலு, சென்னை

புதுக்கோட்டை மாவட்டம் குளத்தூர் வட்டத்தில் சித்தன்ன வாசல் அமைந்துள்ளது. இங்குள்ள 'ஏழடிப்பட்டம்' சமணப் படுக்கைகளும், தமிழ் - பிராமிக் கல்வெட்டும் பாண்டியர் குடைவரையும், ஓவியங்களும் தமிழக வரலாற்றுக்குப் பெருமை சேர்ப்பவை. சென்ற ஆண்டு இக்கட்டுரை ஆசிரியர் அடங்கிய குழு இங்கு மேற்கொண்ட களஆய்வில் பல தொன்மையான எச்சங்களும் கல்வெட்டுக்களும் புதியதாகக் கண்டுபிடிக்கப்பட்டன.*

கல்வெட்டுக்கள்

*2:1* 'ஏழடிப்பட்டம்' என்ற இடத்துக்குச் செல்லுவதற்கான மலைப்பகுதி வழியில், வலப்பக்கம் ஒரு செங்குத்துப் பாதை உள்ளது. இப்பாறையின் சுவரில் காலழி என்ற ஒரு சிறு கல்வெட்டு காணப்படுகிறது. எழுத்தமைதியின்படி இக்கல்வெட்டு கி.பி. 5-6ஆம் நூற்றாண்டைச் சார்ந்தது எனக் கொள்ளலாம்.

*2:2* ஏழடிப்பட்டத்திற்குச் செல்லும் வழியிலேயே குகை வாயிலை ஒட்டியவாறு நீண்ட பெரும் பாறை ஒன்று கிடந்த நிலையில் காணப்படுகிறது. இப்பாறையின் மீது இரு இடங்களில் கல்வெட்டுக்கள் சிதைந்த நிலையில் உள்ளன. ஒரு கல்வெட்டில் எருக்காட்டூரு கட்டுளன் என்ற பெயர் காணப்படுகிறது. பிறிதொரு கல்வெட்டில் கட்டுள என்ற சொல் உள்ளது. எழுத்தமைதி அடிப்படையில் இக் கல்வெட்டுக்கள் இரண்டும் 6-7 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தவை.

வரைபடம் - 2

'எருக்காட்டூரு கட்டுளன்' என்ற சொல்லில் எகரம் முக்கோண வடிவிலிருந்து கீழ்ப்பகுதி பிரிந்து காணப்படுகிறது. இடப்பக்கம் சுழியும் உள்ளது. மெய்யெழுத்துக்கள் புள்ளியுடன்

---

* முனைவர் ப. சண்முகம், முனைவர் கா. இராஜன், திரு சு. இராஜ கோபால் ஆகியோர் இக்குழுவில் அடங்குவர்.

வரைபடம் - 3

காணப்படுகின்றன. எழுத்துகளில் உகரக்குறி கீழே சிறிது நீண்டும் ஊகாரக்குறி நீண்ட கோட்டின் அடியில் இடப்பக்கமாக வளைந்தும் காணப்படுகின்றன. 'க' எழுத்தின் நடுக்கோடு ஓர விளிம்புப் பகுதிகள் வளைந்து காணப்படுகின்றன.

2:3 ஏழடிப்பட்டத்திலிருந்து கீழே இறங்கிவரும் வழியில் இரண்டு பாறை முகடுகள் நீண்ட இடைப்பட்ட பகுதி பள்ளத்தாக்கு போன்று காணப்படுகிறது. பாறைகள் பல விழுந்து இப்பகுதி முழுவதும் பிற்காலத்தில் சிதைந்துள்ளன. பாறைமுகடு ஒன்றின் விளிம்புப் பகுதியில் கி.பி. 5-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த ஒரு கல்வெட்டு கண்டுபிடிக்கப்பட்டது. பூலாங்குறிச்சிக் கல்வெட்டின் எழுத்தமைதியைப் பெரிதும் ஒத்திருக்கும் இக் கல்வெட்டு 6 வரிகளில் மெலிதாகக் கீறப்பட்டுள்ளது. பெரிய எழுத்துகளை உடைய இக்கல்வெட்டில் ஆட்களின் பெயர்களும் பொய்கையின் பெயரும் உள்ளன. ஒவ்வொரு பெயருக்கும் இடையில் கோடு அல்லது ஒரு குறியீடு கீறப்பட்டுள்ளது. இக் கல்வெட்டின் சில எழுத்துக்கள் பெரிதும் சிதைந்துள்ளன.

1 ...ப்பொய்கை மற்றத....

2. மன் சேண்ணாடன்

3. சிற் செண்ணன் கணன்

4. கும்போகல் சாத்தன்

5. பெந்தோடன் பொஇய்கை நக்கன் (செ)

6. சேம்மு மடல் கொற்றை காய்வன் யவன் சென்...

இக் கல்வெட்டில் மெய்யெழுத்துகளுக்கு புள்ளியிடப் பட்டுள்ளது. இக்கல்வெட்டில் இலாட வடிவ 'ம' எழுத்தின் குறுக்குக்கோடு இரு பக்கங்களை முழுமையாகத் தொட்டவாறும் வலப்பக்கம் மட்டும் ஒரு சிறுகோடு வெட்டியவாறும் இரு வகையாகக் காணப்படுகின்றன. பூலாங்குறிச்சிக் கல்வெட்டில்

காணப்படும் ச,ட,த,ப,ந,ன எழுத்துகளின் அமைப்பே இக்கல்வெட்டிலும் காணப்படுகின்றது. உயிர் மெய் ஐகாரக் குறியீடு இடப்பக்கமாக இரண்டு கோடுகள் கொண்டுள்ளது. சில எழுத்து களில் அலை போன்ற ஒரு கோடு மட்டுமே காணப்படுகிறது. 'ன' எழுத்து இரண்டு வகையாக உள்ளது. ஒன்று பூலாங்குறிச்சிக் கல்வெட்டில் உள்ள 'ன' போன்றுள்ளது.

1
2
3
4
5
6

வரைபடம் - 4

**சமணப்படுக்கைகள்**

இக் கல்வெட்டு காணப்படும் இடத்திற்குச் சிறிது தள்ளி இடப்பக்கம் ஒரு குகை இருந்தமைக்கான தடயங்கள் உள்ளன. பெரும் பாறைகள் விழுந்துள்ளமையால் இதனுள்ளே செல்வதற்கான வழி குறுகியே காணப்படுகிறது. இக்குகையின் உள்ளே இரண்டு இடங்களில் கற்படுக்கைகள் காணப்படுகின்றன.

இங்கு எழுத்துப் பொறிப்புக்கள் எவையும் இல்லை. இதனை அடுத்து ஏழடிப்பட்டத்திற்கு மேலே கூரையாக விளங்கும் குன்றின் மீது ஏறிச் சென்றால் இரண்டு கற்குண்டுகள் ஒரு சிறு குகை போன்ற அமைப்புடன் காணப்படுகிது. இக்குகையின் தரையில் ஒரு சிறிய படுக்கை உள்ளது. இங்கிருந்து மலைமீது கிழக்காகச் சென்றால் மலைகளுக்கு இடையில் மஞ்சுப்புல் நிறைந்த பள்ளத் தாக்கு உள்ளது. இப் பள்ளத்தாக்கிலிருந்து தெற்காக உள்ள மலையின் விளிம்பில் குகை ஒன்று காணப்படுகிறது. வடக்கு நோக்கியவாறு உள்ள இக்குகையை எளிதாக அடைய முடியாது. இக்குகையை அடைவதற்கு முன்பு வழி இருந்திருக்க வேண்டும். மலை விளிம்பில் குகை உள்ளமையால் கால் தடம் கொண்ட குழிகளை சமண முனிவர்கள் படிக்கட்டுகளாக அமைத்துள்ளனர். இக்குகையில் இரண்டு இடங்களில் படுக்கைகள் காணப்படுகின்றன. இங்கும் கல்வெட்டுகள் எவையும் இல்லை.

ஏழடிப்பட்டத்திற்கு செல்லும் வழியில் மேற்காக இரண்டு குகைகள் காணப்படுகின்றன. இக்குகைகளில் முகட்டுப் பகுதியில் மழைநீர் உள்ளே விழாதவாறு வழிந்து செல்லும் பள்ளம் வெட்டப்பட்டுள்ளது. குகைகளில் மண் மூடிக்கிடப்பதால் கற்படுக்கைகள் உள்ளனவா என்பதை அறிய இயலவில்லை.

பாண்டியர் குடைவரையின் மேற்குப் பகுதியிலும் இரண்டு பெரிய குகைகள் உள்ளன. இங்குப் படுக்கைகள் இருந்த பகுதியைச் சிதைத்துள்ளனர். பிற்காலத்தைச் சேர்ந்த சில கல்வெட்டுகள் இங்கு பாறைகளில் உள்ளன. சித்தன்னவாசல் கி.மு.3ஆம் நூற்றாண்டு முதல் கி.பி. 8 ஆம் நூற்றாண்டு வரை தொடர்ந்து சமண முனிவர்கள் இருப்பிடமாக விளங்கியிருந்தமை இப்புதிய கல்வெட்டுக்களின் மூலமும் சமண இருக்கைகள் மூலமும் அறியமுடிகிறது.

# 3. சாணங்குப்பம் மற்றும் தாராசுரம் பல்லவர் கால நடுகற்கள்

து. தயாளன், போபால்

3:1

இடம்: வடஆர்க்காடு மாவட்டம், வாணியம்பாடி வட்டம், மேல் சாணங்குப்பம்.

காலம்: கம்பவர்மன், கி.பி. 899.

செய்தி: கல்வெட்டுப் பாடம் தெளிவாக இல்லை. விண்ட பாடிக்கள்ளர் தன் ஊர் ஆநிரை கவர்ந்தபோது சாகூழன் வேளாளன் என்பவன் அவர்களுடன் போராடி உயிர் நீத்தான் என்றும், அவனுக்காக அரசஞ் செறு என்ற நிலம் நெத்தல்பட்டியாகக் கொடுக்கப்பட்டது என்றும் தெரிகிறது. நெத்தல்பட்டி எனும் சொல் உதிரப்பட்டியினைக் குறிப்பதாகக் கொள்ளலாம். 'ஊருங்கோவி நான்று' என குறிப்பிடப்பட்டுள்ளதன் பொருள் தெளிவாக அறிய முடியவில்லை. நடுகல் நாட்டும் சமயம் நிகழ்த்தப்படும் சடங்காக இதனைக் கருத இடமுண்டு. வீரன் கைகளில் வில்லும், வாளும் ஏந்திய நிலையிலும் காலில் அம்பு துளைத்தும் காட்டப்பட்டுள்ளான்.

1 ஸ்வஸ்திஸ்ரீ கோவிசைய கம்பவிக்கிம பரும
2 ர்க்கு யாண்டு முப்பதாவது படுவூர்க்கோ
3 ட்டத்து மேலடையறுநாடு புக்கடைகளாட பாலி
4 ன.ம நாயகன் சாகூழன் வேளாளன் விண்ட பா
5 டிக் கள்ளர் இவ்வூர் தொறுக் கொள்ளப் பட்டான்
6 இவனுக்கு [ஊருங்] கோவு நான்று அரசஞ் செ
7 று நெத்தல் பட்டி அட்டித்து

3:2

இடம்: தஞ்சாவூர் மாவட்டம், கும்பகோணம் வட்டம், தாராசுரம். ஐராவதீசுவரர் கோயில் பராமரிப்புப் பணியின் போது கண்டெடுக்கப்பட்ட ஒரு பலகைக் கல்லில்.

காலம்: கி.பி 9 ஆம் நூற்றாண்டு.

செய்தி: பொற்பிரமன் என்பவன் ஊர் அழிவின்போது அதனைக் காப்பாற்றுவதன் பொருட்டுத் தன் உயிரினை நீத்தான் எனவும் அவனை நினைவுகூரும் வகையில் கீழ்வேளூர் என்னும் ஊரினைச் சார்ந்த சபையோர்கள் ஒரு கொடை (நிபந்தம்) செய்த செய்தியினையும் இக்கல்வெட்டு பகர்கிறது. நாகப்பட்டினத்திற்கு அருகாமையில் கீழ்வேளூர் எனும் ஊர் உள்ளது. இந்நடுகல் அவ்வூரினைச் சார்ந்ததாகக் கருதலாம். இக்கல்வெட்டு 'நிபந்தத்துக்கு விரோதஞ் செய்தால் காவிரி குலை குத்தினான் பாவங் கொள்வான்' என முடிகின்றது. பொதுவாகக் கல்வெட்டுக் களில் 'கங்கைக் கரையில் காராம்பசுவைக் கொன்ற பாவம் கொள்வான்' என ஓம்படைக்கிளவி குறிக்கப்படும். ஆனால் இக்கல்வெட்டில் காவிரியின் கரையினை அழித்தல் (குலை குத்தினான்) மகா பாவம் எனக் குறிப்பிடப்பட்டுள்ளது மிகச் சிறப்பாகும்.

1 ஸ்வஸ்திஸ்ரீ கீழ்வேளூர்

2 சபையோம் ஊராழிவி

3 ற்பட்ட பொற் பிரமனுக்குச்

4 செய்த நிபந்தத்துக்கு

5 வ்ரோதஞ் செய்தான் காவி

6 ரி குலை குத்தினான் பாவங் கொள்வான்.

# 4. வங்கட்டூர் மற்றும் கூட நகரம் கல்வெட்டுக்கள்

நடன காசிநாதன், சென்னை
கோ. அர்ச்சுனன், சென்னை

**இடம்:** வட ஆர்க்காடு அம்பேத்கார் மாவட்டம், குடியாத்தம் வட்டம், வங்கட்டூர் துரைசாமி நாயுடு மாந்தோப்பு

**காலம்:** இரண்டாம் ஆதித்த சோழன் யா:3 (கி.பி. 959)

**செய்தி:** இங்குக் கிடைத்துள்ள நான்கு நடுகற்களில் இரண்டு நடுகற்கள் 7 அடி உயரமும் 3 1/2 அடி அகலமும் கொண்டவை. இந்நடுகற்களில் உள்ள வீரர்கள் இடது கைகளில் வில்லேந்தியும், வலது கைகளில் கேடயமும் கொண்டுள்ளனர்.* உடம்பை அம்புகள் துளைத்துள்ளன. விளக்கு, முக்காலியின் மேல் வைக்கப்பட்டு மூக்குடன் கூடிய குடுவை ஆகியவை அவர்களின் கால்அருகில் காணப்படுகின்றன. அருகில் பசுக்கள் கூட்டமாக நின்றுள்ளன. மற்ற இரண்டு சிறிய நடுகற்களில் வீரர்கள் இடுப்பு வரையிலான உருவங்கள் காட்டப்பட்டுள்ளன. நான்கு நடுகற்களில் இரண்டு ஆநிரை காக்கும் பூசலில் இறந்துபட்ட தந்தை, மகன் ஆகியோருக்காக எடுக்கப்பட்டவையாகும். தந்தையின் பெயர் விக்கிரமாதித்தனாகிய தினம்செட்டி எனவும் மகன் பெயர் சாத்தையன் எனவும் குறிப்பிடப்பட்டுள்ளன. இப்பூசல் வீர பாண்டியன் தலைகொண்ட கோப்பரகேசரியின் மூன்றாம் ஆட்சி யாண்டில் நிகழ்ந்துள்ளது. இதே ஆண்டில் மற்றொரு கல்வெட்டு சாத்தையன் மகன் திருவூறல் என்பான் இறந்துபட்டதைத் தெரிவிக்கிறது. எனவே சோளனூர் என்ற தன் ஊரில் ஆநிரை காக்கும் போரில் தந்தையுடன் மகனும் இறந்துபட்டிருத்தல் வேண்டும். சாத்தையனுடன் உயிர் நீத்த வீரன் பெரியான் முத்தையன் காரி என்றும், இவனது மகன் திருவூறலுடன் இறந்துபட்டவன் முத்தரையன் தும்பன் எனவும் உள்ளது. காரியும் தும்பனை உடன் பிறந்தவர்களாக இருக்கலாம்.

---

* இக்கல்வெட்டுக்களை எம் துறையினர் கண்டறிய உதவிய வங்கட்டூர் எஸ். தேவராஜுலு மற்றும் கூட நகரம் வள்ளியம்மாள் ஆகியோருக்கும் இக் கல்வெட்டுக்களை வெளிக்கொணர முயற்சி யெடுத்துக் கொண்ட எம் துறையினர் முருகேசன், மற்றும் திருஞானசம்பந்தம் ஆகியோருக்கும் நன்றி.

வீரன் "கொட்டுப்பூசல் போய் தொறுமீட்டுப்பட்டான்" என கல்வெட்டு குறிக்கிறது. இக்கொட்டுப்பூசலைக் கரந்தைப் போரோடு தொடர்புடையதாகப் புறப்பொருள் வெண்பாமாலை குறிக்கிறது. சின்னையன் பேட்டையில் முன்பு படியெடுக்கப்பட்டுள்ள கம்பவர்மன் காலத்திய நடுகல் 'பூசல்லோடி' என்று குறிக்கிறது. (செங்கம் நடுகற்கள், எண்: '971 /57) எனவே பண்டைய இலக்கிய இலக்கண மரபுகளுக்கு இந்நடுகற்கள் சான்றாக உள்ளன.

*4:1*

1 வீரபாண்டியனைத் தலைகொண்ட கோப்பரகேசரி
2 பன்மற்கு யாண்டு மூன்றாவது செங்குன்றத்து
3 தூம் படைப்பார் சாத்தயன் திருவூறல் சோள
4 நூர் ஊரழிஞ்சி தொறுக் கொள்ள கொட்டுப்பூ
5 சல் போய் தொறுமீட்டுப்பட்டான்



ஒளிப்படம் - 1



ஒளிப்படம் - 2

*4:2*

1. வீரபாண்டியனைத் தலைகொண்ட கோப்பரகேசரி ப
2 ன்மற்கு யாண்டு மூன்றாவது செங்குன்றத்து தூம்ப
3 டைப்பர் விக்கிரமாதித்தனாகிய தின்மசெட்டி மகன்
4 சாத்தயன் சோளனூர் ஊரழிஞ்சு தொறுக் கொ
5 ள்ளக் கொட்டுபூசல் போய்த் தொறு மீ
6 ட்டுப்பட்டான்.

4:3

1 சாத்தயன் உடன்பட்டான் அடியா

2 ன் ஊர் பேர(ய)ன் முத்தரை(ய)*ன் காரி



ஒளிப்படம் - 3



ஒளிப்படம் - 4

4:4

1 திரு வூறல் உடன் பட்டான்

2 முத்தரையன் தும்பன்

4:5

இடம்: குடியாத்தம் வட்டம் வடஆர்க்காடு அம்பேத்கார் மாவட்டம் வள்ளியம்மாள் வயலருகில் உள்ளது.

காலம்: சோழன் பரகேசரி யா:14 சுமார் 9-10 ஆம் நூ.

செய்தி: கூடநகரில் வாழ்ந்த நிகுநபன் அணுக்கன் என்பான் அவ்வூர் ஆநிரைகளை மீட்பதற்காகச் செய்த போரில் இறந்துபட்டதைத் தெரிவிக்கிறது. கல்வெட்டில் உள்ள பரகேசரி விசயாலயன் அல்லது முதல் பராந்தகனாக இருக்கலாம் அம்பெய்யக் குறிபார்த்து நிற்கும் வீரனுடைய உருவம் அழகுறச் செதுக்கப்பட்டுள்ளது. வீரனின் இடையில் குறுவாள் ஒன்று செருகப்பட்டுள்ளது. தொடை வரை உள்ள சிற்றாடை காணப் படுகிறது.

1 ஸ்வஸ்திஸ்ரீ கோப்பரகேசரி பன்மற்கு
2 யாண்டு பதிநாலா [கிழ்டயாறு] நாட்டு கூ
3 டநகரிலிருந்து வாழும் நிகு [ந] பன் அணுக்க
4 ன்தொறு
5 மீட்டு
6 பட்டா
7 ன்க
8 ல்



ஒளிப்படம் - 5



ஒளிப்படம் - 6

4:6

இடம்: மேற்படி கூடநகரம், திக்கம்மாகோயில் அருகில் உள்ளது.

காலம்: கி.பி. 903 (சகம் 825)

செய்தி: மாவலிவாணாதிராயன் காலத்தில் கூடநகரிலுள்ள ஏரியினைப் பராமரிப்பதற்காக அவர் தம்பி கங்கர் சிவமாரையன் என்பான் நிலத்தைத் தானமாகக் கொடுத்துள்ளான் என்பதையும், அவன் அடையாறு நாட்டை ஆண்டுள்ளான் என்பதையும் அறியலாம்.

*1 சகரை யாண்டு எண்*
*2 ணூற்றிருபத்தஞ்சாவது மா*
*3 வலி வாண ராயர் விசையி*
*4 த்தையன் ராஜ்யஞ் செய்*
*5 ய அவர்தம்பி கங்கர் சிவ*
*6 மாரையன் அடையாறு நாடா*
*7 ண்டு கூட நகர ஏரிக்கு*
*8 அவன் விண்ணப்பத்*
*9 தாற் கங்கராசனும் சிவ*
*10 மாரையனும் அட்டின பட்*
*11 டி குழி..*
*12 ...ஞ்செ*

*4:7*

**இடம்:** வடஆர்க்காடு அம்பேத்கார் மாவட்டம், குடியாத்தம் வட்டம், சேம்பள்ளி

**காலம்:** சுமார் 15-16ஆம் நூற்றாண்டு.

**செய்தி:** இங்குக் கிடைத்துள்ள நினைவுக்கல்லில் புலியும் காளையும் போரிடுவது போன்ற காட்சி காணப்படுகிறது. இறுதியில் காளை இறந்துவிட்டது போன்று தெரிகிறது. இவ்வுருவங்களுக்கு மேல் பகுதியில் கல்வெட்டு உள்ளது.

### தச்சன் புதூரன் இஷ்ஷபம்

*குறிப்பு:* சேம்பள்ளிக்கு மிக அருகில் சுமார் 3 கி.மீ. தொலைவில் புதூர் என்று அழைக்கப்படும் தச்சன்புதூர் இன்றும் உள்ளது. வீரர்களின் ஆற்றலை நினைத்துப் போற்றிய தமிழக மக்கள் விலங்கினங்களுடைய உதவியினையும் மறவாமல் அவைகளுக்கும் சில நேரங்களில் நினைவுக்கல் அமைத்து வழிபட்டிருக்கிறார்கள் என்பது அண்மைக்காலங்களில் கிடைத்துவரும் நடுகற்களால் அறிய முடிகிறது. திருவண்ணாமலை சம்புவராயர் மாவட்டம் எடுத்தனூர் என்ற இடத்தில் ஆநிரைகளைக் கள்வர்கள் கவர்ந்து சென்றபோது அக்கள்வர்களைத் தோற்கடித்து அவற்றை மீட்ட போர் வீரனுக்கு நடுகல் அமைத்திருக்கிறார்கள். கி.பி. 7-ஆம் நூற்றாண்டைச் சார்ந்த அந்நடுகல்லிலேயே அவ்வீரனோடு கள்வர்களை எதிர்த்துப் போரிட்ட நாயின் வீரத்தையும் போற்றி நாயின் உருவத்தையும் வடித்துள்ளனர். அந்நாயின் பெயர் 'கோவிவன்' என எழுதப்பட்டுள்ளது. (செங்கம் நடுகற்கள், எண்: 1971/59).



**ஒளிப்படம் - 7**

செங்கை எம்.ஜி.ஆர் மாவட்டம் இந்தளூர் என்ற இடத்தில் சேவல் ஒன்றுக்கு நினைவுக்கல் (7 ஆம் நூற்றாண்டு) அமைக்கப்பட்டு இருப்பதும் கண்டுபிடிக்கப்பட்டிருக்கிறது.

காளைக்காக ஏற்படுத்தப்பட்டுள்ள சேமப்பள்ளி நினைவுக்கல் புதிய தகவலாக உள்ளது. பண்டைத் தமிழ் மக்கள் 'ஏறு தழுவுதல்' என்ற ஒரு விளையாட்டை பழக்கத்தில் கொண்டிருந்தார்கள் என்பது தொல்காப்பியம் மற்றும் சங்க இலக்கியங்களில் காணப்படுகிறது. அதற்காக வளர்க்கப்படும் காளைகளைக் 'கொல் ஏறு' என்றும் 'மாக்காளை' என்றும் இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன. அத்தகைய ஒரு 'கொல்லேறாக' இந்த தச்சன்புதூரன் காளை இருந்திருக்கலாம். சேலம் மாவட்டம் பெத்தநாயக்கன் பாளை யத்தில் காணப்படும் ஒரு நடுகல்லில் 'எருது விளையாடி இறந்த சங்கன் மகன் பெரிய பயலுக்கு நட்டகல்' என்று காணப்படுகிறது. சேம்பள்ளி நினைவுக்கல் எருது விளையாடி, இறந்துபட்ட வீரனுக்கு அமைக்கப்படாமல், புலியால் சாகடிக்கப்பட்ட ஒரு எருதுக்கு அமைக்கப்பட்டதாகக் காணப்படுகிறது.

# 5. புஞ்சை மூலபருடைக் கல்வெட்டு

சூ. சுவாமிநாதன், மைசூர்

இடம்: தஞ்சை மாவட்டம், மயிலாடுதுறை வட்டம், புஞ்சை நற்றுணை ஈசுவரர் கோயிலின் கருவறையின் வடக்குப் பகுதி[1]

காலம்: முதல் இராசேந்திர சோழன், யா.8 (கி.பி. 1020)

செய்தி: உய்யக்கொண்டார் வளநாட்டின் கண் உள்ள ஆக்கூர் நாட்டில் அமைந்த தலைச்சங்காடு என்ற ஊரின் (ஊர் மன்றத்தினரான) மூலபருடையார் இதே ஊரிலுள்ள ஸ்ரீ மும்முடிசோழன் என்ற அம்பலத்தில் கூடிச் செய்த அறச்செயல் பற்றியது. அவ்வூர் மகாதேவர் கோயிலில் வைகாசித் திங்கள் திருவாதிரை நாளில் நடைபெறும் விழாவிற்கும், அடியார்கள் பொருட்டாகும் செலவுக்கும், மற்றும் அந்தணர்களுக்கு உணவு படைப்பதற்கென்றும் இக்கோயில் விலைக்கு வாங்கிப் பெற்றிருந்த நிலத்தை மூலபருடையார் இறையிலி செய்தனர். இதற்கு கோயிலிடம் 50 காசு பெறப்பட்டது. மேலும் மூலபருடை ஏற்கனவே கோயிலுக்கு செலுத்த வேண்டிய கடன் நூறு கழஞ்சு பொன் மீது வளரும் வட்டி கோயிலுக்கு உரிமையான வேறு இரு வேலி நிலத்திற்கு வரி விலக்கிற்காக பயன்படுத்தப்பட வேண்டியது என்றும் நிச்சயிக்கப்பட்டது.

**1. ஸ்வஸ்திஸ்ரீ திருமந்னி வளர இருநில மடந்தை போர்ச்சயப் பாவையுஞ் சீர்த்திநிற்ச் செல்வியும் தந் பெருந் தேவியராகி இந்புற நெடுதுயிலூழியுள் இடைதுறை நாடுந் துடர்வனவேலிப் படர் வனவாசியுஞ் சுள்ளிச் சூழ் மதில் கொள்ளிப்பாக்கையுந் நண்ணர் கருமுரண் மண்ணைக் கடக்க மும் பொருகடலீழத்தரைசர்த முடியும் முந்நவர் பக்கல் தெந்நவந் வைச்ச சுந்தரமுடியும் இந்திர -**

**2. நாரமும் தெந்திசை ஈழமண்டல முழுவதும் எறிபடைக் கேரளன் முறைமையில் சூடும் குலதனமாகிய பலர் புகழ் முடியும் செங்கதிர் வேலைத் தொல் பெருங்காவல் பல் பழந்தீவும் செருவில் சினவில் இருபத்தொரு காலரைசு களை கட்ட பரசுராமந் மேவருஞ் சாந்திமத் தீவரண் கருதி இருத்திய செம்பொற் றிருத்தகு முடியும் மாப்பொரு**

---

1. இந்தியக் கல்வெட்டு ஆண்டறிக்கை, 1925, எண் 187.

தண்டாற் கொண்ட கோப்பரகேசரிவம்மராந ஸ்ரீராஜேந்திர சோழ தேவர்க்கு யாண்டு எட்டாவது ஆநித் திங்கள் முந்நாள் பக்கம் எட்டு கிழமை நாயறு மகத்தி நாந்று உய்யக் கொண்டார் வளநாட்டு ஆக்கூர் நாட்டுத் தலைச் சங்காட்டு மூலபரடை யோம் நம்மூர் ஸ்ரீ மும்முடி சோழந் என்று திருநாமம் உடை பேரம்பலத்தே கூட்டக் குறைவறைக் கூடி இருந்து வாயொத்துப் பணித்த பரிசாவது நம்மூர்த் தெந்சேரி பெரிய தளி மகாதேவர் காசட்டி கொண்டு நிலம் விளை நாட்டுப் பூதநூர்

3. நிலம் ஒந்றேய் முக்காலே இரண்டு மாவும் இத் தேவர்க்கு வைகாசித் திருவாதிரைத் திருநாள் திருஉத்சவத்துக்கு வேண்டும் கொற்றுக்கும் பிராமணர் போஜனத்துக்குமாக இந்நிலத்துக்கு இறைஇலியாக இத்தேவர் பக்கல் ஐம்பது காசு கொண்டு இந்நிலத்தால் வந்த குறுநிலம் இறை இலி செய்து குடுத்தோம் மூலபரடையோம் இத்தேவர்க்கே நாங்கள் கைய்யெழுத்தோ -

4. லையால் கடவ பொந் நூற்றுக் கழஞ்சுக்கும் இப்பொந்நுக்குப் பலிசைக்காக இத்தேவர் நிலம் கீழ்ப்புலத்தில் நிலத்திலே இறைஇலியாக இழிச்சிக் குடுத்த நிலம் இரு வேலியும் இந்த முந்பில் பிரமாணம் சாவதாகவும் இப்பரிசிநால் இரண்டு கிடப்பால் நிலமும் இறைஇலியாகத் திரு நன்றிபள்ளி உடையார் கோயிலிலே கல்வெட்டு விச்சு இறைஇலி செய்து குடுத்தோம் மூலபரடை

5 யோம் இவை பணியால் பரடைக் காவிதி ஏறன் எழு நூற்றுவன் எழுத்து இவை பெருவண்ணக்கந் மாயாந் வடுகந் எழுத்து இவை பெருவண்ணக்கந் பூதி மாயாந் எழுத்து இவை எழுநூற்றுவ மோடந் எழுத்து இவை பந்மாகேசுர் இரக்ஷை.

இக் கல்வெட்டு பலவகையிலும் சிறப்புடையது. மூலபருடை என்ற அவை பெரும்பாலும் அந்தணர்கள் வாழும் பிரம்மதேயத்தில் அதிலும் பெருங்கோயில்கள் உள்ள ஊர்களில் இருக்கும் அவையாகும்.[2] பருடை என்ற சொல் 'பரிஷத்' என்ற வடமொழியின் தமிழ்த் திரிபாகும். பரிஷத் என்ற சொல்லிற்கு சபை, அமைப்பு, குழு என்ற பொருளுண்டு. ஒரே கல்வெட்டு பருடை என்ற சொல்லாட்சியையும் மூலபருடை என்ற சொல்லாட்சியையும் ஒரே பொருளில் பயன்படுத்துவதால் இரண்டும் ஒரே அமைப்பைக் குறிக்கின்றன எனத் துணியலாம்.

---

2. S. Swaminathan, "Chola Parantaka I and his Times" (1987), p. 324.

இந்த அவையில் பிரம்மதேயத்தின் அவையான சபா உறுப்பினர்களும் கோயில் நிருவாகிகளுமே உறுப்பினர்.[3] இவர்கள் வேதத்திலும், சாத்திரத்திலும் வல்லவர்கள். சுசீந்திரம் கல்வெட்டில் 'எம்பெருமான் ஸ்ரீகாரியம் ஆராய்கின்ற மூலபருடைச் சபையார்' என உள்ளது.[4] முன்பே குறிப்பிடப்பட்டது போல முக்கியமான சிறப்பு வாய்ந்த கோயில்கள் இருக்கும் ஊர்களான திருவெள்ளறை, குடமூக்கு, மகேந்திரமங்கலம், ஈசானமங்கலம், கருகாவூர், புஞ்சை போன்ற ஊர்களில் மூலபருடை செயலாற்றி வந்துள்ளது.

இதே ஊரிலுள்ள இரண்டாம் இராசேந்திர சோழனின் கல்வெட்டொன்றில் இவ்வூரிலுள்ள கோயில் நிலத்தை இறையிலி செய்யும்போது அதன் அந்தண உறுப்பினர்களான சாதகாணி சேரர் தத்தந், கவிசிகந் சோமந் தத்தந், சாதகாணி அங்கி தேவந் போன்றவர்கள் கையொப்பமிட்டுள்ளனர்.[5] நாம் இங்கு ஆராயும் கல்வெட்டிலோ ஏறன் எழுநூற்றுவன், பெருவண்ணக்கந் பூதிமாயாந் போன்ற அந்தணரல்லாதவர்கள் கையெழுத்திட்டுள்ளனர். இவர்கள் பரடைக்காவிதி எனக் குறிக்கப்பட்டுள்ளார்கள். அதாவது இவர்கள் மூலபருடையின் ஏவற்பணிகளைச் செய்யும் கணக்கர்கள். இக்கல்வெட்டில் உள்ள பரடைக் காவிதிகளில் இருவர் பெருவண்ணக்கந் மாயாந் வடுகன், பெருவண்ணக்கன் பூதி மாயாந் ஆகும். தமிழ்க் கல்வெட்டுக்களில் வண்ணக்கன் என்ற பட்டம் உடையவர்கள் நிலவிலை சம்பந்தமான ஆவணங்களில் கையொப்பமிடுபவர்களாகக் காணப்படுகிறார்கள்.[6] அறச்சலூர் கல்வெட்டில் மலய வண்ணக்கன் தேவன் சாத்தன் என்பான் குறிக்கப்படுகிறான். சில கல்வெட்டுக்களில் வண்ணக்கன் என்பார் பொன், காசு, மணி, உலோகம் ஆகியவற்றை ஆராய்பவர்களாக உள்ளனர். இவர்கள் கணக்கறிவும் எழுத்தறிவும் உள்ளவர்கள் என்பதனை நில விற்பனை சார்பான கல்வெட்டுக்களில் கையொப்பம் இடுபவர்களின் பெயர்களை வைத்து ஊகிக்கலாம். இந்தக் கல்வெட்டிலும் வண்ணக்கன் என்பார் கையொப்பமிட்டிருப்பது மேற்கண்ட கருத்தை வலுப்பெறச் செய்கிறது.

---

3. மேலது

4. *Epigraphia Indica*, V, p.44.

5. இக. 1925, எண் 193.

6. சு. இராசகோபால், "வண்ணக்கன் - ஓர் ஆய்வு", கல்வெட்டு, 1991 நவம்பர், ப. 24.

## 6. ஒழுகூர் மற்றும் சிவநாதபுரம் கல்வெட்டுக்கள்

ம. காந்தி, வேலூர்
ப. வெங்கடேசன், காவேரிப்பாக்கம்

*6:1*

*இடம்:* வடார்க்காடு அம்பேத்கர் மாவட்டம், வாலாஜா பேட்டை வட்டம், ஒழுகூர் திருக்காளீசுவரர் திருக்கோயில் முகமண்டபத்தின் தென்புறத்தில், தாழ்வாரத்தின் கிழக்குக் கோடியில் இருக்கும் ஒரு கல் தூண்.

*காலம்:* பார்த்திவேந்திராதிவர்மன், யா:9, கி.பி. 966.

*செய்தி:* விளக்கெரிக்க நிலக்கொடை.

1. ஸ்வஸ்திஸ்ரீ
2 கொப்பார்த்திவேந்திராதி பந்மற்கு யா
3 ண்டு 9-வது படுவூர் கோட்டத்து
4 ஒழுகையூர் நாட்டு ஒழுகையூர் வாணி
5 யன் முக்கடம்பனாகனேன் இவ்வூர்
6 திருக்கரபுரத்தாள்வார்க்கு நுன்தாவிளக்கு வைத்த
7 போகம் யானுடை பூமி முக்கடம்ப நிலத்தி
8 லே எழு மா நிலம் சந்திராத்தவரை வைத்
9 தேன்.... கங்கொண்டு திருவுண்ணாழிகை விளக்கு மு
10 ட்டாமையெரிப்போம் ....

*6:2*

*இடம்:* வடார்க்காடு அம்பேத்கர் மாவட்டம், வேலூர் வட்டம் சிவநாதபுரம் என்னும் ஊரில் கானாற்றங்கரையில் ஒரு கற்பலகையில். வெட்டப்பட்ட கல்வெட்டு. இப்பொழுது இக்கற்பலகை வேலூர் அரசு அருங்காட்சியகத்தில் உள்ளது.

*காலம்:* முதல் குலோத்துங்க சோழன், யா:17, கி.பி. 1087.

*செய்தி:* சிவன் கோயில் கட்டி அதற்குப் புது ஏரி ஒன்று செய்து 3 வேலி நிலத்தைப் பண்படுத்தி கொடை செய்யப் பட்டது.

1 ஸ்வஸ்திஸ்ரீ குலோத்துங்க
2 சோழதேவர்க்கு பதிந்ஏழாவது
3 தெள்ளையூர் தெந்பிடாகை
4 அத்தியூரிலிருக்கும் சோழகுலச்
5 செட்டி மாதநாத நாற்பத் தெண்
6 ணாயிரச் சித்திரமேழி சமைய
7 சேனாபதியேன் கோயில் கண்
8 டு சிவலிங்க பிருதிடை பண்ணி
9 த் தேவக்குத் தேவதானாமாக வ
10 டக்கிலேரியுங் கண்டு தூம்புமிட்டு மூன்
11 று வேலி நிலமுந் திருத்தி விட்டேந் இத்தந்
12 ம இறங்காமற் காப்பாரடிகள் எ
13 ந்தலை மேலெயதே ஸ்ரீ மாகேச்வரர் ரக்ஷை

# 7. தஞ்சாவூர் கல்வெட்டு

து. தயாளன், போபால்

இடம்: தஞ்சாவூர் அரண்மனை வளாகம், மணிமண்டபம் பணியின் போது கிடைத்தது.

காலம்: 12-13ஆம் நூற்றாண்டு.

1. இவூரில்
2 வீர சோ
3 ழ அனுக்
4 கரில் மூத்
5 த அடை
6 ப்பு விதிய
7 ளனான இரா
8 சேந்திர
9 சோழப்
10 பல்லவ
11 ரைய
12 னேன் இ
13 ....
14 ....
15 யாந் இரா
16 சேந்திர
17 சோழப்
18 பல்லவ
19 ரையந்
20 எழுத்து.

# 8. ஓரங்கூர் கல்வெட்டுக்கள்

இல. தியாகராஜன், அரியலூர்.

8:1

இடம்: தென்னார்க்காடு மாவட்டம், திட்டக்குடி வட்டம், ஓரங்கூர் வாரீசுவர் கோயில் சுப்பிரமணியர் சன்னதி வடபுறம் கிடக்கும் கற்பலகை.

காலம்: இரண்டாம் இராசாதிராசன யா:3 (கி.பி. 1169)

செய்தி: உரங்கூர் திருவாலிசுவரமுடைய நாயனார் கோயிலுக்கு மங்கலநல்லூர் உடையான் செம்பை கண்ணுடைப் பெருமாளான வெண்குன்ற நாடாழ்வான் என்பவர் திருமடைப் பள்ளிப்புறமாக இவ்வூர் ஏரிகீழ் ஒரு வேலி நஞ்சை நிலமும் கொற்றனூர் எல்லைக்கு மேற்கில் மூன்றரைவேலி புஞ்சை நிலமும் தானமாக அளித்துள்ளார். இவ்விரு ஊர்களும் இன்று முறையே மங்களூர் எனவும் கொத்துனூர் எனவும் அழைக்கப்படுகின்றன.

1. ஸ்வஸ்திஸ்ரீ திரிபுவனச்
2 சக்கரவத்திகள் ஸ்ரீ இராஜா
3 தி,ராஜதேவற்கு யாண்டு [3]
4 வது மலாடாகிய ஜனனாதவ
5 ளநாட்டு நரையூற் கூற்றுத்து உ
6 ரங்கூர் திருவாலீச்.வரமுடை
7 ய நாயனார்க்கு மங்கலநலூர்
8. உடையார் செம்பை கண்ணு
9. டைப் பெருமாளான வெண்கு
10 ந்ற நாடாழ்வாந் திருமடைப்பள்
11 ளிப் புறத்துக்கு ஏரி கீழ் இட்ட நந்
12 செ நிலம் ஒரு வேலி ஏறு காற்பரம்பில்
13 கொற்றநூர் எல்லைக்கு மேற்கு
14 இட்ட புந்செநிலமுந்றரை வேலி

---

* இக் கல்வெட்டுக்களை ஆய்வுசெய்ய உதவிய என் மாணவர் அய்வனூர் திரு. செந்தில்குமார் அவர்களுக்கு நன்றி.

8:2

இடம்: மேற்படி கோயில் கருவறை மேற்கு சுவர்

காலம்: மூன்றாம் குலோத்துங்கன், யா:25 (கி.பி 1203)

செய்தி: அரியலூருக்கு வடக்கே குழுமூர் என்ற ஊர் உள்ளது. இரண்டாம் இராசாதிராசன் காலத்தில் இக்கோயில் செங்கல்லால் கட்டப்பெற்றிருந்தது எனவும், மூன்றாம் குலோத் துங்கன் காலத்தில்தான் கற்றளியாக்கப்பட்டது எனவும் அறிய முடிகிறது.

1. ஸ்வஸ்திஸ்ரீ திரிபுவனச் சக்கரவத்திகள் ஸ்ரீமருதை
2 யும் பாண்டின் முடித்தலையுங் கருவூருங்கொண்
3 டருளிய குலோத்துங்க சோழதேவற்க்கு யாண்டு
4 25-வது வடகரை மிலாடாகி ஜனநாத வளநாட்டு
5 நரையூற் கூற்றத்து உரங்கூர் உடையார் திருவாலீசு
6 வரமுடைய னாயநார் கோயில் திருக்கற்றளித் திருப்பணி செய்
7 வித்தான் குழுமூர்ருடையான் செம்பை உடைய நாயகநா
8 ன இராசகெம்பீரக்கோவலராயன் இத்திருக்கற்றளி
9 திருப்பணி செய்வித்தார் உ

8:3

இடம்: மேற்படி கோயில் அர்த்த மண்டப வடசுவர் முப்பட்டைகுமுதம்

காலம்: மூன்றாம் இராசராசன், யா:18 (கி.பி.1234)

செய்தி: இது நாயன்காமனான இராஜராஜ மகதை நாடாழ்வான் என்பவர் கோயிலுக்கு ஒருவேலி நஞ்சை நிலமும் 15 வேலி புஞ்சை நிலமும் இறைலியாகக் கொடுத்தார் என்று கூறுகிறது. இந்நிலங்கள் நரிச்சேரி நத்தமான கானறு காட்டி நல்லுபேரூர் எல்லைக்கு கிழக்கேயும் புல்லூர் குறும்பூர் எல்லைக்கு வடக்கிலும் இருந்ததாக அறிகிறோம். இவர் ஆறகழூர் சிற்றரசரான பொன்பரப்பின வாணகோவரையர் ஆவார். புல்லூர் குறும்பூர் இன்று புவிகரம்பூர் என அழைக்கப்படுகிறது.

1 ஸ்வஸ்திஸ்ரீ திருபுவனச் சக்கரவத்திகள் ஸ்ரீ இராஜராஜ தேவற்கு யாண்டு 25 - வது மலாடாகிய ஜநநாத வளநாட்டு நரையூர்க் கூற்றத்து உரங்கூ

2 ர் உடையார் திருவாலீசுரமுடைய நாயனாற்கு நாயன் காமநான இராரா மகதை நாடாழ்வான் இன்னாயநாற்கு

இறையிலி நரிச்சேரி நத்தமான கானறு காட்டி நல்லு பேரூர் எல்லை

3 க்கு கிழக்கு கேணிக்கு மேற்கு புல்லூர் குறும்பூர் எல்லைக்கு வடக்கு என் நிலநஞ்சை ஒரு வேலியும் இத்தை சூழ்ந்த புஞ்சை 15 வேலி இன்னிலத்து

4 க்கு பொன்வரி உள்ளபட அனைச்சாயமு நாயனாற்கு குடுத்தோம் இது மாற்றுவான் ஏழுஏழு பிறப்பு ஏழெசம் அறுவான்.

8:4

இடம்: மேற்படி கோயில் கருவறை வடசுவர்

காலம்: முதலாம் ஜடாவர்மன் சுந்தரபாண்டியன், யா:11 (கி.பி. 1261)

செய்தி: இக்கோயிலில் சித்திரைத் திருநாள் நடத்துவதற்கு இப்பகுதியைச் சேர்ந்த ஊரவர்கள் ஆவன செய்ததைக் கூறுகிறது. உரங்கூர் ஊரவர் திருக்காரோளியும் திருவெழுச்சியும் பட்டகுறிச்சி ஊரவர் (இன்றைய பட்டாக்குறிச்சி) 4ம்நாள் திருநாளும், முல்லைவாய் ஊரவர் 5ஆம் நாள் திருநாளும், வள்ளி மருதத்தூரவர் (இன்றைய வள்ளி மருதம்) 6ஆம் நாள் திருநாளும், பனையனூர் ஊரவர் 8ஆம் நாள் திருநாளும் நடத்த ஒப்புக் கொண்டனர்.

1 ஸ்வஸ்திஸ்ரீ கோச்சடைபன்ம

2 ரான திரிபுவனச் சக்கரவத்தி

2 கள் ஸ்ரீ சுந்தரபாண்டியதேவற்

4 கு யாண்டு 11-வது மலாடாகிய செ

5 ணநாத வளநாட்டு நரையூற் கூற்ற

6 த்து உரங்கூர் உடையார் திருவாலீச்.வ

7 ரமுடைய நாயனார் கோயில் சித்தி

8 ரை திருநாள் எழுந்தருளப் பண்ண உபைய

9 ம் பண்ணி குடுத்தபடியாவது உரங்கூரவர்

10 திருக்காரோளியும் திருவெழுச்சியும் பட்டகுறி

11 ச்சி ஊரவர் நாலாந் திருநாளும் முல்லைவாயூரவர்

12 ஐஞ்சாந்திருநாளும் வள்ளிமருதத்தூராவர் ஆறாந்திரு

13 நாளும் பனையாதூர் ஊரவர் எட்டாந் திருநா

14 ளும் இப்படி திருநாளுக்கு வேண்டுவன குறை

15 வறுத்து நாங்களே சந்திராதித்தவரையும்
16 எழுந்தருளிவிக்க கடவோமாகவும் இப்படி
17 க்கு உபையம் பண்ணி குடுத்தோம் உ வள்ளி
18 மருதத்தூற்கு சமைந்த பேரலூருடையான் அமர
19 கோன் எழுத்து உ பனையாதூற்கு சமைந்த பேராலூ
20 ருடையான் குலோத்துங்க வேளான் எழுத்து உ முல்லை
21 வாய் ஊற்கு சமைந்த தொழுலூர் உடையான் உமை
22 யான் எழுத்து உ பட்டாழ்வார் குறுச்சி ஊற்கு சமை
23 மந்த மலையடிபெருமாள் எழுத்து உரங்கூர்க்கு சமை
24 ந்த தொழு ஆருடையான் உடைய உலகளந்த வேளார்...
25 த்தான் திருச்சிற்றம்பல வேளார் எழுத்து
26 குழுமுரு
27 டையா
28 ன் துண்
29 ட நாட்டு
30 வேளா
31 ந் எழுத்
32 து.

# 9. புக்கத்துறை கல்வெட்டு

ஜி. திருமூர்த்தி, சென்னை

**இடம்:** மதுராந்தகம் வட்டம், செங்கல்பட்டு எம்.ஜி.ஆர் மாவட்டம், புக்கத்துறை பெருமாள் கோயிலின் கருவறை அதிட்டானத்தில் மூன்று பக்கங்களிலும் நீண்ட இரண்டு வரிகளில் உள்ளது.*

**காலம்:** மூன்றாம் குலோத்துங்கன் யா. 34 (கி.பி. 1212).

**செய்தி:** புக்கத்துறை விச்சாதிர விண்ணகராழ்வார் கோயிலின் திருநாமத்துக்காணி நிலத்தை நந்திபன்பன் என்ற உயர்அதிகாரி சோழர் படையின் ஒரு பிரிவான "நிலைப்படைக்கு" ஜீவித நிலமாக ஆக்கியதைத் தொடர்ந்து கோயிலில் பூசை தட்டுப் பட்டது. ஆகவே மீண்டும் கோயில் நிலமாக மாற்றித்தர வேண்டு மென்று சேதிராயன் (இன்னொரு உயர் அலுவலர்) கேட்டுக் கொண்டதற்கிணங்க அரச ஆணை பிறப்பிக்கப்பட்டது. இங்கு ஜீவிதம் என்பது வாழ்க்கைச் செலவுக்காக வழங்கப்பட்ட நில வருவாயாகும். அதாவது கோயிலுக்குச் செல்ல வேண்டிய வரு வாய் படைக்குத் திருப்பப்பட்டது.

1. ஸ்வஸ்திஶ்ரீ திரிபுவனசக்கரவர்த்திகள் கோனேரின்மை கொண்டான் ஶ்ரீதிரிபுவனவீரதெவற்கு யாண்டு 34 முப்பத்தி நாலாவது ஜெயங்கொண்ட சோழமண்டலத்து மதுராந்தக சருப்பேதிமங்கலத்து பிடாகை புக்கத்துறை விச்சாதிர விண்ணக ராழ்வார் கோயிலில் ஶ்ரீவைஷ்ணவ கண்காணி செய்வார் களுக்கு இவ்வாழ்வார்க்கு பழைதாக திருநாமத்துக்காணியும் தேவதான இறையிலியுமாய் வருகிற பிடாகை கொழி தண்டலம் நிலம் நாற்பத்தெண் வேலியும் நந்திபன்மன் நிலைப்படைக்கு ஜீவிதமாக அடைக்கயிலெ

2. பூசை தடைப்பட்டு செல்லாநின்றதென்றும் இந்நிலம் பழம்படியெ திருநாமத்துக்காணியும் தேவதான இறையிலியு மாய் நிற்கக்கடவதாக பெறவேணுமென்றும் சேதிராயன்

---

*இக்கல்வெட்டு ஆய்வில் உதவிபுரிந்த முனைவர் ப. சண்முகம், க. இராசவேலு ஆகியோருக்கு நன்றி.

நமக்குச் சொன்னமையில் இப்படிச் செய்யக் கடவுதாக சொன்னோம் இந்நிலம் பழம்படியெ திரு நாமத்துக்காணியும் தேவதான இறையிலியுமாக கைக்கொண்டு நிவந்தம் செலுத்தப் பண்ணுக எழுதினான் திருமந்திர ஓலை இராசநாராயண மூவெந்த வேளான் எழுத்து, இவை வாணாதிராசன் எழுத்து இவை விழிஞதரையன் எழுத்து, இவை அங்கராஜன் எழுத்து, இவை காடவராஜன் எழுத்து இவை தொண்டைமான் எழுத்து.

# 10. ஐஞ்சு நாட்டாரின் வாரிசுரிமைச் சட்டம்

க. கருப்பையா, சென்னை

இடம்: திருச்சி மாவட்டம், அரியலூர் வட்டம், எறகுடி.

காலம்: ஜடாவர்மன் வீரபாண்டியன் யா:25 (கி.பி. 1278)

செய்தி: ஐஞ்சு நாட்டார் தாங்கள் அனுபவித்து வரும் நிலம் முதலிய காணியுரிமைகளை ஆண் வாரிசு வழியிலேயே அனுபவிக்க வேண்டும் என்று தீர்மானித்தனர். இதே போன்ற செய்தி வாரணவாசியில் கிடைத்த ஒரு மூன்றாம் இராஜராஜ சோழனின் 22-ஆம் ஆட்சியாண்டுக் கல்வெட்டிலும் உள்ளது.

1. ஸ்வஸ்திஸ்ரீ கோச்சடையன்மர் திருபுவனச்ச
2 க்ரவத்திகள் ஸ்ரீ வீரபாண்டி தேவ
3 ற்க்கு யாண்டு 25வது ஆவணி மாதம் 5 தி
4. நாள் பழுவூர்பற்று திரணிநாட்டவரும் கண்
5 டராதித்தன் பிடாகைத் திரணி நாட்டவரும் இ
6 றைக்குடியில் பெரியநாடான ஆலடியில்
7 (டியில்) நிறைவற நிறைந்து குறைவறக்கூ
8 டி எங்களில் இசைந்து ஒருமைப் பிடிபா
9 டு பண்ணின பரிசாவது பழுவூர் பற்றினா
10 லும் கண்டராதித்தன் பிடாகையிலும் பல பற்றி
11 லும் நாங்கள் கொண்டுடைவோமாய் நா
12 ங்கள் ஆண்டு போதுகிற நிலக்காணிகளும்
13 நத்தக்காவல் காணிகளும் காப்புக்காணி
14 களும் மற்றும் எப்பேற்பட்ட உரிமைகளும்
15 எங்கள் ஆண்மக்களே இந்தக்காணி ஆள
16 .....கவும் இப்படி இசைந்து ஒரு
17 மைப்பிடிபாடு பண்ணினோம் பழுவூர்ப்பற்று ஐ
18 ஞ்சு நாட்டவரும் கண்டராதித்தன் பிடாகை ஐ
19 ஞ்சு நாட்டவரும் இவ்வனைவரோம் உ
20 இப்படிக்கு இவை சொக்கனார் எழுத்து.

---

இக்கல்வெட்டு எடுக்க உதவி புரிந்த திரு இல. தியாகராஜன் அவர்களுக்கும் வெளியிட அனுமதி வழங்கிய இந்தியத் தொல்லியல் அளவீட்டுத் துறை கல்வெட்டியல் இயக்குநர் அவர்களுக்கும் நன்றி.

# 11. சேலம், தருமபுரி மாவட்டக் கல்வெட்டுக்கள்

புது. பொ. வேங்கடராமன், புதுரெட்டியூர்

*11:1*

*இடம்:* சேலம் மாவட்டம், சங்ககிரி வட்டம், இடங்கணசாலை சௌடம்மன் கோயிலின் முன்மேடையில் உள்ள கல்வெட்டு.

*காலம்:* இராஜகேசரி வீரபாண்டியன், கி.பி. 1281

1 ஸ்வஸ்திஸ்ரீ வீரபாண்டிய தேவ
2 ற்கு யாண்டு 15 இரங்கடா
3 சானைஇல் தந்தாயார் கூத்தாடு
4 ரார் தம்மம்.

*11.2*

*இடம்:* சேலம் மாவட்டத்தில் சேலம் திருச்சி சாலையில் உள்ள பொய்மான் கரடு என்ற குன்றின் வடக்கில் உள்ள கோட்டைக் கரட்டின் உச்சியில் உள் கோட்டைக்குள் பாறையில் உள்ள உரல் போன்ற ஒரு குழியின் பக்கத்தில்.

*காலம்:* சுமார் 12-ஆம் நூ.

1 இராசு குர
2 ல் காமிண்டன் தர்மம்.

*11.3*

*இடம்:* மேற்படி குழிக்குத் தெற்கில் உள்ள யானைப்பாழி என்ற நீர்நிலைக்குத் தென்மேற்கில் உரல் போன்ற குழிகளின் அருகில்.

*காலம்:* சுமார் 12ஆம் நூ.

1 கீழ்கரைப் பூந்துறை னாட்டு
2 பெருநரில் சிறுத்தலை வேட்டு
3 வன் கோடாலி மண்ணுக்
4 குமிண்டான் தன்மம்.

*11.4*

1 இராசிபுர நாட்டில் இரா
2 சிபுரத்தில் வெள்ளாழரில்
3 சாத்தனுடையான் பெரு
4 மாள் தோமன் குன்றப் பெரு
5 மாள் தன்மம் உ.

*11.5*

1 வெள்ளப்ப னாட்டு காவ
2 ற்சேரியில் வைச். ராவ
3 ணச் செட்டி தன்மம் உ

*11.6*

இடம்: தருமபுரி மாவட்டம் அரூர் வட்டம், மொணசி மாரியம்மன் கோயிலுக்கு அருகில் பழைய கற்செக்கில் உள்ள கல்வெட்டு.

காலம்: குலோத்துங்க (?) சோழன், யா.2, சுமார் 12ஆம் நூ.

1 ஸ்வஸ்திஶ்ரீ [குல] தொங்க சொழனா
2 ற் யாண்டு இரண்டாவது
3. கண்ணந் கன்னன் மலைநா
4 ட்டு உமஞ் [சுதவா] யையார்
5 தொடுவித்தச் செக்கு

*11.7*

இடம்: தருமபுரி மாவட்டம், அரூர் வட்டம், பாபிரெட்டி பட்டிக்கும் வாணியாற்றுக்கும் தெற்கில் திரு. இராச கோபால் கவுண்டர் நிலத்தில் உள்ளது.

காலம்: 11-12 ஆம் நூற்றாண்டு.

1 ....... ..........ப
2 .......... ......... மண்டலத்
3 து கங்கனாடு தகடை நாட்டுபு
4 றமலை நாட்டு தாயல் நாட்டு
5 கீழ் கூற்றில் கல்லிபாடியான சித்தி
6 ர மேழி நல்லூர்க்கு எழுபத் தொ
7 ன்பது
8 நாட்டோம் ........ம்ச
9 மைச்சும் குடுத்தோம்
10 கண்ணந்தை கூ. தரு.

# 12. வணிகக்குழுக் கல்வெட்டு

மா. கணேசன், கோயம்புத்தூர்

இடம்: பெரியார் மாவட்டம் பெருந்துறை வட்டம் திருப்பூர் - விசயமங்கலம் சாலையில் திருப்பூரிலிருந்து 6 கி.மீ. தொலைவில் சர்க்கார் பெரியபாளையம் உள்ளது. இவ்வூரின் தொன்மைச் சின்னமான குரக்குத்தளி ஆளுடை நாயனார் திருக்கோயிலில் மகாமண்டப, அர்த்தமண்டப வடக்குச் சுவரில்.

காலம்: சுந்தரபாண்டியன் யா:4 (கி.பி 1285 - 1300)

செய்தி: சுமார் 40 அடி நீளத்தில் 24 வரிகளைக் கொண்ட இக்கல்வெட்டே கொங்கு நாட்டில் மிகப் பெரிய கல்வெட்டாகும். இது வணிகர்கள் செய்த ஒரு கொடையைப் பற்றிய கல்வெட்டாகும். இக்கல்வெட்டில் நாட்டின் பல ஊர் களிலிருந்தும் வணிகரின் பல குழுவினர் மாசி மாதத்தில் கூடி, ஏறு சாத்து இறங்கு சாத்துக்கள் பலவற்றிற்கும் பட்டணப்பகுதி எனப்பட்ட சுங்கம் விதித்து, இச்சுங்கத் தொகையை குரக்குத்தளி இறைவனுக்கு வைகாசித் திருநாள் எழுந்தருள வழங்கத் தீர்மானித் தனர். தம் இசைவைத் தெரிவித்து சுமார் 64 வணிகர்கள் கையொப்பங்கள் இட்டனர். இவர்களில் நால்வர் வட்டெழுத்தில் கையொப்பம் இட்டுள்ளது குறிப்பிடத்தக்கது.

1. ஸ்வஸ்திஸ்ரீ ஸுந்தரபாண்ட்யதேவற்கு யாண்டு 4 வது ஸ்வத்தி – ஸ்ரீ பஞ்ச சதவீர சாதந மிலக்ஷனோ லக்ஷ்மீ வக்ஷஸ்தலே ஸ்ரீ வாஸுதேவசகாய கண்டளி மூல பத்தி ரோர்பவ மென் ஸ்ரீ ஐயபொழிற்புர பரமெச்.வரிக்கும் பட்டாரகிக்கும் ஸ்ரீ பகவதிக்கும் பூமிதேவிக்கும் புத்ரராகி நிகழாநின்ற தென்தமிழ் வடகலை தெரிந்துணந்து நீதி சாத்திர நிபுணரா யிந்சொல்லா லினிதுரைத்து வன்சொல்லால் மறங்கடிந்து சமத்தா

2. ராகி பலமண்டலத்து சந்த்ராதித்தவரை தழைத் தோங்கி இந்திராதி தேவர்களிநி துரைத்து வாதராசன் காற் றசைப்ப வருணராசன் நீற்றெளிப்பத் தேவரான பதமென்னத் திருவுடனெ விளங்கா நின்ற சகலகுண சம்பந்நராகி நீதி உத்தமகுண பண்டிதர்களாச் சமையத்து வளர்கின்ற இமைய்ய பேர் மலைய் ஏழ்கடலளவையுடுத்த எடுத்தாமிலெண் டிசையு முள்ள தலம்புக மந்தனயாளா

*3. நாவலன் தீவென்னு நன்னாடர் பொன்னிம் பூம்புகார் திருவாரூர் புகழ்படலம் கொடுங்கோளூர் நாம் புகழும் திருப்படமும் எழில்பாச்சில் பட்ட...யர் மற்றுமென் பட்ட பதியனைத்தும் விருப்புடன் விளங்குவித்தோர் பின்னிரண்டு மொழியாத பன்னிரண்டு நகரமிவை பழசாகப் படையோர் கொங்கிலொன்பது மாநகரங்கள் குடி கொண்டங்கி நிதுரைத்து தேவர் பதி தட்டோங்கு மாட வீதிப் பதிநெட்டு*

*4. பட்டணமும் முப்பத்திரெண்டு வேளா புரமு மறுபத்தி னான்கு கடிகைத் தாவளமுந் தாவளத்திலிருந்து தன்மை வளர்க்கும் செட்டி யுஞ் செட்டி வீரபுத்திரர்களும் மலைமண்டலத்து பலநகரங்களும் நான்குதிசைப் பதினெண் விஷயத்தோமும் பதினெண் விஷயம் பெருநிரவியாரோமுந் திசையாயிர தஞ்ஞாற்றுவரோமும் அஞ்ஞாற்றுவன் பெருநிரவியாரோமும் எங்குள்ள நாட்டுச் செட்டித்தளம் செட்டிகள்*

*5. நம் மக்கள் அறுபத்து நான்கு முனையும் முனை வீரக் கொடியா ரோமும் செங்கோலெ முன்னாகவும் செம் பொற் பசும்பையே தெய்வமாகவுஞ் சித்திர மேழியேடுணை யாகவும் கீழ்ப்பால் ஐந்நூற்றுவன் பெருங்காவில் குறை வறக்கூடி நிறைவற நிறைந்து இசையப் பேசி எம்மிலிசைந்து அமையச் செய்த சமைய தன்ம காரியமாவது மாசிமாதம் முதல் வீரசோழ வளநாட்டு முகுந்தனூர் ஆளுடையார் திருக்குரக்குத் தளி ஆளுடையனாயிநாற்*

*6. கு வைகாசித் திருநாள் எழுந்தருளிவிப்பதாக பட்டிணப் பகுதி கட்டிக் குடுத்த பரிசாவது: நான்குதிசை யேறுசாத்து இறங்கு சாத்து நடக்கும் சரக்குக்களுக்கு மிக பொதி ஒன்றுக்குப் பணம் ஒருமாவும் புடவைக் கட்டு ஒன்றுக்கும் பணம் இரண்டுமாவும் நூல்பொதி ஒன்றுக்குப் பணம் இரண்டுமாவும் பாக்கு பொதி ஒன்றுக்கு பணமரைமாவும் பசும்பையொன்றுக் குப் பணமரைமாவும் கழுதை மேல் வரும் பண்டங்*

*7. களுக்கு...ற்ப்...யளக்குங் கருஞ்சரக்குக்களுக்கு பணமரை மாவும் தாந்யங்களுக்குப் பணங் காணியு மிறுக்கும் பண்டங் களுக்கு பணம் ஒருமாவும் ஆனைக்குப் பணம் ஒன்றும் குதிரைக்குப் பணமரையுஞ் சந்தனக்கட்டுக்கு பணங்காலும் விடுபுடவை சமக்கட்டுக்களுக்கு பணங்காலும் சேக்கள் கிடாக்களுக்கு பணமொருமாவும் மற்றும் நடக்கும் பண்டங் களுக்கு விழுக்காடும் மாறும் மென்வகைச் சுங்கம் தீரும் பண்டங்களுக்கு ஒன்*

8. றுக்கு ..ழியாமல் தீரக்கடவதாகவும் இப்படிக்கு வைராகிகளும் சமையக் கணக்கனும் பலவட்டைகளிலும் தண்டிப்புகுந்த முதல்கொண்டு ஒருகுறையற திருநாள் எழுந்தருளுவிக்கவும் திருநாள் எழுந்தருளுவிக்கும் போது முதலியாரும் தேவர்கன்மிகளும் நாவியாற்கு சண்டேசுவர நாயினார் திருமுகம் வைராகிகள் கைய்யிலெ வரவிட... ..யந்தாம் இடவகையும் காட்டி இவைகளுக்கும் கடுவதெம் ..ச்ச..கும் ந..முனை..றுக்குமளவும் நாள்தொறும்

9. நாநாழியளப்பதாவும் திருமுன்னொடுக்கிய திருநீற்று சிபண்டாரமும் கறிபுளி வெஞ்சனங்களும் பண்டாரத்திலெ புறப்படக்கடவதாகவும் இப்படிக்கு இசைந்து சமைந்து இக்கைச்செடிக் குச்சமிருத்திக் குடுத்தொம் ஆளுடைய நாயினார் குரக்குத்தளி ஆளுடைய நாயினாற்கு உ. இப்படிக்கு இது பன்மாஹெச்வரஷை. இப்படிக்கு பதினெண் விஷயப் பெருநிரவியாரில் சுதந்தரப் பெருமாள் எழுந்து, இப்படிக்கு ஆட்கொண்ட நாயகர் எழுத்து இப்படி

10. க்கு பிள்ளை நாட்டு செட்டி எழுத்து இப்படிக்கு ஏராளபுரத்து வியாபாரி கூத்தன்கண்ண. எழுத்து இப்படிக்கு உறையூர் உடையான் பெரியய்ய தேவன் எழுத்து இப்படிக்கு ஏராளபுரத்து அல்லூர் உடையான் கயிலாயனான வணிகை மாதா எழுத்து இப்படிக்கு அருவியூரான கலசைப்பாடி உடையான் திருவீராடிகரமுடையான் காளை பெருமாள் எழுத்து. இப்படி

11. க்கு நாவலூர் உடையர் திருநிலை அழகியான் அதிரைவீசாடுவான் எழுத்து. இப்படிக்கு திருமலைநாட்டு வாரணவாசிப் பெருந்தெருவில் சொனாபயனபுரத்து பெரு மங்கலமுடையான் உலகன்உய்யவந்தான் சேரமான் தோழன் எழுத்து இப்படிக்கு திருவாலூர் இவணங்குடையான் தொண்டகநாயன் பெரிய்யநாயன் எழுத்து. இப்படிக்கு வணிகைராதித்தன் எழுத்து. இ

12. ப்படிக்கு திருவாலூர் வியாபாரி கடுவங்குடையான் திரு அண்ணா மலைப்பெருமான் எழுத்து. இப்படிக்கு பாண்டிமண்டலத்து சுந்தரபாண்டியபுரத்து சிரியப்பிள்ளை எழுத்து. இப்படிக்கு வெள்ளூர்ரான கோதண்டராமபுரத்து பால்வாய் உடையான் சொக்கனார் எழுத்து. இப்படிக்கு மீமலை இராசேந்திரசோழப் பெருந்தெருவில் அவையா உடையான் மாதுயரந் தீத்தான் சுந்தையன் எழு

13. த்து. இப்படிக்கு ஜயங்கொண்ட சோழபுர முதலிகைப் பள்ளி யுடையான் நீராலமுடையான் பொசிவாசி கொண்டான் எழுத்து. இப்படிக்கு விக்கிரமசோழபுரத்து மாத்தூர்

உடையான் பஞ்ச நெதிவாணன் எழுத்து இப்படிக்குப் பாண்டிநாட்டு சுந்தர பாண்டிபுரத்து திருஞானசம்பந்தன் எழுத்து இப்படிக்கு பாண்டிமண்டலத்து சீகல்லபுர நாட்டு குலசேகரபுரத்துபேர்

14. இலத்துடையான் சிகயிலாமுடையான் அந்தியும் பகலும் ஆடுவான் எழுத்து இப்படிக்கு ஏராளபுரத்து வியாபாரி மாணிக்கன் புந்தியில் உறைவான் எழுத்து. இப்படிக்கு குலவாய் நாட்டு சுந்தரபாண்டியபுரத்து மங்கல முடையான் ஓதாதுணர்ந்தான் எழுத்து இப்படிக்கு பாண்டி மண்டலத்து நகரம் தெலிங்க குலகாலபுரமான குலோத்துங்க சோழ பட்டணத்து வெளியாற்றூர் உடையான் உத்தமாண்டான் சொக்கனார் எழுத்து இப்படிக்கு பாண்டி மண்டலத்து

15. நகரம் தெலிங்ககுலகாலபுரமான குலோத்துங்க சோழபுரத்து பாம்பையன் உடையான் அருள்பெற்ற நம்பியான ஆடும் பெருமான் எழுத்து இப்படிக்கு கொடும்பாளூர் மணிக்கிராமத்து வெண்ணை சொக்கனான அழகிய்ய சொக்கன் எழுத்து இப்படிக்கு இராசேந்தர சோழபுரத்து உடையான் பொன்னப்பிள்ளை எழுத்து இப்படிக்கு கொடும் பாளூர் மணிக்கிராமத்து தனபாலன் திரு.. உடையார் எழுத்து இப்படிக்கு பாண்டி

16. மண்டலத்து நெடுபரமுடையான் சொக்கனார் எழுத்து இப்படிக்கு பாண்டி மண்டலத்து சுந்தரபாண்டிய புரத்து உய்யக் கொண்டான் பெரிய்ய நாயன் எழுத்து இப்படிக்கு தொண்டைத்துமானார் இராசகோபுரத்து வல்லியூர் உடையான் கூத்தன் உலகுதொழநின்றான் எழுத்து இப்படிக்கு கூத்தன் உடையான் பிள்ளை திருவானன் ஆன திருஞான சம்பந்தன் எழுத்து ...*

17. இப்படிக்கு தாமரைப்பூண்டி உடையாந் சூரியனாத சம்பந்தப் பெருமாள் எழுத்து ...* இப்படிக்கு கங்கை கொண்ட சோழபுரத்து கொளம்பாக்கமுடையான் செநகயன் எழுத்து...* இப்படிக்கு கருவூருடையான் வஞ்சிமாநகர் திருக்காளத்தி உடையான் எழுத்து இப்படிக்கு பதிநெண்

18. விஷெயத்தாரில் உடையாந் திருவானைக்காவுடையாந் எழுத்து இப்படிக்கு கட்டியகையந் எழுத்து. இப்படிக்கு அம்பலத்தாடுவார் எழுத்து. இப்படிக்கு கருப்பூர் உடையாந் இளையாந் அம்பலத் தாடுவான் எழுத்து. இப்படிக்கு இராசராச

---

*இங்கு வட்டெழுத்தில் கையொப்பமிட்டுள்ளார். பெயர்கள் தெளிவாக இல்லை.

வளநாட்டு இராசேந்திர சோழப் பெருந்தெருவில் அரசுருடை யான் அடிகள் சமையப் சக்கரவத்தி நீல

19. கண்டன் எழுத்து இப்படிக்கு பாண்டிமண்டலத்து ஐபொழில் விக்கிரம சோழபுரத்து வேண்டவளந்தாந் எழுத்து. இப்படிக்கு நீற்பழநியுடையான் அடிகள் ஆழ்வாந் பெருங்கருணைப் பெருமாள் எழுத்து இப்படிக்கு திரிபுவன மாதேவி யுடையான் பெரியான் எழுத்து இப்படிக்கு பாண்டி மண்டலத்து கொடும்பாளூர் தம்பிராந் தோழன் எழுத்து எறிபட நல்லூர் வடபர்டியில் சேந்தமங்கலமுடை

20. யான் சிய்யன் சுந்தரப் பெருமாள் எழுத்து இப்படிக்கு சுந்தரசேகரபுரமான தேசிஉகந்த பட்டணத்து மருதநாத புரமுடையான் சுந்திதேவப் பெருமாள் ஆன திருவிடையான் எழுத்து இப்படிக்கு வெள்ளூர் உடையான் பெரிய்யான் சொக்கனார் எழுத்து இப்படிக்கு அஞ்ஞூற்றுவன் பெருநிர யார் மணிய்ய சக்கரவத்தி எழுத்து இப்படிக்கு வடக்கி லூரான வீரபாண்டியபுரத்து வியாபாரி சேந்தன் சேந்தநாத அ

21. மரகோன் எழுத்து இப்படிக்கு உடைய நாயகர் எழுத்து. இப்படிக்கு சுதாபுரத்து கோட்டைக் கரைஉடையான் வண்ணக சூரியன் சக்கரவத்தி அழகியான் எழுத்து. இப்படிக்கு பாண்டி மண்டலத்து தேசிரவண முடையான் எழுத்து தனசந் எழுத்து. இப்படிக்கு ...மண்டலத்து கொடும் பாளூர் சேரமான் தோழன் எழுத்து. இப்படி

22. க்கு கொடும்பாளூர் எழுத்து இப்படிக்கு கொடும்பாளூர் மணிக்கிராமத்து வியாபாரி ஆண்டக்கன் சொக்கனார் எழுத்து இப்படிக்கு பாண்டிமண்டலத்து கீழ் குண்டாற்று வீரநாராயணபுரத்து திரு..உடையான் அரங்குள...பெருமாள் எழுத்து இப்படிக்கு ...ழாப்பள்ளி யுடையான் கயிலை

23. ப்பெருமாள் மலைப்பெருமாள் எழுத்து. இப்படிக்கு நீர்ப் பழனி உடையான் அரசன் மணியனான மாறி ஆடுவான் எழுத்து. இப்படிக்கு பாண்டிமண்டலத்து இராசநாராயண புரத்து திருவெள்பூர் உடையான் தேவன் திரு.... வானமாமலை உடையான் எழுத்து. இப்படிக்கு கண்ணனூருடை

24. யான் பெரியான் அமரகோன் எழுத்து. இப்படிக்கு சமைய மந்திரி கைய்மாட்டாமையினால் கைமாட்டெறிந்தேன் அமர கோனேன் இப்படிக்கு சாங்கியம் கிழையான் அறப்பித்தந் திருஅண்ணாமலை உடையானான சூரியன் எழுத்து இப்படிக்கு களத்தூர் கிழவன் இம்மைய் திருவான் கள.... ப் பிள்ளை எழுத்து இப்படிக்கு கண்ணார் அமுதன் கூத்தன் தேவன் எழுத்து இப்படிக்கு புழங்குடையான் சந்திரன் அழகியபாதன் எழுத்து

# 13. திருக்கோகர்ணம் கோயில் கல்வெட்டு

அ. சந்திரபோஸ், கொத்தமங்கலம்

இடம்: திருக்கோகர்ணம் கோயிலில் அமைந்துள்ள மங்கள நாயகி அம்மன் கருவறையின் அதிட்டானத்தில் உள்ளது.

காலம்: சுமார் கி.பி. 13ஆம் நூற்றாண்டு.

1. ஸ்வஸ்திஸ்ரீ திருமுகப்படி அருளிச்செயல் கவினாட்டு னாட்டார்க்கு தங்கள் னாட்டு உடையார் திருக்கோகர்ண முடையார் கோயில் சிவபிராமணரில் காச்யப சந்திரசேகரன் திருக்கோ கர்ணமுடையானான கவினாட்டுப் பட்டனுக்கு இன்னாட்டு திருவெட்பூர் பற்றில் திருப்பூமிசுவரமுடையார்

2. திருமடை விளாகத்துக்கும் இதன் வடக்குச் செம்பன் துடவைக்கு மேற்கும் இன்னாயனார் தேவதானத்துக்கு வடக்கும் கல்லாற்றுப் பள்ளிச்சந்தப் பற்றுக்கு கிழக்கும் ஆற்றுவாக்காலுக்குத் தெற்கும் ஆக இவ்வெல்லைக்குள் பட்ட நிலம் நாலுமா முன்

3. திரிகையும் இவ்வாற்று வாக்காலுக்குத் தரங்க முக்காலி தடி ஒன்று நிலம் காணி அரைக்காணி ஆக... டமை இ...ம் கோலால் நிலம் நாந் மாவரையில் முந்பு இவனுக்கு தந்மதான இறையிலியாகக் குடுத்த நிலம் மூன்று மாவும் உட்பட ஆ

4. க நிலம் னாந்மாவரைக்கும் க...................... பதினொான் றாவதிநெதிரா மாண்டு முதல் இவனுக்கு தந்மதாந இறையிலியாக இ....தாக குடுத்தோம் இவ்வாண்டு முதல் கைக்கொண்டு அனுபவிக்கப் பண்ணி இப்படி கல்லிலும் வெட்டிக் கொள்ளப் பண்ணுவதாக இப்படிக்கு சேர பாண்டியதேவற்கு நம்மோலை

5. சொன்னோம். இவை குருகுலராயன் எழுத்து. இவை அவநி நாராயண விழுப்பரையன் எழுத்து. இவை மாநாபரண மூவேந்தரவேளாந் எழுத்து, இவை வாந... விழுப்பரையன் எழுத்து. எதிரிடை இட்டது துல்யம்.

# 14. சிறுவாச்சி மாரியம்மன் கோயில் கல்வெட்டு

அ. சந்திரபோஸ், கொத்தமங்கலம்

இடம்: தேவர் திருமகனார் மாவட்டம், தேவகோட்டை வட்டம், சிறுவாச்சி முத்துமாரியம்மன் கோயிலில் கீழவாசலில் நிலைத்தூணில்*.

காலம்: எழுத்தமைதியில் 13-ஆம் நூற்றாண்டு.

செய்தி: செம்பியன் பல்லவதரையன் என்பவன் இக்கோயிலுக்கு இக்கல்வெட்டு உள்ள திருநிலைக்காலை தன்மமாகக் கொடுத்தது.

1. ஸ்வஸ்திஸ்ரீ
2. புதுக்குடை
3. யான் அரை
4. யன் தெழ
5. ன் ஆன செ
6. ம்பியன்
7. பல்லவத
8. ரையன் த
9. ன்மம் இத்
10. திரு நிலை
11. கால்

---

* இக்கல்வெட்டு படிக்க உதவிய எஸ். இராமசந்திரன் (தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத்துறை), கரு. இராசேந்திரன் ஆகியோருக்கு நன்றி.

# 15. ஏகம்பரநாத சம்புவராயரின் வண்ணாங்குளம் கல்வெட்டு

மா. கலைவாணன், ஆர்க்காடு
ப. வெங்கடேசன், காவேரிப்பாக்கம்

இடம்: திருவண்ணாமலை சம்புவராயர் மாவட்டம், ஆரணி வட்டம், வண்ணாங்குளம் என்னும் ஊரிலுள்ள அம்மையப்ப நாயனார் கோயில் கருவறையின் தென்புறச் சுவரில்.

காலம்: ஏகம்பரநாத குலசேகர சம்புவராயர். யா:18 (கி.பி. 1324)

செய்தி: அரசன் 2 வேலி நிலம் கோயிலுக்கு இறையிலி தேவதானம் செய்தமை.

1. ஸ்வஸ்திஸ்ரீ ஏகம்பரநாதன்
2. சம்புவராயர்க்கு யாண்டு
3. பதினெட்டாவது இராசகெம்பீ
4. ரன் மலைக்கு அடைந்த பற்று
5. வென்றுமண்கொண்ட நல்லூர்
6. எல்லையில் பிரிந்த அம்மையப்ப
7. ன் திருத்துக் கடமை, கார்த்திகைக்
8. காணிக்கை, வாசல் விநியோகம், சந்து வி
9. க்ரகம், நாட்டுவரி, மகண்மை, வாசல்.
10. அம்மையப்பனாய னார்க்கு கலிங்கில் நீர்
11. பாயும் நிலத்திலே தேவதானமாக இரண்டு
12. வேலி நிலம் இறையிலி ஆகவும் இந்நிலத்
13. தில் பூஜைப் பாதி பத்தில் அஞ்சு கொண்டு அமு
14. து படியும் நடத்தி நீக்கிப் பத்தில் அஞ்சா
15. ல் உள்ள முதல் கொண்டு திருப்பணி செய்யும்
16. படியும் சொன்னோம் இப்படிக்கு கல்லிலும்
17. செம்பிலும் வெட்டிக் கொள்வதே.

# 16. திருச்சிராப்பள்ளியில் ஒரு தூண் கல்வெட்டு

சி. ஸ்ரீதரன், திருச்சி

**இடம்:** திருச்சிராப்பள்ளி தூய யோவான் வெஸ்ட்ரி ஆங்கிலோ இந்தியன் மேனிலைப்பள்ளி வளாகத்தில் பாழடைந்த கிணறு ஒன்றில் பராமரிப்புப் பணி செய்யும்பொழுது கல்வெட்டுப் பொறிக்கப்பட்ட தூண் கண்டுபிடிக்கப்பட்டது*.

**காலம்:** கி.பி. 12ஆம் நூற்றாண்டு.

**செய்தி:** வேளூர் கிழவன் காறை கற்பகம் என்பவர் ஒரு மண்டபம் கட்டிய செய்தி. இதில் குறிப்பிடப்படும் வண்டாழைவேளூர் கூற்றம் திருத்துறைப்பூண்டி வட்டப் பகுதியில் இருந்தது.

1 ஸ்வஸ்திஸ்ரீ இத் திருமண்ட
2 பஞ் செய்வித்தாந் ராசே
3 ந்திர சோழவளநாட்டு வண்
4 டாழை வேளூர் கூற்றத்து
5 வேளூர் கிழவன் நாரநநா
6 ந காறை கற்பகம்.



வரைபடம் - 5

* இதனைப் படிக்க உதவிய அப்பள்ளியின் ஆசிரியர் புலவர் ஆ. சுப்பிரமணியன் மற்றும் இராஜமோகன் (அரசு அருங்காட்சியகம், திருச்சி), சா. நடராசன், இராசேந்திரன் (பதிவு அலுவலகம், திருச்சி) ஆகியோருக்கு நன்றி.

# 17. ஆலம்பட்டி சொக்கலிங்கபுரம் சேதுபதி கல்வெட்டு

சீ. இலட்சுமணன், தமிழூர்

**இடம்:** மதுரை மாவட்டம், மேலூர்வட்டம் ஆலம்பட்டி சொக்கலிங்கபுரம் அருகே தனியார் தோப்பிலிருந்த தனிக்கல்.

**காலம்:** இரகுநாத திருமலை சேதுபதி, கிபி. 1669.

1 ஸ்வஸ்திஶ்ரீ
2 மன் சகாத்த
3 ம் [1591]
4 இதன்மேல்ச்
5 செல்லாநின்ற
6 சவுமிய வருஷம் காத்தி
7 கை மீ உ சோம
8 வாரமுந் திதிகை
9 பூராட கப
10 யோககபதி
11 னம் பெற்றனா
12 ளில் ஶ்ரீமது தி
13 ருமலைச்சேதுப
14 திகாத்ததேவ
15 ர் அவர்கள் கூ
16 றி சாத்தாசிங்
17 கண்புணரிச்சே
18 சவுகப் பெருமா
19 ள் கவாமிக்கு த
20 ம்ளவளியார்
21 ஆலம்பட்டு
22 சூழ்ந்தபுரவு
23 சந்திராத்த
24 துவரைக்கு
25 சறுவமானி
26 பமாகக்கட்ட
27 வளிவிட்டொ
28 ம் இந்தத் தன்ம
29 த்துக்கு யாது
30 ஒருமாருவா
31 அகுதம்பண்
32 ணினவர்க
33 ள் கெங்கை
34 கரையில்
35 காராம்பசுவை
36 க் கொன்
37 ற தோசத்திலே
38 போவானாகவு
39 ம் இது அன்
40 னியிலே பொ..கா
41 ய வுடப்பிறந்
42 தாவரை அனஉ
43 போகம் பண்
44 ணினவனாக
45 வும் கத்தர்க
46 ரெ சொல்யைப்
47 படிக்கு உடைய
48 நயினார்

# 18. திருமயத்தில் நாட்டுக்கோட்டைச் செட்டியார் கல்வெட்டுக்கள்

நா. வள்ளி. காரைக்குடி

18.1

இடம்: புதுக்கோட்டை மாவட்டம் திருமயத்தில் சிவனுக்கும் திருமாலுக்கும் எடுக்கப்பட்ட பழமையான இரண்டு குடைவரைக் கோயில்களை அடுத்துள்ள குளத்தில் நான்கு கல்வெட்டுக்கள் உள்ளன. இவை முறையே வடக்குப் படித்துறை, தெற்குப் படித்துறை, ஆளோடிப் பாதை, பதினாறுகால் மண்டபத் தூண் ஆகியவற்றில் உள்ளன.

காலம்: 19-ஆம் நூற்றாண்டு

செய்தி: மேற்கூறிய இரண்டு குடவரைக் கோயில்களுக்கும் இடையில் பிணக்குகள் இருந்ததால் 13-ஆம் நூற்றாண்டில் இரண்டும் தனித்தனியாக சிவனுக்கும், திருமாலுக்கும் என பிரிக்கப்பட்டபோது கோயில் குளங்களும் தனித்தனியாக முறையே சத்தியகிரீசுவரர் குளம், சத்தியமூர்த்திப் பெருமாள்குளம் எனப்பிரிக்கப்பட்டதாகக் கருதப்படுகிறது. இவற்றில் சத்தியமூர்த்திப் பெருமாள் குளம் 19-ஆம் நூற்றாண்டில் காரைக்குடி நாட்டுக் கோட்டைச் செட்டியார் மரபினரால் திருப்பணி செய்யப்பட்ட செய்தியை இக் கல்வெட்டுகள் கூறுகின்றன நான்காம் கல்வெட்டின் கீழ் திருப்பணி செய்தவரின் உருவச்சிலை உள்ளது.

*1 காலயுத்தி ஞு தை மீ 12 தேதி காறக்குடியிலிருக்கும் கல்வா*

*2 ச நாட்டில் இளையாத்தக்குடியான குலசேகரதபுரத்தில் யிரணியூர்*

*3 மருதங்குடியான ராசநாராயணபுரத்தில் பிள்ளையார் பட்டியான*

*4 திருவேன்பூருடையான மெ. முருகப்ப செட்டியார் குமாரன்*

*5 ராமநாதன் செட்டியார் சத்திய புஷ்கரிணித் தருமமும் வய்யா*

*6 சி மீ விசாக பூர்ணமை முதலான விசேஷங்களில் பெருமாள்*

7 தீர்த்தம் பிரசாதிக்க 16 காலில் திற்த்த மண்டப தர்மமு முடித்தார்.

18:2

1 காலயுத்தி ஹ்வ தை மீ 12 தேதி மதுரை ஜில்லா சிவகெங்கைச் சீமை சாக்கைத் தாலுகா

2 காறக்குடியிலிருக்கும் நாட்டுக்கோட்டையாரில் கல் வாசல் நாட்டில் இளையாத்த

3 க் குடியான குலசேகரபுரத்தில் யிரணியூர் மருதங்குடியான ராச நாராயண

4 புரத்தில்ப் பிள்ளையார்பட்டி திருவேள்பூருடையான் மெ. முருகப்ப செட்டியார்

5 குமாரன் ராமனாதன் செட்டியார் சத்திய புஷ்கறணித் தருமமும் வடக்குப்

6 படித்துறைக்கி நேர்த் தீற்த்த மண்டப தற்மமுஞ் செய்து முடித்தார்.

18:3

எண்பட்டை வடிவிலான இக்குளத்தின் கரைகளில் ஒவ்வொரு திருப்பத்திலும் உள்ள சிற்பங்களின் கீழ் உள்ள கல்வெட்டுகள்.

1. ஆஞ்சநேய மூர்த்தி
2. ஆதிசேஷ பகவான்
3. சந்திர பகவான்
4. ஸத்திய மகரிஷி
5. புருரவ சக்கிறவற்த்தி
6. கமல நயந ராசா
7. இந்திரத்துயமந பாண்டியன்
8. கருட பகவான்.

18:4

தூணில் உள்ள உருவச்சிலையின் கீழுள்ள கல்வெட்டு

1. காறக்குடி
2. மெ. முருகப்
3. ப செட்டியா
4. ற் குமாரன்
5. ராமநாதன்
6. செட்டியாற்.

# 19. சங்கரதாசு சுவாமிகள் உரிமைப்பதிவுப் பத்திரம்

*ம.சா. அறிவுடைநம்பி, தஞ்சாவூர்*

**இடம்:** பழ. நெடுமாறன், 48 மேலமாசி வீதி, மதுரை - 1.
இதன் நகல் தமிழ்ப் பல்கலைக்கழக அரிய கையெழுத்துச் சுவடித் துறையில் உள்ளது.

**காலம்:** 09 .11 .1925

**அமைப்பும் செய்தியும்**

இக்காகித ஆவணங்கள் நாடக ஆசிரியர் தவத்திரு டிடிசங்கரதாசு சுவாமிகள் எழுதிய ஒன்பது நாடகங்களை வெளியிடுவதற்காக ரூ. 250 பெற்றுக் கொண்டு உரிமை செய்து கொடுத்த கிரையப் பத்திரங்களாகும். சென்னையிலுள்ள பிநா. சிதம்பர முதலியார் சகோதரர்களுக்காக அவர்களின் விற்பனை உரிமம் பெற்றவராகிய மதுரையிலிருக்கும் மு. கிருட்டிணபிள்ளை அவர்களுக்கு டிடி. சங்கரதாசு சுவாமிகளின் தமையனார் டிடி மாடசாமி கணக்கப்பிள்ளை என்பவர் இப் பத்திரத்தை எழுதிக் கொடுத்துள்ளார்.

ரூபாய் மூன்று கொண்ட பத்திரத்தின் (34.4 x 21 செ.மீ.) முதல் பக்கத்தில் 21 வரிகள் உள்ளன. இறுதியில் 'இதில் 15வது வரியில் அ. அடித்தல்' என்ற குறிப்பு உள்ளது. தா. மாடசாமி கணக்கப் பிள்ளை கையொப்பமும் உள்ளது. இதன் பின்பக்கத்தில் எண், பத்திரத்தின் மதிப்பு, பெயர், ஊர், நாள், முத்திரை,கையொப்பம், 16 செப்டம்பர் 1925 என்ற குறிப்புகள் காணப்படுகின்றன.

பன்னிரண்டணாக் கொண்ட பத்திரத்தின் (31.5 x 21 செ.மீ.) முதல் பக்கத்தில் 3 வரிகளும் நாடக நூல்களின் பட்டியலும், தா.மாடசாமி கணக்கபிள்ளை கையொப்பமும், சாட்சிகளின் கையொப்பமும் காணப்படுகின்றன. பின்பக்கத்தில் எண், பத்திரத்தின் மதிப்பு, பெயர், ஊர், நாள், முத்திரை, கையொப்பம் உள்ளன.

**(முதல் பக்கம்)**

1. 1925 வருஷம் நவம்பர் மாதம் 9 தேதி மதுரை புதுமண்டபம் புஸ்தக ஷாப் சென்னை

2. பி.நா. சிதம்பர முதலியார் பிரதர்ஸ்காக மேற்படி யார் ஏஜெண்டு மதுரை மேலமாசி

*3. வீதியிலிருக்கும் முத்தப்பிள்ளை குமாரர் மு. கிருஷ்ண பிள்ளை யவர்களுக்கு தூத்துக்கு*

*4. டி காளியப்பபிள்ளை தெருவிலிருக்கும் தாமோதரங் கணக்கபிள்ளை குமாரர் மாடசாமி*

*5. கணக்கபிள்ளை தற்காலம் மதுரரையிலிருந்து எழுதிக் கொடுத்த புஸ்தக அ*

*6. மைப்பு காப்பிரைட்டு கிரையப் பத்திரம் என்ன வென்றால் எனக்குப்*

*7. பாத்தியமானதும் என் தமையனார் காலஞ்சென்ற நாடக ஆசிரி*

*8. யர் டிடி சங்கரதாஸ் சுவாமி அவர்களால் இயற்றப்பெற்ற*

*9. தும் தாங்கள் இதற்குமுன் அச்சிட்டும் இனி அச்சிடப் போவ*

*10. துமாகிய அடியிற்கண்ட (9) ஒன்பது டிராமா சரித்திர பாட*

*11. ங்களை தங்களுக்கு மேற்படி தேதியில் சுத்தகிறயஞ் செய்து கொடுத்து உட*

*12. ன் தொகை பெற்றுக் கொண்டது ரூ 250.00 இந்த ரூபாய் இருநூற்று*

*13. அன்பதும் நான் றொக்கம் பெற்றுக் கொண்டபடியால் மேற்படி (9)*

*14. டிராமா சரித்திர பாடங்களை தாங்களே என்றென் றைக்கும்*

*15. பரம்பரையாக அச்சிட்டு புஸ்தக ரூபமாக்கி காப்பிரைட்டு*

*16. செய்து விற்பனை செய்து வரும் பாத்தியதையும் மற்றும் வேறு*

*17. யாராவது புஸ்தகங்களை அச்சிட்டால் அதனால் ஏற்படும்*

*18. சகல நஷ்டங்களையும் தாங்களே வசூலிக்கும் சகல பாத்தியதை*

*19. யும் தங்களுக்கு இதன் மூலம் கொடுத்துவிட்டபடியால் இனி*

*20. அவைகளைப் பற்றி யாதொரு பாத்தியமும் பின் துயர்ச்சியும்*

*21. எனக்குக் கிடையாது இதற்குமுன் வேறு யாருக்காவது*

*இதில் 15வது வரியில் அ. அடித்தல்*

*தா. மாடசாமி கணக்கபிள்ளை சுகிர்த லிகிதம்*

(மூன்றாவது பக்கம்)

22. மேற்படி சரித்திர பாடங்களை அச்சிடும்படி நான் அனுமதி கொடுக்கவி

23. ல்லையென்று உறுதி சொல்லி இந்த தஸ்தாவேசு எழுதி கொடுத்திருக்

24. கிறேன்.

டிராமா சரித்திர விபரம்

1வது சத்தியவான் சாவித்திரி

2 கோவலன்

3 அல்லி

4 பவளக்கொடி

5 ஞான சவுந்தரி

6 சாரங்கதரன்

7 வள்ளி திருமணம்

8 நல்லதங்காள்

9 மயான காண்டம்

ஆக சரித்திரம் ஒன்பது மட்டும்

தா. மாடசாமி கணக்கபிள்ளை சுகிர்த லிகிதம்

சாக்ஷி. குமரவேலுப்பிள்ளை குமாரன் மாயாண்டிப் பிள்ளை. மதுரை.

சாக்ஷி. வா. சங்கிலிமலி மகனார் குமாரர் முத்திருளசாமி பிள்ளை. மதுரை.

சாக்ஷி. பி. குருநாத முதலியார்

சாக்ஷி. மு. திருமலை முத்துசாமி பிள்ளை. மதுரை.

(இரண்டாம் பக்கம்) 5708 நீ மூணு ரூபாய் மாடசாமி கணக்கப் பிள்ளை தூத்துக்குடி 1925 வருஷம் நவம்பர் மாதம் 9 தேதி (கையொப்பம்) மதுரை டவுண் வெண்டர் முத்திரை Stamp Department, Madurai. 16 Sep. 1925.

(நான்காம் பக்கம்) 5709 நீ பனிரெண்டணா மாடசாமி கணக்கப்பிள்ளை தூத்துக்குடி 1925 வருஷம் நவம்பர் மாதம் 9 தேதி (கையொப்பம்) மதுரை டவுண் வெண்டர் முத்திரை.

# 20. பல்லவர் காலக் காசுகளும், முத்திரைகளும்

*ஆறுமுக சீதாராமன், தஞ்சாவூர்*

### *20.1 முதலாம் மகேந்திரவர்மன் காசு*

முதலாம் மகேந்திரவர்மனின் (கி.பி. 600-630) வெள்ளிக்காசு ஒன்று திருச்சியில் அண்மையில் கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. இரண்டு கிராம் எடையுள்ள இக்காசின் முன்பக்கத்தில் நிற்கும் காளையின் மேல் நைஹிகாமுத்ரிக என்று தமிழ் - கிரந்த எழுத்துக்களில் வடமொழியில் பொறிக்கப்பட்டுள்ளது. காசின் பின்பக்கத்திலுள்ள வட்டத்திற்குள் செங்குத்தான நிலையில் சக்கரம் ஒன்று பூவிதழ்களால் அலங்கரிக்கப்பட்டுள்ளது.



**ஒளிப்படம் - 8**

திருச்சி மலைக்கோட்டை மற்றும் பல்லாவரம் குடைவரைக் கோயில்களில் உள்ள பல்லவர்களது கல்வெட்டுக்கள் நைஹிகா முத்ரிக என்று முதலாம் மகேந்திரவர்மனின் விருதுப்பெயரைத் தருகின்றன. நைஹிகாமுத்ரிக என்ற வடமொழிச் சொல்லுக்கு 'சிற்றின்ப ஆசை இல்லாதவன்' என்று பொருள். குடைவரையில் உள்ள எழுத்துக்கள் பல்லவ கிரந்த எழுத்துக்களிலேயே எழுதப்பட்டுள்ளன. ஆனால் காசில் தமிழ், கிரந்தம் இரண்டும் கலந்து எழுதப்பட்டுள்ளது. பல்லவர் கால எழுத்துக்களை ஆய்வுசெய்ய இந்தக்காசு மிகவும் பயன்படும்.

## 20:2 இரண்டாம் நரசிம்மவர்மன் (இராஜ சிம்மன்) காசுகள்

இராஜசிம்மனின் (கி.பி.695-722) இரண்டு வெள்ளிக்காசுகள் கரூரில் கிடைத்துள்ளன. 1.6 கிராம் எடையுள்ள இக்காசுகளின்



ஒளிப்படங்கள் - 9 & 10

முன்பக்கத்தில் காளை உருவமும் ஒரு காசில் காளைக்குமேல் ஸ்ரீதர (Sridara) என்றும், இரண்டாவதில் ஸ்ரீதர (Sritara) என்றும் பல்லவ கிரந்தத்தில் பொறிக்கப்பட்டுள்ளது. பின்பக்கத்தில் இரண்டு மீன்கள் காணப்படுகின்றன. திருக்கோவிலூர், காஞ்சிபுரம், கரூர் போன்ற இடங்களில் இரண்டாம் வகைக் காசுகள் அதிகமாக கிடைக்கின்றன. இக்காசுகள் அளவிலும் எடையிலும் அச்சு வார்ப்பிலும் அதிலுள்ள சின்னங்களிலும் ஒன்றாகவே உள்ளன.

## 20:3 தந்திவர்மன் காசு

தந்திவர்மனின் (கி.பி. 796-846) வெள்ளிக்காசு ஒன்று தஞ்சை மாவட்டம் திருவையாற்றில் கிடைத்துள்ளது. 2.2 கிராம் எடையுள்ள இந்தக் காசின் முன்பக்கத்தில் நிற்கும் காளையின் மேல் 'தந்தி' என்று பல்லவ கிரந்த எழுத்துக்களில் பொறிக்கப் பட்டுள்ளது.



ஒளிப்படம் - 11

இரண்டாவது எழுத்து 'ந' வலப்பக்கம் கீழ்வளைவு பெறுவதற்குப் பதில் இடப்பக்கம் இடப்பட்டுள்ளது. காசின் பின்பக்கத்தில் தர்மசக்கரம் காணப்படுகிறது.

### 20:4. பல்லவ மன்னன் தலைநாணயம்

முன்பக்கத்தில் மன்னனின் மார்பளவு திருவுருவம் பொறிக்கப் பட்ட, வட்டவடிவ வெள்ளிநாணயம் காஞ்சிபுரத்தில் கிடைத் துள்ளது. இதன் எடை 750 மி. கிராம். மன்னரின் மூக்கு பெரிதாகவும், முகத்தில் நடுத்தர வயதின் தோற்றமும் தலைப்பாகையும் காதுப் பக்கத்தில் நாடாவின் முடிச்சும் காதில் அணி கலனும் உள்ளன. காசின் பின் பக்கத்தில் ஒன்றும் காணப்பட வில்லை. அரசனின் திருவுருவம் கொண்ட இக்காசு பிற்கால ரோமானி யர் (Byzantine) காசுகளை முன்னோடி யாகக் கொண்டு அமைக்கப்பட்டது தெளிவாகத் தெரிகிறது. இந்தக் காசோடு பகாபிடுகு, லக்ஷித போன்ற முதலாம் மகேந்திர வர்மனுடைய காசுகள் கிடைப்பதால் இந்தக் காசும் முதலாம் மகேந்திரவர்மனுடையதாக இருக்கலாம்.



ஒளிப்படம் - 12

### 20:5 பல்லவர் காசில் கொடி

பல்லவர்களின் கொடி பொறித்த 37 கிராம் எடையுள்ள வெள்ளிக்காசு ஒன்று திருக்கோவிலூரில் கிடைத்துள்ளது. முன் பக்கத்தில் பல்லவர் இலச் சினையான காளையும் இதன் மேற்புறத்தில் திருவத்சம், சங்கு, பிறை ஆகியனவும் காணப்படு கின்றன. பின்பக்கத்தில் தாமரைப்பூவின் நடுவி லிருந்து செங்குத்தாக உள்ள கொடிக்கம்பத்தின் உச்சியில் கொடி பறக்கும் நிலையில் பொறிக்கப்பட்டுள்ளது. இக்கொடி மற்ற நாட்டு வேந்தர்களுடையதாக இருக்க வாய்ப்பில்லை. காரணம் கொடி தாமரையின் மீது உள்ளது. தாமரைப்பூவில் திருமகள் வீற்றிருப்பாள். திருமகளுக்கு இணையாக கொடிக்கு முக்கியத்துவம் கொடுத்துள்ளது நோக்கத்தக்கது.




ஒளிப்படம் - 13

### 20:6 முத்திரைகள்

சங்ககால மலையமான்களின் தலைநகராகிய திருக்கோவிலூரில் இரண்டு வகை குழிவான காளை உருவ செப்பு முத்திரைகள் கண்டெடுக்கப்பட்டன. சிறிய முத்திரையின் எடை 2.750 கிராம். பெரிய முத்திரையின் எடை 3.150 கிராம். இரண்டு முத்திரைகளிலும் காளை வலதுபக்கம் நோக்கி நின்ற நிலையில் உள்ளது. இரண்டு முத்திரைகளிலும் காளையின்மேல் பிறை உள்ளது. ஒரு முத்திரையில் காளையின் முன் குத்துவிளக்கு உள்ளது. பல்லவ மன்னர்கள் காளை முத்திரையையே பயன்படுத்தி உள்ளனர் என்று செப்பேடுகள், காசுகள் மூலம் அறிகிறோம். இப்பொழுது கிடைத்துள்ள முத்திரை, எழுத்துப் பொறிப்பு இல்லாத தால் அரச முத்திரை என்று உறுதியாகச் சொல்ல இயலவில்லை.



ஒளிப்படங்கள் - 14 & 15

### 20:7 எடைக்கல்

பல்லவர் காலத்து எடைக்கல் ஒன்று திருக்கோவிலூரில் கிடைத்துள்ளது. வெங்கலத்தால் ஆன 8 கிராம் எடை கொண்ட இக்கல்லில் பல்லவர் கால எழுத்துக்களான ஸ்ரீ, ப, க மற்றும் ஐந்து புள்ளிகள் உள்ளன. கழஞ்சு, மஞ்சாடி என்பன பொன் நிறுக்க பயன்படுத்தப்பட்ட அளவைகள். இந்த எடைக்கல்லும் பொன்னை நிறுக்கும் அளவையாக இருக்கலாம்.



ஒளிப்படம் - 16

# 21. தென்னிந்திய பெருங்கற்படைக் காலப் பண்பாட்டில் மட்பாண்டங்களின் வகைப்பாடு - ஓர் ஆய்வு

*வுக்காவோ ஜுன்இச்சி, தஞ்சாவூர்*

தென்னிந்திய பெருங்கற்படைக்காலப் பண்பாட்டுக் கூறுகளை பெரிய, வலுவான கற்களால் கட்டப்பட்ட கல்திட்டை (dolmen), கல்பதுக்கை (cist), குத்துக்கல் (menhir), கல்வட்டம் (stone-circle) போன்ற ஈமச் சின்னங்கள் மூலம் தெளிவாக அறிய இயலும். எனவே, இப்பண்பாடு பெருங்கற்படைப் பண்பாடு எனலாம். இந்தப் பண்பாடு கிட்டத்தட்ட கி.மு. பத்தாம் நூற்றாண்டு முதல் கி.பி. முதல் நூற்றாண்டு முடிய உள்ள 'கால கட்டத்தில்' தென்னிந்தியாவில் பரவலாகச் செறிவாக்கம் பெற்றுள்ளது. இது தமிழகத்திலும் பலவகைகளில் பிரதிபலிக்கப்பட்டு வளர்ந்துள்ளது. இருந்தாலும்கூட, இவ்வளர்ச்சியை முறையாக உய்த்துணர ஒரு தெளிவான கால அளவு வரையறுக்கப்படவில்லை. இந்தப் பண்பாட்டுப் போக்கின் பின்பகுதி சங்கக் காலத்தோடும் ஓரளவு ஒட்டி வருகிறது என்றாலும், சங்க இலக்கியக் குறிப்புகளில் மிக அருகிய செய்திகளையே காணமுடிகிறது. எனவே, அகழாய்வுகளில் பெறப்பட்ட பெருங்கற்படைக் காலப் பொருட்களையே மூலச்சான்றுகளாகக் கொண்டு இவ்வாய்வை மேற்கொள்ள வேண்டியுள்ளது. அம்மூலச்சான்றுகளில் மட்பாண்டங்கள் முதல் இடத்தைப் பெறுகின்றன. ஏனெனில் இவை துல்லியமாக பண்பாடு மற்றும் காலமாறுபாட்டை வெளிப்படுத்துகின்றன. வெவ்வேறு காலகட்டத்தைச் சேர்ந்த மட்பாண்டங்களின் வடிவங்கள், அவை தயாரிக்கும் முறைகள், ஆகியவற்றின் அடிப்படையில் தொல்லியலார், வேறுவேறு காலத்தைச் சார்ந்த மட்பாண்டங்களை இனங்காண ஒரு 'கால அட்டவணை' செய்துள்ளனர். இந்த மட்பாண்டங்களின் வகைப்பாட்டை ஒரு கால அளவுகோலாகக் கொண்டு பெருங்கற்படைப் பண்பாட்டைச் சீராக ஆய்வு செய்யலாம். இது 'வகைப்பாட்டுக் காலவியல்' என்று தொல்லியலில் சொல்லப் படுகிறது.

பெருங்கற்படைக்கால மட்பாண்டங்களின் முக்கியவகை கருப்பு - சிவப்பு மட்பாண்டம் (Black and Red ware) ஆகும். இப்பாண்டத்தின் உட்புறமும் விளிம்புப் பகுதியும் கருப்பாகவும்,

தமிழக மட்பாண்டங்களின் வகைப்பாடு    மு.கா. – முதல் காலகட்டம்

***வரைபடம் 6***

*வெளிப்புறம் சிவப்பாகவும் உள்ளது. எனவே, இது கருப்பு - சிவப்பு மட்பாண்டம் என்று அழைக்கப்படுகிறது. இது பொதுவாக சுடுமுன் பூச்சிடப்பட்டு பின் வழவழப்பாக்கப்பட்டு சுடப்பட்டுள்ளது. எனவே பார்ப்பதற்கு மின்னுவதாயுள்ளது. இவ்வகை மட்பாண்டம் தென்னகத்தில் பெருங்கற்படைக் காலத்திலிருந்தே கிடைக்கிறது. எனவே, இதனைப் பெருங்கற்படைப் பண்பாட்டின் 'முதன்மைக் கூறு' எனலாம்.*

*இப் பண்பாட்டின் பின்பகுதியில் செம்பழுப்பு நிறமுடைய வண்ணம் தீட்டப்பட்ட மட்பாண்டம்* (Russet coated painted ware) *கிடைக்கிறது. இந்தச் செம்பழுப்பு நிற மட்பாண்டம் என்னவெனில் கருப்பு - சிவப்பு மட்பாண்டம் அல்லது சிவப்பு மட்பாண்டத்தின் மீது வெள்ளைக் கோடுகள் வரையப்பட்டு பின் சிவப்புநிறப் பூச்சு இடப்பட்டு சுடப்பட்ட ஒன்றாகும். இங்ஙனம் சுடப்படும்பொழுது சிவப்பு நிறப் பூச்சுக்கு அடியில் உள்ள வெண்மை நிறம் செம்பழுப்பு நிறத்தை அடைகிறது. எனவே, இது செம்பழுப்பு நிற மட்பாண்டம் என்று அழைக்கப்படுகிறது. முன்னர் இது ஆந்திர மாநிலத்தில் ஆட்சி செய்த சாதவாகனர் காலத்தைச்*

சார்ந்தது என்று கருதப்பட்டு 'ஆந்திர' மட்பாண்டம் என்று அழைக்கப்பட்டது. ஆனால், இதன் தோற்றுவாய் தமிழகமாகும். பெரும்பாலும் கொங்குப் பகுதியாயிருக்கலாம். கிறித்தவ சகாப் தத்தின் தொடக்கக் காலத்திலிருந்து இவ்வகை ஆந்திரப் பிரதேசத்திலும் கருநாடகத்திலும் அங்கிருந்து வடபகுதிக்கும் பரவியது. மற்றொரு வகையான முழுவதும் கருப்பு நிறம் கொண்ட மட்பாண்டம் பெரும்பாலும் ஈமக் குழிகளில் கண்டெடுக்கப்படும் பொருளாகும். இவ்வகையும், பூச்சிடப்பட்டு சுடப்பட்டதாகும்.

சிவப்புநிற மட்பாண்டம் இரு வகைகளைக் கொண்டது. ஒன்று பூச்சிடப்பட்டு சுடப்பட்டு வழவழப்புத் தன்மை கொண்டது. மற்றொன்று பூச்சிடப்படாது சுடப்பட்ட வகையாகும். பின்னது சொரசொரப்பான தன்மையுடையது. முந்தியவகை கருஞ்சிவப்பு நிறத்திலும் கிடைக்கிறது. இவ்வகைப் பாண்டம் கருப்பு - சிவப்பு, செம்பழுப்பு மட்பாண்ட வகைகளின் வடிவத்தில் உள்ளது. இவ்வாறாகத் தோற்றத்திலும் செய்முறையிலும் ஒரே போன் றிருக்கும் இம்மூன்று வகை மட்பாண்டங்களையும் மிக நெருங்கிய வகைக்குள் உட்படுத்தலாம்.

சொரசொரப்புத் தன்மையான சிவப்பு மட்பாண்டம் இக்காலப் பாண்டங்கள் போல்தோன்றுகிறது.

என் தமிழக பெருங்கற்படைக்கால மட்பாண்டங்களின் ஆய்வில் முதன்மையாக கொடுமணல் அகழாய்வில் கிடைத்த மட்பாண்டங்கள் ஆய்விற்கு எடுத்துக் கொள்ளப்பட்டுள்ளன. கொடுமணல் பெரியார் மாவட்டத்தில் ஈரோட்டிலிருந்து 40 கி.மீ. தொலைவு தென்மேற்காக அமைந்துள்ளது. கீழ்ச் சொல்லப்பட்ட செய்திகளால் கொடுமணல் சிறப்பான பெருங்கற்படைக் காலத் தடயங்கள் கொண்ட ஊராகக் கருதப்படுகிறது. 1. ஒரே வகை மட் பாண்டங்கள் புதைகுழிகளிலும் மக்கள் வாழ்ந்த இடங்களிலும் கிடைத்திருப்பது. ஆகவே, கொடுமணலில் காணப்படும் பெருங் கற்படை ஈமப் புதை சின்னங்கள் இங்கு வாழ்ந்த மக்களால் கட்டப்பட்டன என்று தெளிவாக அறிய முடிகிறது. 2. இந்த ஊரிருக்கை நல்ல தொழில்செய் ஊராகவும், இரும்புருக்கும் மையமாகவும்,கல்மணிகள் பட்டை தீட்டப்படும் இடமாகவும் இருந்துள்ளது. இந்த அகழாய்வு கல்லறைகளிலும் மக்கள் வாழ்ந்த பகுதிகளிலும் நிகழ்த்தப்பட்டது. தமிழ்ப் பல்கலைக்கழக கல்வெட்டியல் துறை, சென்னைப் பல்கலைக்கழகத் தொல்லியல் துறை மற்றும் தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத்துறை ஆகியன இந்த அகழாய்வில் பங்குகொண்டன. முறையோடு, முழுமையான எண்ணிக்கையில் பெருங்கற்படைக்கால மட்பாண்டங்கள் கிடைக்கப் பெற்றன.

கொடுமணலில் கல்லறைகள் ஊரிருக்கையின் கிழக்கு வடகிழக்காக பரவியுள்ளன. பெரும்பாலானவை இடுதுளை (Port-hole) உடைய கல்லறைகளாகும். சில முன்வாயில் (Passage) உடைய, எளிய அமைப்பானவை; சில கல்லறைகள் குறுக்கு நெடுக்காக கற்களால் தடுக்கப்பட்டு இரு அல்லது அதற்கு மேலான அறைகளைக் கொண்டுள்ளன (transepted cists). சில முதன்மை அறைக்கு முன்பு சிறிய அளவிலான அறைகளைக் கொண்டுள்ளவை. சிறு எண்ணிக்கையிலான முதுமக்கள் தாழிகளும் கிடைத்தன. கல்வட்டத்தின் எல்லையில் கட்டப்பட்ட குத்துக் கற்களும் இங்கு காணப்படுகின்றன. அதிக எண்ணிக்கையிலான சூதுபவள மணிகளும், தாமிரத்தில் செய்யப்பட்ட ஒரு புலி உருவ பொம்மையும் சில கல்லறைகளில் கண்டெடுக்கப்பட்டன.

மண்ணடுக்குகளின் அடிப்படையில் கொடுமணல் ஊரிருக்கையின் காலம் இரு கட்டங்களாகப் பிரியும் என்று சொல்லலாம்.[1] முதல் காலகட்டத்தில் கருப்பு - சிவப்பு மட்பாண்டமும், இரண்டாம் காலகட்டத்தில் சிவப்பு மட்பாண்டமும் முக்கியக்கூறுகளாக உள்ளன. முதல் காலகட்டம் மேலும் இரண்டாகப் பிரிக்கப்பட்டுள்ளது. முதல் காலகட்டத்தில் முதல் உட்பிரிவு (உட்பிரிவு-அ)-இல் செம்பழுப்பு மட்பாண்டம், இரண்டாம் உட்பிரிவு (உட்பிரிவு-ஆ)-இல் உள்ளதை விட அதிக எண்ணிக்கையில் காணப்படுகிறது. ஊரிருக்கையிலிருந்து பிராமி எழுத்துக்கள் கொண்ட மட்பாண்டங்களும் ரூலெட் (rouletted) மட்பாண்டங்களும் கண்டெடுக்கப்பட்டிருந்தாலும் ஊரிருக்கையிலிருந்து C14 மூலமான காலம் கிடைக்கவில்லை. இருந்தாலும், ஒரு கல்லறையில் C14 அடிப்படையில் காலம் கி.மு. முதல் ஆண்டு எனக் கணிக்கப்பட்டுள்ளது[2] மட்பாண்ட வகைப்பாடுகளின் அடிப்படையில் கல்லறைகளில் கிடைத்த மட்பாண்டங்கள் ஊரிருக்கையில் முதல்காலகட்டத்தின் உட்பிரிவு - அ இல் கிடைத்த மட்பாண்டங்களை வடிவில் ஒத்திருக்கின்றன. எனவே, இந்த முதல் உட்பிரிவு காலகட்டத்தை கிறித்தவ சகாப்தத்தின் துவக்க காலம் எனலாம்.

கொடுமணலில் கருப்பு - சிவப்பு மட்பாண்டம் செம்பழுப்பு மட்பாண்டம், பூச்சிடப்பட்ட சிவப்பு மட்பாண்டம், கருப்பு மட்பாண்டம், சொரசொரப்பான சிவப்பு மட்பாண்டங்கள் ஆகியன கிடைக்கப் பெற்றுள்ளன. முதல்காலகட்டத்தில் முக்கிய கூறாக, குழிவற்ற கீழ்நோக்கி வளைந்த அடித்தளத்தைக் கொண்ட கிண்ணத்தைக் குறிப்பிடலாம். இக்கிண்ணத்தின் விளிம்பு குவியாகி உட்புறமாக மெல்ல வளைந்துள்ளது (வரைபடம் 6-3). சில கிண்ணங்களின் விளிம்பு வெளிப்புறமாக மெல்ல வளைந்து ஆங்கில எழுத்து 'ந' போன்ற வடிவில் காணப்படும் (வரைபடம்

6-4). முன்னிரண்டு வகையும் முதல்கால கட்டத்தின் உட்பிரிவு - அ - இல் கிடைக்கிறது. ஆனால் உட்பிரிவு ஆ-இல் இக்கிண்ணத்தின் 'ந' போன்ற உடற்பகுதி மிக வளைந்து உட்பிரிவு - ஆ மட்பாண் டத்தினின்றும் வேறுபடுகிறது (வரைபடம் 6-5). இவ்வாறு காணப் படும் பாண்டத்தின் அடிப்படையை இரு காலங்களையும் பிரிக்கும் காலக்கோடாக வைத்துக் கொள்ளலாம். வல்லம் அகழாய்வில் பெறப்பட்ட மட்பாண்டங்களைக் கொண்டு இதனை மேலும் உறுதி செய்ய முடியும்.

வல்லம் தஞ்சாவூருக்குத் தென்மேற்கே 17 கி.மீ. தொலைவில் அமைந்துள்ளது. இங்கும் தமிழ்ப் பல்கலைக்கழகக் கல்வெட்டியல் துறை அகழாய்வு மேற்கொண்டது.[3] வல்லத்தின் மண்ணடுக்குகளை மூன்று காலங்களாக கொள்ளலாம். முதல் காலகட்டம் மேலும் இரு உட்பிரிவுகளாக பிரித்துக் கொள்ளலாம். முதல் காலகட்டத்தில் அதிக எண்ணிக்கையில் கிடைத்த கருப்பு - சிவப்பு மட்பாண்டம் இரண்டாம் காலகட்டத்தில் கொஞ்சம்கூட கிடைக்கவில்லை. முதல் காலகட்டத்தில் பெறப்பட்ட பிற மட்பாண்டங்கள் கருப்பு மட்பாண்டம், பூச்சிடப்பட்ட சிவப்பு மட்பாண்டம், சொர சொரப்பான சிவப்பு மட்பாண்டம் மற்றும் சிவப்பு நிறம் தீட்டப் பட்ட சிவப்பு மட்பாண்டங்களாகும். இவற்றுள் கருப்பு மற்றும் பூச்சிடப்பட்ட சிவப்பு மட்பாண்டங்கள் முதல் காலகட்டத்தில் மட்டும் கிடைத்துள்ளன. முதல் காலகட்டத்தின் முதல் உட்பிரிவு கி.மு. 170 என C14 காலக் கணிப்பால் வரையறுக்கப்பட்டுள்ளது.[4]

முதல் காலகட்டத்தைச் சார்ந்த கருப்பு - சிவப்பு மட் பாண்டம், கொடுமணலில் கிடைத்தவை போன்று குழிவற்று அதன் உடற்பகுதி மிகவும் அடித்தளத்தை நோக்கி வளைந்துள்ளது. இவற்றுள் சில உட்புறமாக வளைந்த விளிம்புகளையும் (வரைபடம் 6-7) "S' வடிவ உடற்பகுதியையும் (வரைபடம் 6-8) கொண்டுள்ளன.[5] ஆனால் முதல் காலகட்டத்தின் முதல் உட்பிரிவின் இறுதிக் காலத்தில் "S' வடிவ உடற்பகுதியைக் கொண்ட வகை அதிக எண்ணிக்கையில் காணப்படுகிறது. மேலும் 'ந' வடிவத்தின் நிலை மாறி விடுகின்றது (படம். 6-9)[6]. இவ்வடிவ மாற்றம் கொடுமணலில் முதல் காலகட்டத்தின் உட்பிரிவு - அ தொடங்கி உட்பிரிவு - ஆ வரை காணப்படும். இவ்வகை கிண்ணங்களின் வடிவ மாற்றங் களைப் போன்றே அமைந்துள்ளது. இவ்வாறாக அமைந்த இந்த வகைப்பாட்டு வடிவமாற்றம் ஒரு குறிப்பிட்ட இட எல்லைக்குள் முடிந்துவிடாத காலக்கணிப்புத் திறன் எனக் கொள்ளலாம்.

வல்லத்தின் இரண்டாம் காலகட்டத்தின் இறுதிக்காலத்தில் கருப்பு - சிவப்பு மட்பாண்டம் கிடைக்கவில்லை. முந்தைய காலகட்டத்தில் கிடைத்த குழிவற்ற கிண்ணத்திற்குப் பதிலாக தட்டையான அடிப்பகுதியைக் கொண்டவை சில கிடைத்துள்ளன.

இந்த அடிப்பகுதியிலிருந்து செங்குத்தாக எழும் உடற்பகுதி குவியாகி உள்நோக்கி மடிந்த விளிம்பைக் கொண்டுள்ளது. (வரைபடம் 6-10)[7] இதைப் போன்றே மட்பாண்ட வகை அரிக்கமேட்டிலும் கிடைக்கிறது.

அரிக்கமேடு ரோமானியர்களோடு தொடர்புடைய புகழ்மிக்க வணிகத்தளமாய் இருந்துள்ளது.[8] எனவே இது ரோமானியப் பண்பாட்டைப் பரவலாகத் தாங்கியுள்ளது. இக்காரணத்தால் அரிக்கமேட்டு அகழாய்வில் அறியப்பட்ட பண்பாட்டுக் கூறுகள் வல்லம், கொடுமணல் பெருங்கற்காலப் பண்பாட்டுக் கூறுகளிலிருந்து ஓரளவு வேறுபடுகின்றன. ஆனால் தென்னிந்திய தொல்லியல் ஆய்வில் அரிக்கமேடு அகழாய்வு ஒரு திருப்பு முனையாக அமைந்தது. ஏனெனில், தென்னிந்தியத் தொல்லியல் வரலாற்றின் பல்வேறு காலகட்டங்களின் தடயங்களைக் கண்டறியும் சரியான காலத்தை நிர்ணயிக்க தொல்பொருட் சின்னங்கள் இங்குக் கிடைத்தன. அதே வேளையில் இவ்விடம் தொல் பழங் காலத்திலிருந்து வரலாற்றுக் காலத்திற்குள் புகுகிறபோது மனித வரலாற்றில் நிகழும் பண்பாட்டு இயல்புகளையும் பிரதிபலிக்கும் களமாகவும் இருக்கிறது.[9]

இங்குக் கிடைத்த 'அரெடைன்' மட்பாண்டம் (Arretine ware) அரிக்கமேடு தொல் பழங்காலத்திற்கு நிர்ணயமான காலத்தைச் சொல்கிறது. இவ்வகை மட்பாண்டம் இத்தாலியிலுள்ள 'அரெசோ' (Arezzo) எனுமிடத்தில் தயாரிக்கப்பட்டதால் அவ்விடத்தின் பெயரால் அழைக்கப்படுகிறது. பெரும்பாலும் ஏற்றுமதிக்காகத் தயாரிக்கப்பட்டவையாகும். இவ்வகை மட்பாண்டம் பளபளப்பான சிவப்பு நிறம் கொண்டு நன்றாகச் சுடப்பட்டுள்ளது. இருவகை 'அரெடைன்' கலங்கள் இங்குக் கண்டெடுக்கப்பட்டுள்ளன. ஒருவகை தட்டையான கிண்ணமாகும். இதன் அடிப்பகுதி உட்கூடான வட்டவடிவ பிரிமணை போன்ற வடிவைக் கொண் டுள்ளது. அடுத்தவகை 'வாளி' போன்ற வடிவுள்ளதாகும். இந்த வாளி வடிவ கிண்ணத்தின் வாய் அடித்தளத்தின் பரப்பைவிட கீழிருந்து மேல்நோக்கி அகன்றிருக்கும். உட்கூடான வட்டவடிவ பிரிமணைப் பகுதியின் மேல் இதன் அடித்தளமும் அமைந்துள்ளது. 'அரெடைன்' மட்பாண்டத்தின் தனித்த கலையம்சம் என்னவெனில் பாண்டம் வனைந்த கலைஞனின் பெயர் சில பாண்டத்தின் உள்புற அடித்தளத்தில் முத்திரையாகப் பொறிக்கப்பட்டுள்ளது. இவ்வகை பாண்டம் கி.பி. 50க்குப் பிறகு கிடைக்கப் பெறவில்லை.[10]

அரிக்கமேட்டில் அயல்நாட்டு பண்பாட்டுத் தாக்கத்தைப் பிரதிபலிக்கும் இன்னொரு மட்பாண்டம் 'ரூலெட்' மட்பாண்டம் (Rouletted ware) ஆகும். இது நிறப் பூச்சிடப்பட்டு நன்றாகச் சுடப்பட்டது. கருப்பு நிறத்திலும் சாம்பல் நிறத்திலும் கிடைக்கிறது.

இதன் இயல்பான வடிவம் தட்டையான காலில்லாத கிண்ணமாகும்.[11] உட்புறமாக வளைந்த விளிம்புடையது. இக்கிண்ணத்தின் உட்புற தளம் மையத்தைநோக்கி புள்ளிவளை கோடுகளால் அழகூட்டப் பட்டுள்ளது. இந்த 'அழகூட்டல்' 'ரூலெட்' எனும் கருவியால் பதிக்கப்பட்டுள்ளது. ரூலெட் மட்பாண்டம் 'அரெடைன்' மட்பாண்டம் காலத்திற்கு முன்பும் பின்புமாக கிடைக்கிறது. இப்பாண்டம் இராமநாதபுர மாவட்டத்திலுள்ள அழகன் குளத்தில் வடக்கத்திய மெருகிட்ட கருப்பு மட்கல (NBP) வகையுடன் சேர்ந்து கிடைத்துள்ளது[12]. எனவே இது கி.மு. 100 வாக்கில் பயன்பாட்டுக்கு வந்திருக்கலாம். சிலர், ரூலெட் மட்பாண்டம் மத்தியதரைக்கடல் பகுதிகளில் செய்யப்பட்டது என்று சொல் கிறார்கள். ஆனால் மத்தியதரைக்கடல் பகுதிகளில் செய்யப்பட்ட ஊர்ப்பகுதிகள் கண்டறியப்படவில்லை. வனையும் தொழில்நுட்பம் மட்டும் அயல்நாட்டிலிருந்து பின்பற்றப்பட்டிருக்கும்.

பிற அரிக்கமேட்டில் உள்ள மட்பாண்டங்களில் காலப் போக்கில் குறிப்பிட்ட வடிவ மாற்றம் காணப்படவில்லை. எனவே, அரிக்கமேடு ஊரிருக்கையில் மக்கள் வாழ்ந்த காலம் நீண்டதில்லை. ஆனால், உள்நாட்டு மட்பாண்டங்களில் நிறமாற்றம் காணப் படுகிறது.[13] அரெடைன் மண்ணடுக்கிலிருந்தும் அதற்கு முந்தைய மண்ணடுக்கிலிருந்தும் கிடைக்கப்பெற்ற உள்நாட்டு மட்பாண் டங்கள் பெரும்பாலும் சாம்பல் நிறமுடையவை. ஆனால் அரெடைன் அடுக்கிற்குப் பிந்தைய மண்ணடுக்கில் கிடைக்கப்பெற்ற மட்பாண்டங்கள் பெரும்பாலும் சிவப்பு நிறம் கொண்டவை. இந்த நிறமாற்றம் அரெடைன் காலத்திற்குப் பிறகு மட்பாண் டங்களின் 'சுடுகலை'யில் ஏற்பட்ட மாற்றத்தை உறுதிசெய்கிறது.

வகைப்பாட்டின் அடிப்படையில் அரிக்கமேட்டுக்கும் வல்லத்து முதல் காலகட்டத்தின் இரண்டாம் உட்பிரிவின் இறுதிப் பகுதிக்கும் இடையே அமைந்திருக்கும் தொடர்புகளை இனங்காண முடியும். முன்சொன்னது போலவே வல்லத்து முதல் காலத்தில் உட்பிரிவு - ஆ இன் இறுதிப்பகுதியில் கீழ்நோக்கி மடிந்த அடித்தளமும் உள்முகமாக திரும்பிய மேல்விளிம்பும் பெற்றுள்ள கிண்ணம் கிடைத்துள்ளது (வரைபடம் 6-10). இதைப் போன்ற வகை அரிக்கமேட்டிலும் கிடைத்தது.[14] இந்த அரிக்கமேட்டுக் கிண்ணம் வல்லத்தில் கிடைக்கப்பெற்ற இவ்வகை கிண்ணத்தைவிட தட்டையானது. ஆனால், வல்லத்து கிண்ணத்தைப் போல மிகக் கீழ்நோக்கி வளைந்த அடித்தளத்தைக் கொண்டுள்ளது. இதன் விளிம்பு உட்புறமாக மடிந்து திரும்பியுள்ளது (வரைபடம் 6-11,12) இது முதல் 'அரெடைன்' மண்ணடுக்கில் மட்டும் அருகியே கிடைத்துள்ளது. இதன் மூல வடிவ வகை கருப்பு - சிவப்பு மட்பாண்டமாகும். இதன் அடித்தளமும்

தட்டையானது. ஆனால் மிகக் கீழ்நோக்கி வளைந்த அடித்தளம் கொண்டுள்ளது.[15] இவ்வகையும் அரெடைன் முந்தைய காலத்தில் மட்டும் கிடைக்கிறது. இந்த அனைத்துக் கூறுகளும் வல்லத்தின் முதல்காலகட்டத்தின் உட்பிரிவு - ஆ இன் இறுதிக் காலமும் அரிக்கமேட்டின் அரெடைனுக்கு முந்தைய காலமும் ஓரளவு ஒட்டிவருவதை உணர்த்துகிறது. அரிக்கமேட்டில் கருப்பு - சிவப்பு மட்பாண்டம் அருகியே கிடைக்கிறது என்பதும் இதனை உறுதி செய்கிறது. தட்டையான அடித்தளமும் உள்நோக்கி வளைந்த விளிம்பும் ரூலெட் மட்பாண்டத்தோடு தொடர்புடைய கூறுகளாகக் காணலாம். இவ்வகை தொடர்ந்து கிடைக்கவில்லை. அரெடைன் காலகட்டத்தில் கிடைத்த மட்பாண்டங்களிலும் அரெடைன் பிந்தைய அரெடைன் கட்டத்தில் கிடைத்த மட்பாண்டங்களிலும் முந்தைய அரெடைன் கட்ட மட்பாண்டங்களோடு பெரும்பாலும் வடிவமாற்றம் காணப்படவில்லை. ஆனால் உட்கூடான வட்டப் பிரிமனை வடிவைக் கொண்ட வகையும் முத்திரையால் தீட்டப் பட்ட அழகூட்டங் கொண்ட வகையும் புதியதாக கிடைக்கப் பெற்றுள்ளது.[16] இந்தக் கூறுகள் அரெடைன் மட்பாண்டத்திலிருந்து பின்பற்றப்பட்டன என்று கொள்ளலாம். எனவே, இவ்வகை மட்பாண்டங்கள் அரெடைன் காலத்திற்குப் பின் செய்யப்பட்டன எனலாம்.

இவ்வாறாக, தமிழக பெருங்கற்படைக் கால இறுதிப்பகுதியில் மட்பாண்ட வகைப்பாடு பற்றிய செய்திகளை தொகுத்த நாம், வகைப்பாட்டு மாற்றங்கள் கொடுமணலிற்கும் வல்லத்திற்கும் முந்தைய காலத்தில் எவ்வாறு நிகழ்ந்தன என்பதுபற்றி காண்போம். தொகரப் பள்ளி எனும் பெருங்கற்படைப் பண்பாட்டைக் காட்டுகிற ஊர் கிருஷ்ணகிரிக்குத் தென்கிழக்கு 20 கி.மீ. தொலைவில் அமைந்துள்ளது. இங்கு நிகழ்த்தப்பட்ட அகழாய்வில் 5 மற்றும் 6ஆம் மண்ணடுக்குகளில் கருப்பு - சிவப்பு மட்பாண் டம் கிடைத்துள்ளது[17]. 5-ஆம் மண்ணடுக்கில் C14 மூலம் கி.மு.290 மற்றும் கி.மு. 260 என காலங்கள் கிடைக்கப் பெற்றுள்ளன[18]. அங்கு புதிய கற்காலத்தின் தொல்பொருட்களும் கண்டெடுக் கப்பட்டுள்ளன. இவ்வாறாக, தொகரப்பள்ளியில் கொடுமணலிற்கும் வல்லத்திற்கும் முந்தைய காலத்தின் தொல்பொருள் கூறுகள் இருக்கலாம் எனத் தெரிகிறது. இங்குக் கண்டெடுக்கப்பட்டுள்ள கருப்பு - சிவப்பு மட்பாண்டங்களுக்குள் மிகக் கீழேநோக்கி வளைந்த அடித்தளத்தை கொண்ட கிண்ணங்கள் கிடைத்துள்ளன. இவற்றில் ஒருவகை உட்புறமாக குவியாகி மெல்ல வளைந்த எளிய விளிம்புடைய கிண்ணமாகும்[19]. இவ்வகைக் கிண்ணம் கொடு மணலினும் வல்லத்திலும் கிடைத்துள்ளது (வரைபடம் 6-3,7)[20]. மற்றொரு வகை, குறுகிய வாயைக் கொண்டு குவியற்று உள்முகமாகத் திரும்பிய விளிம்பைக் கொண்ட கிண்ணமாகும்

(வரைபடம் 6-2)[21]. இவ்வகைக் கிண்ணம் வல்லத்திலும் கிடைத்துள்ளது (வரைபடம் 6-6)[22]. ஆனால் கொடுமணலில் கிடைக்கவில்லை. எனவே, இதனை குவிந்து வளைந்த விளிம்பைக் கொண்ட கிண்ணத்திற்குக் காலத்தில் முந்தியதாகக் கொள்ளலாம்.

மேலும் தொகரப்பள்ளியில் குழிவற்ற விளிம்பு வெளிப்புறமாக அகன்ற கிண்ணங்களும் கிடைக்கப் பெற்றன (வரைபடம் 6-1)[23]. இவ்வகை வல்லத்திலும் கொடுமணலிலும் கிடைக்கவில்லை. இதனடிப்படையில் இந்த வகைக் கலம் குவி வகைக் கலத்திற்கும் குவியற்ற சட்டி போன்ற வகைக்கும் முந்தியவை எனலாம். தொகரப் பள்ளியில் வெளிப்புறம் அகன்ற விளிம்புடைய மட்பாண்டங்கள் அதிக எண்ணிக்கையில் தன்மை தொகரப்பள்ளியின் முக்கிய கூறாகக் கருதப்படுகிறது.[24] தொகரப்பள்ளியின் மற்றொரு கூறு என்னவெனில், குவிந்து வளைந்த உடற்பகுதி கொண்ட கிண்ணத்தின் விளிம்பு சிறுஅளவில் வெளிப்புறம் திரும்பியுள்ளது[25]. இவ்கை காலமாற்றத்தைக் காட்டுகிறதா? அல்லது வட்டாரத் தன்மையை வெளிப்படுத்துகிறதா? என்று இப்போது தெரியவில்லை.

தொகரப் பள்ளியின் அருகில் பையம்பள்ளி என்றொரு பெருங்கற்படைக்கால ஊர் இருக்கை அகழாய்வு செய்யப்பட்டது[26]. இந்த அகழாய்வில் பெருங்கற்படைக் காலத்தின் முதல் மண்ணடுக்கில் புதிய கற்காலப் பண்பாட்டுக் கூறுகளும் கிடைத்துள்ளன. பெருங்கற்படைக் கால மண்ணடுக்குகளில் C14 மூலம் கி.மு. 640[27] மற்றும் கி.மு. 380[28] என காலக் கணிப்புகள் கிடைக்கப் பெற்றுள்ளன. எனவே பையம்பள்ளியில் வெளிப்போந்த பெருங்கற்படைக் காலத்தின் காலம் இதுவரை தமிழகத்தில் கிடைத்த பெருங்கற்படைக் கால பண்பாட்டினைவிட காலத்தால் முந்தியது எனலாம். அகழாய்வில் கிடைக்கப்பட்ட அனைத்து மட்பாண்டங்களையும் விளக்கமாக ஆய்ந்தோமானால் தமிழகப் பெருங்கற்படைப் பண்பாட்டின் காலத்தின் முந்திய கூறுகளை வகைப்பாட்டின் அடிப்படையில் காலக்கணிப்பு செய்ய இயலும். ஆனால் பையம்பள்ளி அகழாய்வின் விளக்கமான அறிக்கை இன்னும் வெளியிடப் படவில்லை. தொகரப் பள்ளியும் பையம்பள்ளியும் மிக அருகருகே அமைந்த பெருங் கற்படைக்கால ஊர் இருக்கைப் பகுதிகள். அவற்றுள் பையம்பள்ளி காலத்தால் மிக முந்தியது. பையம்பள்ளி மட்பாண்டங்கள் வகைப்பாட்டின் அடிப்படையில் ஆராயப்படுமானால், தொகரப்பள்ளி மட்பாண்டத்தின் பண்பாட்டுக் கூறுகளுக்கும் தமிழகப் பெருங்கற்படைக் காலத்தின் தொடக்கக் கட்டத்திற்குமான தொடர்பை தெளிவாக தெளிவாக அறிய முடியும். ஆனால் அத்தொடர்பை இந்த மட்பாண்ட வகைப்பாட்டு ஒப்பீட்டு ஆய்வில் காணமுடியவில்லை.

பொதுவாக, பெருங்கற்படைப் பண்பாட்டின் கூறுகள் கருநாடக ஆந்திரப் பிரதேசத்திலிருந்து வடார்க்காடு - தர்மபுரி மாவட்ட வழிகளில் மட்டுமில்லாமல் கோயம்புத்தூர் பகுதி வழியாகவும் தமிழகத்திற்குப் பரவின எனக் கருதப்படுகிறது.[29] எனவே, தமிழகப் பெருங்கற்படைப் பண்பாட்டின் முந்தைய கால மட்பாண்டவகை பற்றிய ஆய்விற்கு கோயம்புத்தூர் பகுதியும் ஒரு 'கருவட்டமாக' உள்ளது எனலாம். இருந்தும்கூட, இந்த வட்டாரத்தில் முறையான ஓர் அகழாய்வு இதுவரை நடத்தப்பட வில்லை. வருங்காலத்தில் அதுபோன்ற ஆய்வு இந்தப்பகுதியில் எதிர்பார்க்கப்படுகிறது.

சரியாகக் காலக்கணிப்பு செய்யப்பட்ட பெருங்கற்படைக் கால ஊர் இருக்கைகளிலிருந்து அகழாய்வில் கிடைத்த மட்பாண் டங்களை வகைப்பாட்டின் அடிப்படையில் ஆய்வு செய்து இங்கு ஒரு பெருங்கற்படைக்கால மட்பாண்ட வகைப்பாட்டு 'கால அட்டணை தரப்பட்டுள்ளது' (வரைபடம்). என்றாலும் இது இன்னும் முழுமையான ஆய்வில்லை. இந்த ஆய்வை மேலும் சிறந்த முறையில் தொடர்ந்து மேற்கொள்ள வேண்டும். இப் போதைக்கு உள்ள 'வளர்முகப் போக்கை' அறிய மட்பாண் டங்களின் வகைப்பாட்டு ஆய்வு ஒரு ஆய்வூட்டக் கருவியாகவே கருத வேண்டும்.*

## குறிப்புகள்

1. Subbarayalu, Y., ***Report on Kodumanal Excavations,*** (Unpublished report, Tamil University, Thanjavur, 1988).

Rajan, K., ***Archaeology of Tamil nadu: Kongu Country,*** Delhi, 1994, pp.57-89. *ராஜன். கா., கொடுமணல் அகழாய்வு: ஓர் அறிமுகம், தஞ்சாவூர், 1994.*

2. Subbarayalu, ***op.cit.,*** pp.66-67.

3. Subbaryalu, "Vallam Excavations", ***Tamil Civilization,*** Vol. 2, No. 4, 1984.

4. ***Ibid,*** p. 17.

5. Subbrayalu., "Vallam excavations", ***Tamil Civilization,*** Vol. 2, No. 4, 1984.

6. ***Ibid,*** p. 53, Fig. 4, T. 48-52.

7. ***Ibid,*** p.65, Fig. 16, T. 185. .

8. Wheeler, R.E.M., Ghosh, A and Deva, Krishna; "Arikamedu: An Indo - Roman trading station on the east coast of India", ***Ancient India,*** No, 2, 1946.

9. *Ibid*, pp. 37-39.

10. *Ibid*, pp. 34-35.

11. *Ibid*, p.47

12. Kasinathan, Natana., et, al, ***Alagankulam: A Preliminary Report***, Madras. 1992, pp. 17-18.

13. Wheeler, Ghosh and Deva, ***op. cit.***, pp.51-52.

14. *Ibid*, p. 54, T6a, 6b.

15. *Ibid.* T6.

16. *Ibid*, pp. 57,58,89 & 90.

17. Narasimhaiah, B., ***Neolithic and Megalithic Cultures in Tamilnadu***, Delhi, 1980, p. 182.

18. ***Indian Archaeology - A Review***, 1974-75, p. 75.

19. Narasimhaiah, ***op. cit.***, p. 225, Fig. 31-43.

20. Subbarayalu, ***op.cit.***, 1984. p. 50, Fig.1-11.

21. Narasimhaiah, ***op. cit.***, p. 223. Fig. 31-144.

22. Subbarayalu, ***op.cit.***, 1984, p. 50, T6 & T7.

23. Narasimhaiah, ***op. cit.***, p.223, Fig. 29-18.

24. ***Ibid.***, p. 223, Fig. 29-18, 16, p. 225, Fig. 31-40, 45, 47.

25. ***Ibid.***, p. 223, Fig.29-3-7.

26. ***Indian Archaeology - A Review, 1964-65***, pp. 22-23; 1967-68, pp. 26-30.

27. ***Indian Archaeology - A Review, 1968-69***, p. 73.

28. ***Current Science***, 35þ23, 1966, p. 585.

29. Narasimhaiah, ***op. cit.***, pp.169-171; Rajan, ***op. cit.***, pp. 43-50.

---

** கொடுமணல் அகழாய்வில் நான் கலந்துகொள்ளவும் அங்குக் கிடைத்தத் தொல் பொருட்களை ஆய்வு செய்யவும் அனுமதி நல்கிய தமிழ்ப் பல்கலைக்கழகக் கல்வெட்டியல் துறைப் பேராசிரியர் எ. சுப்பராயலு அவர்களுக்கும் என் ஆய்விற்கு உரிய கருத்துக்களைக் கூறிய திருகா. ராஜன் அவர்களுக்கும் மற்றும் அத்துறையின் பணியாளர் அனைவருக்கும் நன்றி. சிறப்பாக, இந்தக்கட்டுரை தமிழில் மொழிபெயர்க்க உதவிசெய்த திரு. சங்கரன் அவர்களுக்கு நன்றியுரித்து. எனக்குப் பல வகையில் உதவிபுரிந்த கொடுமணல் கிராம மக்களுக்கும் என் மனதிற்கு ஆதரவு அளித்து வருகிற தஞ்சாவூர் மக்களுக்கும் என் அன்புமிக்க நன்றியுரித்து.*

# 22. துடையூர் சிற்பம்

கி. ஸ்ரீதரன், திருச்சி

திருச்சி - சேலம் நெடுஞ்சாலையில் திருச்சியிலிருந்து 15 கி.மீ. தொலைவில் துடையூர் என்ற ஊர் உள்ளது. இவ்வூரில் கொள்ளிடம் ஆற்றின் கரையில் முற்கால சோழர் கலைப்பாணியுடன் அழகிய சிற்பங்களுடன் ஒரு கோயில் உள்ளது. இக்கோயிலில் உள்ள இறைவனை கல்வெட்டுக்கள் திருக்கடம்பத்துறை உடைய மகாதேவர் என அழைக்கின்றன. தற்பொழுது விழமங்களேசுவரர் என அழைக்கப்படுகின்றார்.

இக்கோயிலுக்கு சற்று வடக்கே நெடுஞ்சாலைக்கு அருகே உள்ள வாழைத் தோப்பில் ஒரு கற்பலகை நிறுத்தி வைக்கப் பட்டுள்ளது. இதில் ஒரு பக்கத்தில் மேல் வரிசையில் நடுவில் யானையும் அதன் இரு பக்கங்களில் இரு விளக்குகளும், புடைப்புச் சிற்பமாக செதுக்கப்பட்டுள்ளன. கீழ்வரிசையில் விளக்கு, பாம்பு, அரிவாள், வாள், கோடரி ஆகியவை புடைப்புச் சிற்பமாகக் காணப்படுகின்றன. சிற்ப அமைப்பினைக் காணும்பொழுது 11-12ஆம் நூற்றாண்டைச் சேர்ந்ததாகக் கருதலாம். இக்கற்பலகையில் கல்வெட்டு ஏதும் காணப்படவில்லை.

'அத்திகோசத்தார்' என்ற குழுவைப் பற்றி கல்வெட்டுக்களும் இலக்கியங்களும் பேசுகின்றன. அத்திகோசத்தார் பற்றிய தமது ஆய்வுக்கட்டுரையில் ஆர். பூங்குன்றன் 'அத்திகோசம்' என்பது யானைப்படைத் தலைவர்களின் குழு என்பதைக் குறிப்பிடுகிறார். அத்திகோசத்தார் பற்றிய கல்வெட்டுக்கள் பெருவழிகளின் அருகிலேயே கிடைக்கின்றன. பூலாங்குறிச்சி, நல்லூர் (பெரியார் மாவட்டம்), வேப்பறை (பொள்ளாச்சி வட்டம்) ஆகிய இடங்களில் பெருவழிகளில் கல்வெட்டுக்கள் காணப்படுகின்றன. நல்லூரில் காணப்படும் கற்பலகையில் கத்தி, அரிவாள், குறுவாள், யானை, குதிரை போன்றவை செதுக்கப்பட்டுள்ளன. அத்திகோசத்தார் என்பவர் யானை வீரர்; வணிகக்குழுவினர் வைத்திருந்த படைப் பிரிவினர். அவர்கள் வாழ்ந்த பெருவழி ஊர்களில் தானம் அளிக்கும் போது அவர்களைப் பாதுகாவலர்களாக இருக்க வேண்டுகிறார்கள் என பூங்குன்றன் குறிப்பிடுகிறார்.

துடையூர் கற்பலகையிலும், யானை, அரிவாள், வாள், கோடரி போன்றவை காணப்படுகின்றன. சோழ நாட்டிலிருந்து கொங்குநாட்டுக்குச் செல்லும் சாலையில் இக் கற்சிற்பம்

காணப்படுகின்றது. 'அத்திகோசத்தார்' பற்றி இது குறிப்பிடுகிறது எனக் கொள்ளலாம். இதுபோன்ற சிற்பங்கள் பொறிக்கப்பட்டுள்ள கற்களை ஆய்வுசெய்தால் பண்டைய வணிகக் குழுக்களைப் பற்றி அறிந்துகொள்ள உதவும்.



ஒளிப்படம் - 17

# 23. தேள் மீதமர்ந்த காலன் சிற்பம்

*த. சந்திரகுமார், தஞ்சாவூர்*

காலனுடைய சிற்ப அமைதி பற்றிய செய்திகளை ஆய்வதே இக்கட்டுரை. பல கோயில்களில் தேள், பல்லி போன்றவைகள் கோபுரச் சுவர்களிலும், விதானங்களிலும் செதுக்கப்பட்டுள்ளன.

வேலூரை ஆண்ட சின்ன பொம்மு நாயக்கன் காலத்திலும் (1526 - 1595) இவரது மகனான, லிங்கம் பூபாலுடு (1596 - 1604) காலத்திலும் விரிஞ்சிபுரம் சிவன் கோயில் பெரிதும் வளர்ச்சியுற்றது. இங்கு உற்சவமண்டபம், பதினாலுகால் மண்டபம், நூற்றுக்கால் மண்டபம், சுற்றாலை மண்டபம் போன்ற பல மண்டபங்கள் எழுப்பப்பட்டன. இம்மண்டபத் தூண்களில் பல இடங்களில் தேள் மீதமர்ந்த தெய்வ வடிவத்தை காணலாம். இவ்வுருவங்கள் (ஒளிப்படம் 18, 20) இரண்டு கைகள் கொண்டு எந்த ஒரு ஆயுதமும் இன்றி ஒரு கால் படுத்தும் மற்றொரு கால் ஊன்றிய நிலையிலும் உள்ளன.

விஷ்ணுதர்மோத்திர புராணம் தேளை வாகனமாகக் கொண்ட தெய்வத்தைக் காலன் என்று குறிப்பிடுகிறது[1] யமனுக்கு மற்றொரு பெயராக காலனைக் குறிப்பிடுவதுண்டு. நரகங்களுக்குத் தலைவனாக யமனை புராணங்கள் கூறுகின்றன. புதிய உயிர்களைப் படைக்கவும், படைத்தவற்றைக் காக்கவும் பழையனவற்றை அழிப்பதே தர்மம் என்பது தத்துவம். அழிப்பது யமனின் தொழில். இது கொடுமையானது என்ற கருதியதினால், நஞ்சு கொண்ட தேளை அவனுக்கு உகந்ததாகக் கருதி அதனையே வாகனமாக அளித்தனர் போலும். ஸ்ரீதத்துவநிதி எனும் 19-ஆம் நூற்றாண்டு நூலில் இராகுவின் அதிதேவதையாக காலனைக் குறிப்பிட்டு காலனுடைய ரோமமாக தேள் வர்ணிக்கப்பட்டுள்ளது. இதனையே மூர்த்தியானம் எண் 186 கூறுகிறது. காலன் யமனுடைய ஏவல் தெய்வம் என்றும் குறிப்பிடுவதுண்டு.[2] இவைகளைக் கொண்டு நோக்கும்போது விரிஞ்சிபுரம் புடைப்புச் சிற்பம் காலனுடைய சிற்பம் என்று கொள்ளலாம். இவர் அதிபயங்கரமானவர் என்பதை சித்திரிக்கும் வகையில் ஊர்த்துவ கேசத்துடன் இருக்கிறார் (ஒளிப்படம் 20).

தேளை வாகனமாகக் கொண்ட காலனின் புடைப்புச் சிற்பம் ஒன்று காஞ்சிபுரம் ஏகாம்பரேசுவரர் கோயில் பதினாறுகால் மண்டபத்தூணில் காணப்படுகிறது. இம்மண்டபம் 17-ஆம்

நூற்றாண்டில் கட்டப்பட்ட நாயக்கர் கால கட்டட அமைப்பை ஒத்தது. விரிஞ்சிபுரம் கோயில் சிற்பம் போல் தனித்தில்லாமல் கைலாசபதியாக சிவனும் உமையும் உள்ள சிற்பங்களுடன் (படம் 19) செதுக்கப்பட்டுள்ளது. தேள் மீதமர்ந்த காலன் வணங்கிய நிலையில் உள்ளார்.



ஒளிப்படம் - 18



ஒளிப்படம் - 20



ஒளிப்படம் - 19

---

1. விஷ்ணுமோத்திர புராணம், மூன்றாவது காண்டம், அத்தியாயம் 51, ப. 221.

2. கே. எஸ். சுப்பிரமணிய சாஸ்திரி, ஸ்ரீதத்துவநிதி, தஞ்சாவூர், 1916, ப. 243.

# 24. பல்லவர் கால திக்பாலர்கள்

பி.டி. பாலாஜி, சென்னை

செங்கை எம்.ஜி.ஆர் மாவட்டம், திருப்பெரும்புதூர் வட்டம் மாங்காட்டில் களஆய்வு மேற்கொண்டபோது பல்லவர் காலத்தைச் சேர்ந்த திக்பாலர்களது கற்சிலைகள் கண்டுபிடிக்கப்பட்டன. எட்டு திக்பாலர்களில் மூவர்களது சிலைகள் மட்டுமே கிடைத்துள்ளன. இவை யனைத்தும் 3 அடி உயரத்தில் இவ்வூரிலுள்ள வைகுந்தப் பெருமாள் கோயிலில் காணப்படுகின்றன.

முதல் சிலை மேற்கூறிய கோயில் வாயிலின் இடப்புறம் உள்ளது. அமர்ந்த நிலையில் மூன்று கால்களையும், இரண்டு கைகளையும் கொண்டுள்ளது. வலப்புறம் ஒரு கால் தொங்கியவாறும், இடப்புறத்திலுள்ள இரு கால்களில் ஒன்று தொங்கியவாறும் மற்றொன்று மடங்கியவாறும், வலக்கை கதையை ஏந்தியும், இடக்கை தொடை மீது வைத்தும் காணப்படுகிறது. மூன்று கால்கள் உள்ளதால் இச்சிலையை, திக்பாலர்களில் ஒருவரான அக்னி என்று கூறலாம். ஆகம விதிப்படி அக்னிக்கு மூன்று கால்கள் உண்டு. சிதம்பரத்தில் உள்ள கோயிலில் மூன்று கால்களுடன் அக்னி நின்றகோலத்தில் காணப்படுவதை இங்கு நினைவில் கொள்ள வேண்டும் (படம் 21)

வாயிலின் வலப்புறம் உள்ள இரண்டாவது சிலை சுகாசனத்தில் வலது கை கதை ஏந்தியும், இடது கை தொடை மீது வைத்தும் காணப்படுகிறது. தென்னிந்தியக் கோயில்களில் கதையை ஆயுதமாகக் கொண்டு குபேரன், வாயு, எமன், நைருதி ஆகிய திக்பாலர்கள் கற்சிற்பங்களாக சித்தரிகக்கப் பட்டுள்ளனர். எனவே, இத் திக்பாலர்களில் ஒருவராக இச்சிலை இருக்க வேண்டும் (படம் 22)

கோயிலின் பின்புறம் வடகிழக்குத் திசையில் உள்ள மூன்றாவது சிலை சுகாசனத்தில் நான்கு கைகள் கொண்டு உள்ளது. வலது இரு கைகளில் ஒரு கை அபயத்திலும், மற்றொன்று பரசு ஏந்தியும் காணப்படுகிறது. இடுப்பிற்கு கீழ் ஆடை அழகாக செதுக்கப்பட்டுள்ளது. தோற்றத்தில் சிவனாகக் காணப்படுவதால் ஆகம விதிப்படி சிவனுக்குண்டான ஆயுதங்களையே பெரும்பாலும் கொண்டு விளங்கும் திக்பாலர்களில் ஒருவரான ஈசானியனைக் குறிப்பிடலாம். இதே போன்ற ஆயுதங்களை ஏந்தியவாறு அமர்ந்த நிலையில் ஈசானியனின் சிற்பத்தை லேபாக்ஷியிலுள்ள கோயிலில் காணலாம்.

மூன்று சிலைகளும் தோள்வளை, கைவளை, கால்களில் தண்டை, கழுத்தில் ஆரங்களும், உதரபந்தம் பூணூல் ஆகியவை களைக் கொண்டு ஒரே பாணியில் செதுக்கப்பட்டுள்ளன.



ஒளிப்படம் - 21



ஒளிப்படம் - 23



ஒளிப்படம் - 22

# 25. பாம்பின்தலை மீது ஆடும் விநாயகர்

ஆ. வேலுசாமி சுதந்திரன், தஞ்சாவூர்

பாம்பின்மீது நின்றாடும் விநாயகர் செப்புத் திருமேனி ஒன்று புதுக்கோட்டை அரசாங்க அருங்காட்சியகத்தில் உள்ளது (ஒளிப்படம் 24). காலியன் என்கிற பாம்பின்மீது நின்றாடும் கிருஷ்ணன் சிற்பம் காலியநர்தன மூர்த்தியென அழைக்கப்படும். பெரும்பாலும், கோயில்களில் இவ்வுருவம் வழிபாட்டுத் தகுதி அதிகம் பெறாது அலங்காரப் பொருளாகவே கருதப்படுகிறது. வடஇந்தியக் கலைவரலாற்றில் குப்தர் காலம் தொட்டே காலியகிருஷ்ண வடிவம் காணப்படுகிறது. தமிழகத் திருக்கோயில் களில், விசயநகரக் கால கோபுரங்களில் இச்சிற்பங்களைக் கண்ணுற முடியும்.

விநாயகர் பாம்பின்மீது நின்றாடும் தோற்றம் வேறெங்கும் வழக்கில் இல்லையெனலாம். எதற்காக இந்த வடிவம் கொடுக்கப் பட்டது. எந்தக் காலக்கட்டத்தில் தோன்றியது. இதன் வளர்ச்சி யாது என்ற கேள்விகளுக்கு உறுதியான விடையில்லை. கலை வடிவமைப்பை ஆதாரமாக வைத்து இச்சிற்பத்தை விஜயநகரக் காலத்திற்கு (கி.பி. 15 - 16 ஆம் நூற்றாண்டு) வரையறுக்காலம். வழிபாட்டு ஆதரவு இல்லாததால் இச்சிற்பம் சிறப்புப் பெறவில்லை.



ஒளிப்படம் - 24

# 26. சன்னியாசிக்கல் வழிபாடு

தி. சுப்பிரமணியன், தருமபுரி

தமிழகத்தில் சில பகுதிகளில் குறிப்பாக தருமபுரி மாவட்டம் வடஆர்க்காடு, தென் ஆர்க்காடு மாவட்டங்களில் சன்னியாசிக்கல் வழிபாடு உள்ளது. சன்னியாசிக்கல், மந்தைக்கல், சிலைக்கல், மந்திரக்கல் போன்று பல பெயர்களில் இக்கற்கள் வழிபடப் படுகின்றன. சன்னியாசிக்கற்கள் மண்டு, மந்தை, சாலைகளில் ஓரங்களிலும் பொதுஇடங்களிலும் நடப்பட்டுள்ளன.*

சன்னியாசிக்கல் பொதுவாக இரண்டு கற்களாக கிழ்புறம் ஒன்றும் மேல்புறம் ஒன்றும் இரண்டு முதல் நான்கு மீட்டர் இடைவெளியில் எதிர் எதிராக நடப்பட்டிருக்கும். சில இடங்களில் ஒரே கல் தனித்தும் நடப்பட்டிருக்கும். இந்த இரண்டு கற்களையும் இணைக்கும் வகையில் இடையே உள்ள தூரத்தில் ஒன்றிரண்டு அடி அகலம் கொண்ட வாய்க்கால் ஒன்று வெட்டப்பட்டிருக்கும். சில இடங்களில் இந்த வாய்க்கால் கருங்கற்களினால் தேவையான போது பயன்படுத்திக் கொள்ளும் வகையில் நிரந்தரமாகக் கட்டப் பட்டிருக்கும்.

சன்னியாசிக்கல்லுக்கு பொதுவாக தை மாதத்தில் விழா எடுக்கின்றனர். கால்நடைகளுக்கு சில தீர்க்கமுடியாத கோமாரி நோய் போன்றன வருகின்ற போது சன்னியாசிக்கல் வழிபாடு செய்கின்றனர்.

மாட்டுப்பொங்கல் அன்று இரண்டு கற்களையும் கால்வாய்ப் பகுதியையும் சுத்தம் செய்து மஞ்சள், குங்குமம் போன்றவை வைத்துப் பூசை செய்கின்றனர். பின்னர் 101, 501, 1001 என்ற எண்ணிக்கையில் குடத்தில் தண்ணீர் கொண்டு வந்து மஞ்சள் கலந்து கிழக்கு நோக்கி இருக்கின்ற கல்லின் மேல் ஊற்றுகின்றனர். இந்நீர் வாய்க்காலில் நிறைந்து காணப்படும். இக்கல்லுக்கு ஆடுபலி கொடுத்து அந்த ஆட்டின் தலையையும் வாய்க்காலின் உட்பகுதியில் வைத்து மூடிவிடுகின்றனர். பின்னர் ஊரிலுள்ள எல்லாக் கால்நடைகளையும் கொண்டு வந்து அலங்கரித்து இரண்டு சன்னியாசி கற்களுக்கிடையே உள்ள தண்ணீரின் மேல் வடக்குப்புறமாக இருந்து ஓட விடுவார்கள். இவ்வாறு செய்வதால் கால்நடைகளுக்கு வருகின்ற நோய் தீரும் என்றும் கால்நடைகளில்

---

* தென்னார்க்காடு பகுதியிலுள்ள சன்னியாசிக் கற்களைப் பார்க்க உதவிய இராசன் அவர்களுக்கு நன்றி.

இனப்பெருக்கம் அதிக அளவில் ஏற்படும் என்றும் நம்புகின்றனர். இத்தகைய விழா தருமபுரி பகுதியில் செக்கானப்பட்டி, நத்தக் காடு, சேலப்பசனம்பட்டி போன்ற சுமார் 30க்கும் மேற்பட்ட ஊர் களில் இன்றும் நடைபெறுகின்றது.

தென்னார்க்காடு மாவட்டத்தில் இந்த விழா மாறுபட்டு காணப்படுகிறது. இப்பகுதியில் சன்னியாசிக்கல்லுக்கு கீழே ஒரு பாதாள அறை நிரந்தரமாக உள்ளது. இந்த அறையின் நான்கு பக்கங்களும் கற்பலகையைக் கொண்டு சுவர்போன்று தடுத்துள்ளனர். விழாவின்போது சன்னியாசிக்கல்லுக்குப் பூசை செய்து, இங்கும் 101,501 போன்ற எண்ணிக்கையில் தண்ணீர்க்குடம் கொண்டு வந்து இதன்மேல் ஊற்றுவார்கள். பின்னர் கல்லின் அருகிலுள்ள பாதாள அறையைத் திறந்து ஆடு, பன்றி, சேவல் ஆகிய மூன்றையும் உயிருடன் பாதாள அறையில் போட்டு பலகைக் கல்லைக் கொண்டு மூடிவிடுவார்கள். பின்னர் கால்நடை களை சன்னியாசிக் கல்லுக்கு வடக்கில் நிறுத்தி பூசை செய்து தண்ணீரின் மேல் ஓடவிடுவார்கள். இங்கும் கால்நடைகளுக்கு நோய் தீரும் என்றும் இனவிருத்தி அதிகம் இருக்கும் என்றும் நம்புகின்றனர்.

சன்னியாசிக் கற்களாக பெரும்பாலும் சீர் செய்யப்பட்ட கற்களையே நடுகின்றனர். பலவற்றில் எழுத்துக்கள், குறியீடுகள் போன்றவை உள்ளன. கட்டம் போட்டு அந்தக் கட்டங்களின் உட்பகுதியில் எழுதியுள்ளனர். 18 முதல் 108 கட்டங்கள் வரை கற்களில் காணப்படுகின்றன. இந்த எழுத்துக்களைத் தெளிவாகப் படிக்க இயலவில்லை. எனினும் செக்காரப்பட்டியிலுள்ள கல்லில் ஐந்து எழுத்துக்கள் மட்டும் மாறிமாறி எழுதப்பட்டுள்ளன. இந்த எழுத்துக்கள் வட்டெழுத்துக்களைப் போன்று உள்ளன. வட்டெழுத்துக்கள் இப்பகுதியில் பல நடுகற்களில் காணப்படு கின்றன. இந்நடுகற்களில் பல கால்நடைகளைக் கவருதல், மீட்டல் போன்ற பூசலில் உயிர்நீத்தவர்களுக்கு எடுக்கப்பட்டவை. எனவே கால்நடை வளர்ப்புச் சமுதாயம் அக்காலத்தில் இப்பகுதியில் இருந்துள்ளது. கால்நடையே சொத்தாகவும் கருதப்பட்டது. எனவே கால்நடைகளில் நலன் கருதி எடுக்கப்பட்ட சன்னியாசிக் கற்களில் வட்டெழுத்துக்கள் உள்ளதால் இதை சுமார் கி.பி. 8, 9ஆம் நூற்றாண்டைச் சார்ந்தவை என்று கொள்ளலாம்.

# 27. கோவளம்: ஓர் இடைக்காலத் துறைமுகம்

பா. ஜெயக்குமார், தஞ்சாவூர்

கோவளம்பட்டணம் அல்லது கோவிளம்பட்டணம் தற்போதைய கோவளம் ஆகும். செங்கை எம்.ஜி.ஆர். மாவட்டம் செங்கல்பட்டு வட்டத்தில் கிழக்குக் கடற்கரையில் (12° 47' வடக்கு 90° 15' கிழக்கு) அமைந்துள்ளது. இடைக்காலத்தில் துறைமுகப் பட்டினமாக விளங்கிய இக்கோவளம் பல்லவர் காலத்தில் முக்கிய துறைமுகமாக விளங்கிய மாமல்லபுரத்திலிருந்து தெற்கே 18 கி.மீ தொலைவிலும் சென்னையிலிருந்து 40கி.மீ தொலைவிலும் அமைந்துள்ளது.

தமிழில் கோவளம் (கோ அளம்) என்பதற்கு 'அரசரின் உப்பளம்' எனக் கொள்ளலாம்.[1] இவ்வூர்க் கைலாசநாதர் கோவிலில் உள்ள ஒரு கல்வெட்டு 'ஓபாச்சி அம்மன் என்பவருக்கு பாரா பத்தியம் ஆன கோவிளம் பட்டணம்' என்று குறிப்பிடுகின்றது.[2] மேலும் கோவளம் என்பதற்கு தமிழில் "கடலுக்குள் நீண்ட தரையின் முனையிலுள்ள இடம்" என்றும் பொருள் கொள்ளலாம்.[3] இதற்கு ஏற்றாற்போல இவ்வூர் இயற்கையாகவே கடற்கரையில் சற்று உள்நோக்கிய நிலப்பரப்பின் முனையில் அமைந்துள்ளதை நிலப்படங்களில் காணமுடிகின்றது.

இக் கடற்கரைப் பட்டினம் ஒரு துறைமுகமாக இருந்ததா என்பதற்கு கல்வெட்டில் அதிகமான சான்றுகள் இல்லாவிட்டாலும் கூட இடைக்காலத்தில் இவ்விடம் ஒரு சிறந்த வியாபார மைய மாக இருந்ததைக் கல்வெட்டுக்கள் ஓரளவிற்குத் தெளிவுபடுத்து கின்றன. இங்குக் கிடைக்கின்ற 13-ம் நூற்றாண்டைச் சார்ந்த கல்வெட்டுகளில் ஒன்று நாவலூர் என்ற ஊரைச் சேர்ந்த வியாபாரி இக்கடற்கரைப் பட்டினம் வந்திருந்து இங்குள்ள கோவிலில் தக்ஷிணாமூர்த்தியின் உருவத்தை அமைத்துக் கொடுத்த தாகக் கூறுகிறது.[4] நாவலூர் புத்தகாஞ்சிக்கு (காஞ்சிபுரம்) அருகில் அமைந்திருந்ததை மற்றொரு கல்வெட்டு சுட்டுகின்றது.[5]

---

1. தமிழ் அகராதி, பக்.168,1169
2. இக. 1934-35, எண்10.
3. தமிழ் அகராதி, ப. 1198.
4. இக. 1934-35, எண் 11.
5. இக. 1934-35, எண் 13.

இதன்படி இப்பட்டினத்துக்கும் உள்நாட்டின் பிற பகுதிகளைச் சேர்ந்த வியாபாரிகளுக்கும் இடைக்காலத்திலிருந்த வணிகத் தொடர்பை அறியலாம். மேலும், கல்வெட்டின் வாயிலாக பாக்கு, புளி போன்ற வியாபாரப் பொருள்கள் வந்திறங்கிச் சென்றதை அறிய முடிகின்றது.[6] இப்பொருள்களின் மீது பாரம் ஒன்றுக்கு 1/2 பணம் வீதம் வரி வசூலிக்கப்பட்டது. இவ்வரிகள் அரசரின் ஆணையின்படி இங்குள்ள கோவிலுக்கு செலவிடப் பட்டது.

இப்பகுதியில் களஆய்வு மேற்கொண்டபொழுது சில தொல்லியல் பொருள்கள் கிடைக்கப் பெற்றன.[7] இங்குள்ள கன்னிகாபரமேசுவரி கோவிலுக்கு எதிரிலுள்ள 300 சதுரமீட்டர். பரப்பளவுள்ள ஒரு மணல்மேட்டில் கி.பி. 16-17ஆம் நூற்றாண்டு மண்பாண்ட ஓடுகள் கிடைத்திருக்கின்றன. குறிப்பாக இங்கு சீனா மற்றும் அரேபியா நாட்டு மண்பாண்ட ஓடுகள் காணப்படுவது குறிப்பிடத்தக்கது. இவ்வோடுகள் வெள்ளை மற்றும் நீலநிற வண்ணத்திலான கி.பி. 13-14ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தவைகளாகும். இடைக்காலத்தில், சீனா மற்றும் அரேபியாவுடன் கொண்டிருந்த கடல் வணிகத்துக்கு இப்பொருள்கள் சான்று கூறும். மேலும், இங்கு மிகவும் துருப்பிடித்த நிலையில் புதைந்து கிடக்கின்ற 10 1/2 அடி நீளமுள்ள ஒரு இரும்பு நங்கூரம் இத்துறைமுக நகரம் பிற்காலங்களிலும் கலங்களின் வருகையைப் பெற்று ஒரு சிறந்த கடல்சார் வியாபார மையமாக இருந்ததைக் காட்டுகின்றது.

---

6. இக. 1934-35, எண் 10.

7. கட்டுரையாளர் இப்பகுதியில் 10.12.89 அன்று மேற்கொண்ட களஆய்வு மற்றும் 1992-இல் சென்னைப் பல்கலைக்கழகம் தொல்லியல் துறையைச் சேர்ந்த ஆசிரியர்கள், மாணவர்கள் மேற்கொண்ட களஆய்வு.

# 28. சோழர் கால உணவு

பொ. பரமேஸ்வரி, தஞ்சாவூர்

சோழர் காலக் கல்வெட்டுக்கள் மூலம் இடைக்காலத் தமிழகத்தின் சில உணவு வகைகளை அறிய முடிகிறது. இவை கோயில்களில் கடவுளுக்குப் படைக்கப்பட்ட உணவு வகைகளையும், துறவிகள் மற்றும் பிராமணர்கள். ஆகியோர்க்கு உணவிட்ட செய்திகளையும் கூறுகின்றன. சமைத்த உணவைக் கடவுளுக்குப் படைக்கும் வழக்கம் முதலாம் பராந்தகன் காலத்தில் தொடங்கியது. 11-ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் கடவுளுக்குப் படைக்கும் உணவு வகைகளின் எண்ணிக்கை அதிகரித்தது.

முதலில் கோயில்களுக்கு அதிக எண்ணிக்கையில் ஆடுகள் தானமாகக் கொடுக்கப்பட்டன. பசுவின் நெய் போன்றே ஆட்டிலிருந்து பெறப்பட்ட நெய்யும் விளக்கெரிக்கப் பயன்பட்டது.[1] முதலாம் பராந்தகன் காலத்தில் வெண்குன்றக் கோட்டத்துப் பொன்னூர் நாட்டு ஸ்ரீகண்டபுரத்து சித்தப்பெரும்பள்ளிக்கு நாளொன்றுக்கு நெய் இருநாழி என பத்துநாழி நெய்யிற்கு இருநூறு ஆடுகள் கொடுக்கப்பட்டன.[2] ஆட்டின் நெய் விளக்கெரிக்க மட்டுமின்றி சில உணவுப் பொருள்களைச் சமைப்பதற்கும் பயன்பட்டதாகத் தெரியவருகின்றது.[3] பொதுவாக நெய் சமைப்பதற்கு பயன்பட்டதை "பொரிக்கறி பொரிக்க நெய் ஒரு பிடி." என் கல்வெட்டுத் தொடர் தெளிவாக உணர்த்துகிறது.[4]

நெல் உணவுத் தானியமாக மட்டுமின்றி பொருளாதாரத்திலும், பண்டமாற்று முறையிலும் முக்கிய இடத்தினை வகித்துள்ளது. பணியாட்களுக்குக் கூலியாகவும், கோயில்களில் தானமாக அளிக்கப்படும் பொருளுக்கு இணையாகவும் நெல் பயன்படுத்தப்பட்டுள்ளது.[5] 'செந்நெல்' என்ற சொல் அதிகமாக வழக்கில் இருந்தது.[6] பொதுவாக சிவப்பு நிற நெல் தரம் குறைந்ததாகக் கருதப்பட்டாலும் 'இராஜநிகண்டு' செந்நிறநெல் சிறந்தது என்றும், உடலுக்கு உறுதியைத் தருகிறது என்றும் கூறுகிறது. நீர் நிறைந்த நன்கு உழப்பட்ட நிலத்தில் விளைந்த நெல் சுவையுடையதாகவும், உடலுக்கு சீரான வெப்பத்தன்மையை கொடுக்கக் கூடியதாகவும் சிவந்த நிறத்தினை உடையதாகவும் இருக்கும் என்று 'போஜன குதூகலம்' செந்நெல்லைக் குறிப்பிடுகிறது.[7] பல்லவர் காலக் கல்வெட்டில் இரை நெல், நார்நெல் என்ற இருவகை நெல் குறிப்பிடப்படுகின்றன.[8] இவ்வகை நெல்களைப் பற்றி மேலும் தரவுகள் கிடைக்கவில்லை.

'பத்தெட்டுக்குத்தல்'[9] 'பதக்காறுகுத்தல்'[10] என்ற சொற்கள் கைக்குத்தல் முறையால் நெல்லை அரிசியாக்குவதைக் குறிப்பிடுகின்றன. மூன்றாம் இராசராசன் காலத்தில் நெல் குற்றும் சாலைக்கு திருவேகம்பமுடையான் செந்தாமரைக் கண்ணனான வைணாதரயன் ஐந்து பெண்களைக் கொண்டுபோய் விட்டான் என்று கல்வெட்டு குறிப்பிடுகிறது. நெல் குற்றும் சாலைகளில் பெண்கள் பணிக்கு அமர்த்தப்பட்டதின் வாயிலாக கைக்குத்தல் அரிசி அன்றாட வாழ்க்கையில் அதிகமாகப் பயன்படுத்தப் பட்டுள்ளது என்பதை அறியலாம்.[11] நெல்லைக் குற்றி அரிசி பெறும் முறையில் எந்த அளவிற்கு நெல்லைக் குற்றி சிறந்த அரிசி யினைப் பெறமுடியும் என அறிந்து கொள்வதற்கு ஏற்றவாறு சில சொற்கள் பயன்படுத்தப்பட்டன. 'ஐந்திரண்டு வண்ண நெல்லாக்கி' என்ற தொடரில் ஐந்து பங்கு நெல்லிற்கு இரண்டு பங்கு அரிசி கிடைக்கும்வரை குற்றப்பட்டது.[12] உத்தமசோழனின் கோனேரி ராஜபுரம் கல்வெட்டு,

> அரிசி தூணிக்கு குறுவாள் கூலியுட்பட ஐந்திரண்டு
>
> வண்ணத்தால் செந்நெல் இருதூணிப் பதக்கு

என்று குறிப்பிடுகிறது.[13] நான்கு நாழி அரிசிக்காக ஒரு குறுணி மற்றும் இரண்டு நாழி நெல் கொடுத்ததை வீரராஜேந்திரன் காலத்து திருமுக்கூடல் கல்வெட்டு குறிப்பிடுகிறது.[14] அரிசி வகையில் பழவரிசி[15], பூரிக்குத்தலரி (பூரிஅரிசி)[16] மற்றும் வெள்ளையரிசி17 என்ற சொற்கள் காணப்படுகின்றன. பழவரிசி என்பது சேமித்து அல்லது பாதுகாத்து வைக்கப்பட்ட பழைய அரிசியினைக் குறிக்கிறது. இந்த அரிசி குழையும் தன்மையின்றி சமையலுக்கு உகந்ததாக இருக்கும். பூரிக்குத்தலரிசி தரம் குறைந்த வகையைச் சேர்ந்ததால் இதனை மட்டையரிசி என்பர்.[18] கூலிக்காக கொடுக்கப் பட்ட அரிசி இவ்வகையைச் சார்ந்தது. வெள்ளையரிசியும், பூரி யரிசியின் தன்மையுடையதே. வெள்ளையரிசி மூன்று மாதங்களில் விளையக்கூடிய குறுவை நெல் வகையைச் சார்ந்தது. இது வெள்ளைக் குறுவை என்றும் அழைக்கப்படுகிறது. திட்டக்குடி கல்வெட்டிலிருந்து கூலிக்கு வெள்ளையரிசியும், பூரியரிசியும் கொடுக்கப்பட்டதை அறியலாம்.[19]

அரிசிக்கு அடுத்து அதிகம் இடம்பெறும் பொருள் பருப்பு ஆகும்.[20] ஒரே வகையான பருப்பினை பயற்றம்பருப்பு, பச்சைப் பயறு என்ற இரு சொற்களாலும் குறித்தனர். குலோத்துங்கள் காலக் கல்வெட்டில் 'முளைப்பயறு' என்ற சொல் காணப்படுகிறது. பயறு வகைகளை முளைகட்டிப் பயன்படுத்தும்போது நிறைய உயிர்ச்சத்து கிடைக்கின்றது. பழங்கள், பசுங்காய்கனிகள் ஆகியவற்றில் கிடைக்கக்கூடிய சத்துக்களை முளைகட்டிய பயிரில் பெறமுடிகிறது.[21] பருப்பை நீர் தெளித்து மூன்று நாட்கள்

வைத்திருந்தால் பருப்பில் முளை தோன்றும். இதனை முளை கட்டுதல் என்பர். அதன்பின் பருப்பினை காயவைத்து உடைக்கும். பொழுது மிக எளிதாக தோல் நீக்கப்பெற்று உடைத்த பயறு கிடைக்கின்றது. பயிரினைக் கெடாமல் நீண்டநாள் சேமித்துப் பாதுகாக்கப் பயன்படும் இம்முறை இன்றும் தமிழகக் கிராமங்களில் வழக்கத்திலிருந்து வருகிறது. இவ்வகைப் பயிர்கள் தனித்தன்மை வாய்ந்த சுவையினைத் தருவதாகக் கருதப்படுகிறது.

சர்க்கரை, அக்காரம்.[22] கண்டசர்க்கரை[23] என்ற சொற்களால் குறிக்கப்பட்டது. உப்பின் மதிப்பை இரண்டு நாழி உப்பிற்கு நான்கு நாழி நெல் கொடுக்கப்பட்டதிலிருந்து அறியலாம்.[24] நிருபதுங்கவர்மனின் திருவடிக்கல்வெட்டு 'கறிக்கு காயம் இரு செவிடு' என்று பெருங்காயத்தினைக் குறிப்பிடுகிறது.[25] காயம் என்ற சொல் காரம் என்பதனைக் குறிக்கும் பொருளில் சீவக சிந்தாமணியில் 'காயத்தின் குழம்பு தீற்றி' என்று பாடப்பட்டுள்ளது.[26] மிளகு, சீரகம் பற்றிய குறிப்புகளும் கிடைக்கின்றன.[27] எண்ணெய், நெய்யினால் தயார் செய்த பண்டங்கள் செறிக்க மிளகு அதிக பயன்பட்டது. முதலாம் பராந்தகன் காலக் கல்வெட்டு ஒன்றில் 'புளிப்பழவடை' என்ற சொல்லைக் காணலாம்.[28] விதைகள் நீக்கிய தூய புளியினை அடையாகத் தட்டி பயன்படுத்தியதை இந்தச் சொல் குறிக்கின்றது.

சமைக்கப்பட்ட உணவு வகைகளில் அவற்றின் சேர்க்கைப் பொருளின் அளவும் குறிக்கப்பட்டுள்ளன (அட்டவணை). இதில் அக்காரஅடிசில், பயற்றுப்போனகம், கும்மாயம் ஆகியவை ஒரே வகையான உணவாக இருந்தாலும், இவை தயாராகும் முறையில் அவற்றின் சேர்க்கைப் பொருளின் விகிதங்கள் மாறுபடுகின்றன. "கும்மாயம் உள்ளிட அஞ்சுகாய்"[29] "கும்மாயம் உள்ளிட்ட கறிநாலும்"[30] என்பதன் மூலம் கும்மாயம் உணவு வகையில் முக்கிய இடம்பெற்றதை அறியமுடிகிறது. கருநாடகத்தில் கும்மாயம் 'அய கிரீவமட்டு' என்று வழங்கப்படுகிறது. இன்றும் மலபாரில் 'புழுக்கல்' என்ற பெயரில் மார்கழி திருவாதிரை. மாசிமகம் ஆகிய விழா நாட்களில் தயாரிக்கப்படுகிறது. கறிவகைகளும் பல்வேறு சுவைகளில் புளிக்கறி, பொரிக்கறி,[31] வெம்புழுக்கு[32] என்ற பெயர்களில் தயாரிக்கப்பட்டன. உணவின் இறுதியில் வெற்றிலை உண்பது வழக்கமாக இருந்தது. வெற்றிலையைக் குறிக்க பற்றிலை,[33] அடைக்காயமிர்து[34], இலையமுது,[35] தெரியிலை,[36] வெறுயிலை[37] என்ற சொற்கள் பயன்பட்டுள்ளன.

கோயிலுக்குப் படைக்கப்பட்ட அனைத்து வகை உணவு வகைகளும் மிகுந்த அக்கறையுடனும், சுவையுடனும் தயாரிக்கப் பட்டன. அப்பம் தயாரிக்ககப்பயன்பட்ட 'கருவாழைப்பழம்' என்ற சொல் கல்வெட்டில் காணப்படுகிறது. பதினாறாம்

நூற்றாண்டில் இந்தச் சொல் வழக்கில் இருந்ததை போஜன குதூகலம் குறிப்பிடுகிறது. இந்நூல் தரும் செய்தியிலிருந்து மருத்துவ குணங்கள் நிறைந்ததாக இப்பழம் இருந்ததை அறியலாம்.

**உணவு வகை அட்டவணை**

| கல்வெட்டு எண் | உணவு வகை | சேர்க்கைப் பொருள்கள் |
|---|---|---|
| 1. தெக, 19, எண் 60 | அக்கார அடிசில் | அரிசி, சர்க்கரை, பருப்பு பால், வாழைப்பழம், நெய் |
| 2. தெக, 3, எண் 151 | கும்மாயம் | பருப்பு, சர்க்கரை |
| 3. தெக, 8, எண் 624 | பயற்றுப் போனகம் | சர்க்கரை, அரிசி, பருப்பு (அரிசியைவிட பருப்பின் அளவு அதிகம்) |
| 4. தெக, 24, எண் 9 | அப்பம் | அரிசி, சர்க்கரை, மிளகு, நெய், சீரகம், கருவாழைப் பழம், தேங்காய். |
| 5. தெ.க, 5, எண் 273 | பிட்டு | - |
| 6. தெ.க, 8, எண் 43 | பணியாரம் | இனிப்பு சுவையுடையது. |
| 7. தெ.க, 3. எண் 80 | திருக்கண்ணா மடை | அரிசி, நெய், சர்க்கரை, வாழைப்பழம். |
| 8. தெ,க, 8, எண் 653 | திருப்பிண்டி | மாவுப்பொருளாக இருக்கலாம். (பிண்டி என்பதற்கு தினைமா என்று சதுரகராதி பொருள் கூறுகிறது).[38] |

**அடிக்குறிப்புகள்**

1. தெக, 19, எண் 116.

2. தெக, 17, எண் 51.

3. சோழநாட்டுப் பகுதியில் இப்பழக்கம் இருந்துவந்ததை 16-ஆம் நூற்றாண்டைச் சார்ந்த போஜன குதூகலம் என்ற நூலிலும் காணலாம். இரகுநாதஸ்ரி போஜன குதூகலம், சரஸ்வதிமஹால் நூலகம், தஞ்சாவூர், 1988, ப.176.

4. தெக, 13, எண் 35.

5. தெக, 8, எண் 652.

6. தெக, 3, எண் 151-எ

7. போஜன குதூகலம், ப. 3
8. தெக, 19, எண் 375.
9. தெக, 19, எண் 22.
10. தெக, 8, எண் 627
11. தெக, 4, எண் 518.
12. தெக, 8, எண் 529.
13. தெக, 3, எண் 151-அ.
14. இக, தொகுதி 21, ப. 245.
15. தெக, 24, எண் 7.
16. தெக, 8, எண் 291.
17. மேலது.
18. தமிழ் அகராதி (லெக்சிகன்), 5, பக் 2849.
19. தெக, 8, எண் 291.
20. தெக, 19, எண் 60
21. கலைக்களஞ்சியம் 2, ப. 259.
22. தெக, 13, எண் 91.
23. தெக, 7, எண் 485.
24. இக, 21, ப. 246.
25. தெக, 12, எண் 71.
26. சீவகசிந்தாமணி, 788.
27. தெக, 24, எண் 9.
28. தெக, 7, எண் 529.
29. தெக, 12, எண் 71.
30. தெக, 9, எண் 22.
31. தெக, 13, எண் 35.
32. தெக, 13, எண் 44.
33. தெக, 8, எண் 560.
34. மேலது.
35. தெக, 19, எண் 250.
36. தெக, 8, எண் 624.
37. தெக, 13, எண் 91.
38. வீரமாமுனிவர், சதுரகராதி, ப. 70.

# 29. காத தூரம்

ஆர். மாணிக்கம், தருமபுரி
அ. கந்தசாமி, நாமக்கல்

வளர்ந்து வரும் அறிவியல் முன்னேற்றத்தின் விளைவில் குறுகிவரும் பூமியில் அனைத்துலகிற்கும் ஒரே அலகு (மீட்டர்) பயன்படுத்துவது எளிதாகியுள்ளது. ஆனால் பழங்காலத்தில் நாட்டுக்கு நாடு அளவுமுறைகள் வேறுபட்டன. தென்னாட்டில் காதம், கூப்பிடுதூரம், யோசனை போன்ற சில அளவுமுறைகள் பயன்பாட்டில் இருந்தன. கீழ்வரும் வாய்ப்பாட்டு அளவுமுறை பண்டைக்காலத்தில் பயன்பட்டதாகக் கருதப்படுகிறது.

| | |
|---|---|
| 6 விரல் | = 1 சாண் |
| 2 சாண் | = 1 முழம் |
| 2 முழம் | = 1 கோல் |
| 4 கோல் | = 1 தண்டம் |
| 500 தண்டம் | = 1 கூப்பிடுதூரம் |
| 4 கூப்பிடுதூரம் | = 1 காதம் |
| 4 காதம் | = 1 யோசனை |

மேற்படி வாய்பாட்டின்படி கணக்கிடும்போது 24 விரல் 1 கோல் என்றாகிறது.

1 விரல் 1 3/8" என சொல்லப்படுகிறது. அதன்படி கணக்கீடு செய்தால்,

1 காதம் = 6705.60 மீ = 6.706 கிமீ.

= 4.191 மைல்

தகடூர் பகுதியில் அதியமான் காலத்தில் மக்களால் பயன் படுத்தப்பட்ட சாலையாகக் கருதப்படும் அதியமான் பெருவழியில் அமைந்துள்ள இரண்டு "காதக்கல்" கல்வெட்டுக்களைக் கொண்டு தூரத்தைக் கணக்கிட்டுப் பார்ப்போம்.

இவ்வழி நாவற்தாவளம் என்ற பட்டணத்திற்குச் செல்லும் வழியென கல்வெட்டு காட்டுகிறது. ஒரு கல்லில் "காதம் 29" எனக் குறிக்கப்பட்டு தருமபுரி அருகே பதிகால்பள்ளம் என்ற இடத்தில் (12°7' 20" வடக்கு, 78°13' 0" கிழக்கு) அமைந்துள்ளது.

மற்றொரு கல்லில் காதம் 27' என குறிக்கப்பட்டு தருமபுரிக்கு வடக்கே கிருஷ்ணகிரி சாலையில் மாட்லாம்பட்டி அருகே

கெங்கிசெட்டிப்பட்டியில் (12° 13' 20" வடக்கு 78° 13' 0" கிழக்கு) அமைந்துள்ளது.

மேற்கூறிய இரண்டிற்குமிடையே உள்ள தூரத்தை நேரடியாகவும் நிலப்படத்தின் உதவியுடனும் (ஜி.ஐ. சீட் 571/4) கணக்கிடும்போது,

1. நெடுஞ்சாலை வழியாக

| | |
|---|---|
| காதம் 29- பாப்பாரப்பட்டி நான்கு ரோடு - அளே<br>தருமபுரி - பைசுபள்ளி ஏரி - செங்கிசெட்டிப்பட்டி<br>காதம் 27 | 20 கி.மீ.<br>அல்லது<br>12.50 மைல் |

அதாவது 1 காதம் = 10 கி.மீ. அல்லது 6.25 மைல்

2. மாட்டுவண்டிப் பாதை மற்றும் நெடுஞ்சாலைவழி

| | |
|---|---|
| காதம் 29 - பென்னாகரம் ரோடு அதியமான்<br>கோட்டை - நான்கு ரோடு - குமாரசாமிப்பேட்டை<br>மாட்டுகாரண பள்ளி - அளே தருமபுரி - பைசுபள்ளி<br>ஏரி - கெங்கிசெட்டிப்பட்டி - காதம் 27 | 17.40 கி.மீ<br>அல்லது<br>10.90 மைல் |

அதாவது 1 காதம் = 8.70 கி.மீ (அ) 5.44 மைல்

இந்த இரண்டு அளவுகளுமே வாய்பாட்டின் மூலம் கணக்கிட்ட அளவுக்கு சற்று அதிகமாக உள்ளது. எனவே முற்காலத்தில் இந்த இரண்டு கல்வெட்டுகளின் இடையே வேறொரு குறைந்த நீளமுள்ளவழி இருந்திருக்கக்கூடும். நிலப்படத்தின் உதவியுடன் இந்த இரண்டு கல்வெட்டுகளின் இடையேயுள்ள நேர்க்கோட்டு தூரம் 8.60 மைல்கள் என கணக்கிடப்பட்டுள்ளது. அதாவது 1 காதம் 4.30 மைல் என்றாகிறது. 24 கோல் நீளப்படி 1 காதம் = 4.2 மைல்.

இந்த அளவு வாய்பாட்டு அளவுக்கு சற்றே ஏறக்குறைய பொருந்தி வருகிறது. ஆகவே, காதத்தின் அளவைத் துல்லியமாகக் கூறமுடியாவிட்டாலும் ஒரு காதம் என்பது 4 முதல் 5 மைல் தூரம் இருக்கலாம் என்ற முடிவுக்கு வரலாம்.

# 30. கொற்றவை வழிபாடும் மறவரும்

கரு. இராசேந்திரரன், மேலப்பனையூர்

## தாய்த் தெய்வங்களும் இலக்கியங்களும்

சங்க இலக்கியங்கள் தாய்த் தெய்வத்தை பலவாறு புகழ்ந்து பேசுகின்றன. அணங்கு (அகம். 16,22) ஐயை (வச்சணந்திமாலை 39), கடல்கெழு செல்வி (அகம். 370, நற்றிணை 155), கானமர் செல்வி (அகம். 345), கொற்றவை (திருமுருகாற்றுப்படை 258). பாவை (அகம். 345, 369, 370), பழையோள் (திருமுருகாற்றுப்படை 59) என்று பலபடப் பேசுகின்றன. இவை அனைத்தும் உமையை மையமாகக் கொண்டனவாகவே தெரிகிறது. சிலப்பதிகார வழக்குரை காதையில் கண்ணகியின் கோலத்தை வாயிலோன் வாயிலாகக் கூறவந்த இளங்கோவடிகள்,

> அடர்த்தெழு குருதி அடங்காப் பசுந்துணிப்
> பிடர்த் தலைப் பீடம் ஏறிய மடக்கொடி
> வெற்றிவேல் தடக்கைக் கொற்றவை அல்லள்
> அறுவர்க்கு இளைய நங்கை இறைவனை
> ஆடல் கண்டருளிய அணங்கு சூர்உடைக்
> கானகம் உகந்த காளி தாருகன்
> பேருரம் கிழிந்த பெண்ணும் அல்லள்

என்று கூறுவதும் இக்கருத்தை உறுதி செய்யும்.

## வெற்றியும் வெற்றிச் செல்வியும்

கொற்றம் என்னும் சொல், கொல், வெற்றி, வீரம், வன்மை என்று பல பொருள்தரும் ஒரு சொல்லாகும். இது சங்க இலக்கியங்களில் பலவிடத்து பயின்று வந்துள்ளது.

> கொற்ற நீள்குடை கொடித்தேர்ச் செழிய (புறம் 24)
> வருபடை தாங்கி பெயர்புறத்து ஆர்த்தந்து
> பெருபடை தரும் கொற்றமும் (புறம் 35)
> அறநெறி - முதற்றே அரசின் கொற்றம் (புறம் 55)

வீரம் என்ற பண்பும், வலிமை என்ற திறமும் ஒன்றுசேருகின்ற போதுதான் வெற்றி கிடைக்கின்றது. ஆகவே வெற்றி தருபவள் கொற்றவை. அருந்தொழில் முடிக்கும் பெருந்திறல், மன்னர்க்கும்

மறவர், எயினர்க்கும் வெற்றி தேடித் தருபவள் கொற்றவையானதில் வியப்பில்லை.

உமையவள் கோவில் சிவனுடைய ஆலயத்தோடு சேர்ந்ததாக இருக்க, துர்க்கையின் கோயில் தனித்து பெரும்பாலும் கிழக்குப் பார்த்த நிலையில் அமைந்திருக்கும். கொற்றவை கோவில் ஊரின் வடக்கே வடக்குப் பார்த்த நிலையில் காட்டினை நோக்கியவாறு தனியாக அமைந்திருக்கிறது. இதனால் இத்தெய்வத்தை கானமர் செல்வி என்றும் காடுகாள் என்றும் வடக்கு வாசல் செல்வி என்றும் அழைக்கின்றனர். இக் கொற்றவை எட்டுக்கைகளைப் பெற்று, வலக்கையில் சூலமும் மற்றக் கைகளில் கேடயம், வாள் போன்றவைகளை ஏந்தி, கோரைப் பற்களைக் காட்டி, அசுரன் உருவைக் காலால் மிதித்த நிலையில் இன்று கோவில்களில் இருக்கக் காண்கிறோம்.

## புதுக்கோட்டையும் மறவரும்

புதுக்கோட்டையின் தென்பகுதியான திருமயம் வட்டத்தில் பொன்னமராவதி, செவலூர், குளிபிறை, ஆத்தூர், பனையூர், குளமங்கலம், விரையாச்சிலை, கோட்டூர், வெம்பலக்குடி ஆகிய ஊர்களில் மறவர்கள் வாழ்கின்றனர். இவர்கள் செம்பி நாட்டு மறவரைச் சேர்ந்தவர்கள். இவர்களில் விரையாச்சிலை, பனையூர், குளமங்கலம், கோட்டூர், வெம்பலக்குடி மறவர்கள் கொற்றவை (பிடாரி) விழாவினை இன்றைக்கும் சிறப்பாகக் கொண்டாடு கின்றனர். இவர்கள் சைவ சமயத்தைச் சேர்ந்தவர்கள். சிவன், முருகன் போன்ற இந்து தெய்வங்களையும் தங்களுடைய குடித் தெய்வமாக கருப்பர் என்ற பெயரில் ஒரு ஆண்தெய்வத்தையும் அதோடு அம்மன் என்ற பெயரில் ஒரு பெண் தெய்வத்தையும் இணைத்து வணங்குகின்ற அதே நேரத்தில் தங்கள் குலத்தின் பொதுத் தெய்வமாக கொற்றவையை வழிபடுகின்றனர். இவர்கள் தங்களது திருமணத்திற்கு மாப்பிள்ளை வீட்டார் பெண்வீட்டார் இருவருமே அம்பலகாரரின் அனுமதிபெற்று கோவில் மாலைக்கு பணம் கொடுத்து அம்மன் (பிடாரி) கோவிலிலிருந்து கோவில் மாலை வந்த பிறகு அதை அணிவித்தே திருமணத்தை முடிக்கின்றனர். கொற்றவை இவர்களுக்கு குல தெய்வம் என்பதை இது காட்டுவதாகும்.

மறவர்கள் வாழும் இடங்களிலுள்ள பிடாரி அம்மன் (கொற்றவை) கோவில்கள் இவர்களது மேற்பார்வையில் இருந்து வருவதுடன் இதன் திருவிழாவிற்குரிய அனைத்துச் செலவுகளும் இவர்களாலேயே செய்யப்படுகின்றன. திருவிழா செய்வதற்கு தங்களுக்குள் கூட்டம் போட்டு முடிவு செய்து காப்பு கட்டுவதற்கு நாள் குறித்து பிடிமண் கொடுக்கின்றனர். இது திருவிழாவிற்குக்

கால்கோள் நாட்டுவது போன்றதாகும். பிடிமண் கொடுத்த பிறகு உறவின் முறையினர் கூடி தங்களுக்குள் உள்ள தீட்டு திடக்கு போன்ற குற்றம் குறைகளைத் தீர்த்து அய்யனார் கோவிலுக்கு புரவி எடுத்து அல்லது திருவிழாச் செய்து அம்மன் கோவிலுக்கு முளை போட்டு முளைப்பாலிகை வளர்த்துக் காப்புக் கட்டித் திருவிழாவைத் தொடங்குகின்றனர். காப்புக் கட்டும் நாள் விரையாச்சிலை, குளமங்கலம் ஆகிய ஊர்களில் துணியில் அம்மனின் படம் எழுதி கொடி ஏற்றுகின்றனர்.

ஆர்த்தெழு குருதி அடங்காப் பசுந்துணி

பிடர்த்தலை பீடம் ஏற்றிய மடக்கொடி.

என்ற சிலப்பதிகாரத்தின் வழக்குரை காதை வரிகள் (34) இதைத் தெளிவுபடுத்துகிறது.

### சீட்டுப் போடுவதும் முளை வளர்ப்பதும்

முளைப்போடுவது, முளை வளர்ப்பது திருவிழாவில் முக்கிய நிகழ்ச்சியாகும். மது வீடு அல்லது செவ்வாய் வீட்டிலேயே முளைப்போடுவது முளை வளர்ப்பது நடத்தப்படுகிறது. சீட்டுப் போடுவது அம்மன் கோவில் திருமுன்பு நடத்தப்படுகிறது. மது எடுப்பவரது வீட்டுச் சூழ்நிலைகளை ஆராய்ந்து மது எடுப்பவரைத் தேர்ந்தெடுத்து சீட்டுப் போடுவர். சீட்டுப் போடும் நாளில் செவ்வாய் வீட்டிற்கு மற்றவர்கள் சென்று முளை வளர்ப்பதற்கு குயவர் கொண்டு வந்து தந்த மண்பானைகளில் தலைமது எடுக்கும் பெண்ணைக் கொண்டு முளை வளர்க்க நெல்லை அள்ளிப் போட்டு காலை மாலை இரண்டு நேரமும் தண்ணீர் தெளித்து முளையை வளர்க்கச் செய்வர். முளை போட்ட ஐந்தாம் நாள் முளைபார்த்தல் நடைபெறும். அதன்பிறகு முளை பிரிக்கப்படும். முளை வளர்ப்பிற்கு கருங்குறுவை நெல் அல்லது சொர்ணவாலன் நெல் பயன்படுத்தப்படும்.

### மது எடுப்பும் மது வீடும்

மது எடுப்பு திருவிழாவில் மற்றொரு நிகழ்ச்சியாகும். முளைபோடவும் மது எடுக்கவும் மது எடுக்கும் மகளிர்கள் திருவிழாவின்போது தங்கவும் மதுவீடு அல்லது செவ்வாய் வீடு அமைக்கப்படும். இது அம்பலம் என்ற நடுவூர் மன்றத்தின் அருகாமையில் ஏற்படுத்தப்பட்டிருக்கும். மது வீட்டில் விளக்கு மட்டுமே இருக்கும். மது எடுப்பன்று விளக்கு ஏற்றப்பட்டு விளக்குக்குத் தீபாராதனை காட்டிய பிறகே மதுப்பானைக்கு தீபாராதனை காட்டுப்படுகிறது. விரிகதிர் அம் சோதி விளக்காகி நிற்பாய் என்ற சிலப்பதிகார வரிகளை இது நினைவூட்டுவதாகும். சீட்டுப் போட்ட நாள் முதல் மது எடுப்பவர்கள் திருவிழா முடியும்வரை இங்கேயே விரதத்துடன் தங்கி இருப்பர். காப்புக்

கட்டிய எட்டாம் நாள் அல்லது ஒன்பதாம் நாள் செவ்வாய்க் கிழமையன்று பகல் 12 மணியளவில் மது எடுப்பு நடைபெறும். மது எடுப்பு செவ்வாய்க்கிழமை வருவதால் இத் திருவிழாவிற்கு செவ்வாய் அல்லது செவ்வாய்த் திருவிழா என்று பெயர்.

திருவிழாவிற்கு காப்புக் கட்டிய நாள் முதல் 10 நாட்கள் திருவிழா நடைபெறும். காப்புக்கட்டியது முதல் உலாவிற்காக செய்யப்பட்ட சுவாமி சிலை ஒவ்வொரு நாளும் காலை மாலை மறவர் வீதிகளில் உலாவரும். மது எடுப்பு நடக்கும் செவ்வாய்க் கிழமை காலையில் 11 மணியளவில் உலாவரும் தெய்வச்சிலை செவ்வாய் வீட்டிற்குக் கொண்டு வரப்படும். அது அங்கு வந்ததும் செவ்வாய் வீட்டில் வைக்கப்பட்டுள்ள விளக்கிற்கும் மதுப்பானை களுக்கும் தீபாராதனை காட்டிய பிறகு மது எடுக்கும் மறவர் பெண்களை வரிசையாக நிற்க வைத்து அவர்கள் தலையில் மதுக் கலங்களை வைத்து தலை மதுக்காரர் முன்பாக ஒருவர் சிறு ஏனத் தில் துள்ளுகறி (சமைத்து) ஏந்திவர தப்பு கொம்புகள், மேளதாளங்கள் முழங்க அம்பலத்தை நோக்கி மதுக்கலயங்களோடு பெண்களை அழைத்துச் செல்வர் (ஒளிப்படம் 25). இந்நிகழ்ச்சிகள் யாவையும்

**இருமுள் வேலி எயினர் கூட்டுண்ணும்**
**ஒரு ஊர் மன்றத்து அடிபெயர்த்து ஆடி**
...... ........ ......... .........
**வண்ணமும், சுண்ணமும் தண்ணறுஞ் சாந்தமும்**
**புழுக்கலும் நோலையும் விழுக்குடை மடையும்**
........ .......... .......... .........
**ஏவல் எயிற்றியர் ஏந்தினர் பின்வர**

என்ற சிலப்பதிகாரம் வேட்டுவ வரியில் சொல்லப்பட்டவை களோடு ஒற்றுமையுடையதாகக் கருதலாம்.

செவ்வாயன்று அம்பலத்தில் நாவல் மரக்கிளைகளின் பசுந்தழை கொண்டு குடிசை (பச்சைக்குடிசை) அமைத்து அதனுள் மண்ணைக் குழைத்து உருவம் செய்து அதற்கு புதுப்பானை, புத்தரிசி கொண்டு பொங்கவிட்டு படைத்திருப்பர். சம்பவி என்ற பெயர் நாவல் மரத்தின் தொடர்பால் வந்ததெனக் கூறுவர். மது எடுக்கும் பெண்களும் உலாவரும் தெய்வச் சிலையும் அம்பலம் வந்து பச்சைக் குடிசையை மூன்று முறை சுற்றி வந்து வடக்குப் பார்த்து நிற்க, சீட்டுப்போட்டு தேர்ந்தெடுக்க இளஞ்சூலோடு உள்ள கருமைநிற வெள்ளாடு ஒன்றைப் பச்சைக் குடிசை முன் நிறுத்தி அதற்கு மஞ்சள் நீர் ஊற்றி, குறி சொல்லியதும் பகல் 12 மணியளவில் அது பலியிடப்படுகிறது. விரையாச்சிலை, கோட்டூர், வெம்பலக்குடியில் மட்டும் பகலில் வெள்ளாட்டின் கிடாயைப் பலியிட்டும் இரவு மது பூசைக்கு சூலாடு பலியிட்டும் சமைத்து உணவு படைக்கின்றனர். மேலப்

பனையூர் சிவன் கோவிலில் உள்ள கல்வெட்டு ஒன்று இவ்வூர் கோனாட்டு நாச்சியார் திருநாளுக்கு சந்திகளில் கிடாய் வெட்டியதைப் பற்றிக் கூறுகிறது. பலி நிகழ்ச்சி முடிந்ததும் உலாத் தெய்வம் கோவிலுக்கு எடுத்துச் செல்லப்படுகிறது. மதுக்காரப் பெண்கள் செவ்வாய் வீட்டிற்கு அழைத்துச் செல்லப்படுவர். பிறகு இரவு 11 மணியளவில் மீண்டும் உலாத்தெய்வம் செவ்வாய் வீட்டிற்கு வந்து பகலில் பலியிட்டு சமைக்கப்பட்ட வெள்ளாட்டின் கறி, சூல், புழுங்கரிசிச் சோறு (சூலானச்சோறு) ஆகியவற்றுடன் மதுக்காரப் பெண்களை அழைத்துக் கொண்டு கோவிலுக்குப் போவர். அதன் பிறகு உலாத் தெய்வத்தை கருவறையில் மூல விக்கிரகத்தின் பக்கத்தில் வைத்து தலை மதுவை அதற்கு முன்பாக வைத்து சமைக்கப்பட்ட ஆட்டின் சூல் ஆகியவற்றோடு சோறு படைத்து மற்ற மதுக்கலயங்களை கோவிலின் முன்மண்டபத்தில் வைத்து அதற்கு கறி, சோறு ஆகியவற்றோடு பள்ளம் (உண்கலம்) போட்டபின் ஆட்டுக்குட்டியைப் பலியிட்டு அதன் குருதியை சோற்றோடு கலந்து எறிசோறு எறிவர் (ஒளிப்படம் 26).

நிறம்படு குருதி புறம்படி னல்லது
மடையெதிர் கொள்லா வஞ்சு வருமரபிற்
கடவுளயிரை நிலைஇக்

என்ற பதிற்றுப்பத்து (79:16) வரிகள் சங்ககாலத்திலேயே குருதி கலந்த சோற்றைக் கொற்றவைக்குப் படைக்கும் வழக்கைக் குறிக்கின்றன. அதன் பிறகு ஒரு விளக்கினை ஏற்றி தலைமதுப் பெண்ணின் கையில் கொடுத்தும் மற்ற மதுப்பெண்கள் தலையில் மதுக்கலயங்களை வைத்தும் செவ்வாய் வீட்டிற்குத் திரும்ப அழைத்து வருவர்.

### மது எடுப்பும் மகளிர் பங்கும்

மது எடுக்கும் மகளிர் எண்ணிக்கை பனையூர், குளமங்க லத்தில் 16 ஆகும். 16 மதுவில் தலைமதுவே தெய்வமாகவும், தலைமது எடுப்பவரே கொற்றவையாகவும் மக்களால் மதிக்கப் படுகிறார். பனையூர், குளமங்கலத்தில் தலைமதுப்பெண் (ஒளிப் படம் 27) மாதவிலக்கு நின்றவராக உடல் ஊனமில்லாதவராக கணவனை உடைய வாழ்வரசியாக இருக்க வேண்டும். ஒருமுறை சீட்டுப் போட்டால் தன் கணவன் உயிருடன் இருக்கும்வரை அவரே தலைமது எடுப்பர். கரகமது 10 வயதுக்குள் உள்ள பருவத்திற்குவராத சிறுமிகளே எடுப்பார். தலைமது, கரகமது போக பக்கமது என ஒன்றும் உண்டு. பக்க மதுக்காரர்களும் வாழ்வரசி களாக இருக்கவேண்டும். விரையாச்சிலை என்ற ஊரில் மட்டும் தலைமது, கரகமது, பக்கமது அனைத்துமே பருவத்திற்கு வராத இளஞ்சிறுமியர்களே தேர்ந்தெடுக்கப்பட்டு மது எடுக்கின்ற நடைமுறை உண்டு.

**கள் அல்லது மது தயாரித்தல்**

இத் திருவிழாவில் மது எடுப்பதற்கு நெல்லிலிருந்தே கள் தயாரிக்கப்படுகிறது. முளை போட்ட கருங்குறுவை நெல்லின் முளையைப் பிரித்து காயவைத்து இடித்து மாவாக்கி அதோடு கருங்குறுவை நெல்லின் அரிசியையும் சேர்த்து மது எடுப்பதற்கு இரண்டு தினங்களுக்கு முன்பாகவே அடுப்பிலிட்டு காய்ச்சி, காய்ச்சிய கஞ்சியை வெள்ளை மாற்றிலிட்டு கசக்கிப் பிழிந்து சாறு எடுத்து அதை நூல் சுற்றிய கள்ளுக் கலயங்களில் ஊற்றி தென்னம்பாளை சொருகி அதன் நுனியில் வெற்றிலையைக் கட்டித் தொங்கவிடுவர். நெல்லிலிருந்து கள் தயாரிக்கப்படுவதை பெரும்பாணாற்றுப்படை

*அவையா வரிசி யங்களித் துழாவை*
*மலர்வாய் பிழாவிற் புலர வாற்றி*
*பூம்பு நல்அடை அளைஇ தேம்படி*
*ஒல்லையும் இரவும் இருமுறை கழுப்பி*
*வல்வாய்ச் சாடியின் வழைச்சு அற அளைத்த*
*வெந்நீர் அரியல் விரல் அவை நறும் பிழி*

என்று அழகாக விளங்குகிறது.

இன்றைய புதுக்கோட்டை மறவர்களின் கொற்றவை வழிபாடு, சங்க காலத்தில் நடந்து வந்த வழிபாட்டு முறைகளை அடியொற்றியதாக நடந்து வருவது வியப்பும் மகிழ்ச்சியும் தரும் செய்தியாகும்.



**ஒளிப்படம் - 27**

# 31. பிற்காலப் பாண்டியர் கால நகரங்களும் பன்னாட்டு வணிகக்குழுவும்

பி. சந்திர சேகரன், இராஜபாளையம்

## முன்னுரை

கென்னத் ஆர். ஹால் என்பவர் பிற்காலச் சோழர்கள் வரலாற்றில் நகரங்களின் தன்மை பற்றி கூறும் பொழுது நகரங்கள் பிற்காலச் சோழர்கள் காலத்திலேயே சந்தை ஊர்களாகத் திகழ்ந்தன என்றும் நாடு என்றழைக்கப்படும் ஒவ்வொரு வேளாண் நிலப் பிரிவும் தன் வணிகத்தினை நகரம் என்ற அமைப்பின் மூலமாக நடத்தியது என்றும் குறிப்பிடுகின்றார்.[1] நகரங்கள், கிராமப் புறங்களிலிருந்து முற்றிலும் பிரிந்திருக்கவில்லை என்று கராஷிமா குறிப்பிடுகின்றார்.[2] இடைக்கால ஐரோப்பிய சமூக பொருளாதார வரலாறு பற்றி குறிப்பிடும் பேராசிரியர்கள் நகரங்கள் என்பவைகள் தனியாகவும், கிராமங்கள் என்பவைகள் தனியாகவும் இயங்கின. மேலும், நகரங்கள் கிராமங்களை ஆக்கிரமித்து நகரப் பண்பாட்டினை கிராமங்களில் செலுத்தின என்றும் குறிப்பிடுகின்றார்கள்.[3] எனவே, மேற்கண்ட மூன்று கருத்துக்களையும் மையமாக வைத்து பிற்காலப் பாண்டியர்கள் சமூக பொருளாதார அமைப்பில் நகரங்களின் இடத்தை இக்கட்டுரை ஆய்வு செய்யும். இரண்டாவதாக பாண்டியர்களின் காலத்தில் காணப்பட்ட பன்னாட்டு வணிகக் குழுவின் தனிமையைப் பற்றியும் இக்கட்டுரை ஆயும்.

## நகரம் பற்றிய பிற்காலப் பாண்டியர் காலச் சான்றுகள்:

1. புறத்தாய நாட்டு வரகுண்டபாடி நகரமானது, அந்நகரத்து கடவுள் வரகுண ஈச்வரமுடைய நாயனார்க்கு தானம் வழங்கும் பொழுது, தாம் வசூலிக்க வேண்டிய வரிகளைத் தானம் கொடுக்கின்றார்கள். அங்ஙனம் கொடுத்த வரிகள் நிலத்தின் வருவாயிலிருந்து வசூலிக்கப்படுபவைகளாக உள்ளன.[4]

2. திருநெல்வேலிப் பகுதி கீழ் வேம்ப நாட்டில் சிவசரண சேகரப் பெருந்தெருவான சீவல்லவபுர நகரமும் கோவில் நிமந்தக்காரர்களுக்குத் தானம் வழங்கும்பொழுது நிலத்தின் மூலமாக வருகின்ற வரிகளையே தானமாக அளித்திருக்கின்றார்கள்.[5]

3. திருக்கோஷ்டியூரில் காணப்படும் கல்வெட்டொன்று வடகளவழி அளகை மாநகர மண்டலீக கெம்பீரநாத முனைய தரையன் என்பவர் அருவியூரான சிவல்லபுரத்து நகரத்தாரிடமிருந்து நிலங்களை விலைக்கு வாங்கி கோவிலுக்கு தானமாக அளிக்கின்றார் என்று குறிப்பிடுகின்றது.[6]

4. மதுரை விக்கிரமங்கலத்தில் காணப்படும் கல்வெட்டொன்று தேசிப்பட்டணமான ஐயம் பொழில் விக்ரம சோழபுரம் நகரம் தன்னுடைய பிடாகையின் சில நிலப் பகுதிகளை விற்பதாகக் குறிப்பிடுகின்றது.[7]

மேற்கண்ட ஆதாரங்கள் நகரத்தினைப் பற்றிச் சொல்லும் பொழுது, நகரம் செய்த வணிகப் பொருட்களைப் பற்றியோ, அது கொண்டிருந்த பொருட்களின் மீதான வரியைப் பற்றியோ குறிப்பிடாமல் நிலத்தினைப் பற்றியும் நிலத்தின் மீதான வரியைப் பற்றியுமே முக்கியமாகக் குறிப்பிடுகின்றன. மேலும், அவை நகரத்தினை, நிலங்களை உடமையாகக் கொண்ட ஓர் அமைப் பாகத்தான் சொல்லுகின்றதே தவிர, பொருட்களைப் பரிவர்த்தனை செய்யும் அமைப்பாகக் குறிப்பிடவில்லை. எனவே, நகரங்கள் என்பவைகள் கிராமங்களிலிருந்து முற்றிலும் வேறுபட்டவைகள் அல்ல என்று கராஷிமா சோழர்கள் காலத்திற்காக எடுத்த முடிவு பிற்காலப் பாண்டியர் காலத்திற்கும் பொருந்துவதாக அமை கின்றது.[8]

நகரங்கள் ஊர் அமைப்புகளிலிருந்து பிரித்துப் பார்க்கப் படவில்லை. தானவ நாட்டுக் கிடாரங் கொண்ட சோழபுரத்து கீழ் பிடாகை கிராமங்கலத்து கடவுளுக்குத் தானம் கொடுப்பதற்காக சோழபுரத்தினைச் சார்ந்த அரச மீகாமன் என்னும் பெருந்தெருவில் பல நகரங்கள் கூடி வரி நிர்ணயம் செய்தன. அங்ஙனம் நிச்சயிக்கும் பொழுது "இந்த பல நகரத்து ஊராக இசைந்த ஊரவரோம்" என்று அவற்றின் உறுப்பினர் சுட்டப்படுகின்றனர்.[9] இதன் மூலம் நகரங்கள் என்பவைகள் தனியாக அமைக்கப் பட்டாலும், அவைகள் ஊர் என்ற பகுதியுடனேயே இருந்தன என்றும் அறிய முடிகின்றது.

பிற்காலப் பாண்டியர் கால நகரங்கள் இடைக்கால ஐரோப்பிய நகரங்களைப் போல கோட்டைகளுடனோ அல்லது கிராமப்புறங்களிலிருந்து முற்றிலும் விலகியோ இருக்கவில்லை என்பது மேலும் சில நகர அமைப்புக்கள் மூலம் விளங்குகின்றது. சோழபுரம் என்ற நகரினைச் சுற்றியும், ஐயம்பொழில் விக்ரம சோழபுர நகரினைச் சுற்றியும் பிடாகைக் கிராமங்கள் இருப்பதாகக் கல்வெட்டுக்கள் குறிப்பிடுகின்றன.[10] மேலும், அந்த பிடாகைக் கிராமங்கள் அந்தந்த நகருடன் தொடர்புடையவைகளாகத் தெரிகின்றன. எனவே, நகரங்கள் தன்னைச் சுற்றி சிறிதும்

பெரியதுமான கிராமங்கள் தொடர்பில் தான் அது இயங்கி வந்தன என்றும் அறிய முடிகின்றது. ஆகவே பிற்காலப் பாண்டியர்கள் காலத்தில் நகரங்கள் என்பவை குறிப்பிடும்படியாகத் தனித் தோற்றமும் பெறாது, கிராமங்களைப் போலிருந்து வணிக அமைப்புகளை ஏற்படுத்திக் கொண்டு இயங்கி வந்தன என்ற கருத்து தெளிவாகப் புலப்படுகின்றது.

இரண்டாவதாக நகரங்கள் தோன்றுவதனால் கிராமங்களின் நிலை என்ன என்ற கேள்விக்கு பதில் காண முயல்வோம். சிவபுரியில் காணப்படும் கல்வெட்டொன்று கேரள சிங்க வள நாட்டு பிரமதேயம் நிருப சேகர சதுர் வேதிமங்கலத்து இறைவன் அபிமுக்தீச்வரமுடைய மகாதேவர் மடத்திற்கு தேவையான செலவிற் காக, அந்த நாட்டு அருவியூரான நானா தேசிப் பெருந்தெருவில் வசிக்கும் வியாபாரி நிலங்களைத் தனிப்பட்ட பேரிடமிருந்து வாங்கித் தானமாக அளிக்கின்றார் என்று குறிப்பிடுகின்றது.[11] இதில் அருவியூர் என்பது ஒரு கிராமத் தன்மையினைச் சார்ந்ததாகும். ஆனால் அந்த ஊரில் பன்னாட்டு வாணிகம் புரிந்தோர்கள் தங்கியிருந்திருக்கின்றார்கள். அதனால் தான் அந்தப் பகுதி நானா தேசிப் பெருந்தெரு என்றழைக்கப்படுகின்றது. ஆனால், அப்படி குடியேறியவர்கள் கிராமத்தினை முழுவதுமாக அழித்து விடவில்லை என்பது அந்த ஊரிலேயே இருக்கும் நிலக்கிழார்கள் சான்றாயிருக்கின்றார்கள். எனவே, வணிகர்கள் குடியிருப்புகளை அமைக்கும் பொழுது, கிராமங்களை நசுக்கி விடாமல் கிராமங் களிலேயே நகர அமைப்புகளுடன் செயல்பட்டார்ககள். இது உள்நாட்டு வணிகர்களுக்கும் பொருந்தும். திருநெல்வேலியில் காணப்படும் கல்வெட்டுக்கள் திருநெல்வேலியில் தனித் தெருக்களில் வணிகர்கள் தங்களுடைய அமைப்புடன் வாழ்ந்தார்கள் என்று குறிப்பிடுகின்றது.[12]

எனவே, பிற்காலப் பாண்டியர்கள் கால சமூக பொருளாதார அமைப்பில் நகரங்கள் கிராமங்களிலிருந்து முற்றிலும் வேறுபட்டிருக்கவில்லை என்றும், நகரங்களின் தோற்றம் கிராம அமைப்புகளை உருமாற்றித் தோன்றவில்லை என்றும், வணிகர்கள் கிராம நிலக்கிழார்கள் போலவே செயல்பட்டு வணிகம் நடத்தினார்கள் என்றும் முடிவு செய்யலாம்.

### பிற்கால பாண்டியர்கள் காலத்தில் பன்னாட்டு வணிகக்குழு:

பன்னாட்டு வணிகக்குழு, பிற்காலப் பாண்டியர்கள் காலத்தில் அவ்வமயம் நிலவியிருந்த, சமூக - பொருளாதார அமைப்புகளுடன் மிகவும் பிணைந்து செயல்படத் துவங்கியிருந்தது. அது கிராமங்களில் முதலில் தனியாக தெருக்களில் தங்கி, பின்பு அந்த

ஊரையே தன் வசமாக்கிக் கொண்டது என்பதை அருவியூர் கிராம வரலாறு புலப்படுத்துகின்றது. அருவியூரில் முதலில் பன்னாட்டு வணிகர்களான நானா தேசிகள் ஒரு பெருந் தெருவில் வசித்திருக்கின்றார்கள். பின்னால் அந்த கிராமம் அருவியூர் ஆன தேசி உய்ய வந்த பட்டினம்[13] என்றும் குலசேகரப் பட்டினம்[14] என்றும் மாற்றப்பட்டிருக்கின்றது. இந்த இடத்தில் ஹால் குறிப்பிட்டது போல பன்னாட்டு வணிகர்கள் சில இடங்களில் நிரந்தரமாகவே வசித்தார்கள். அவைகள் பட்டினம் என்ற பெயரிலிருந்தன என்று குறிப்பிடுவது பொருத்தமாகவுள்ளது.[15]

இந்தப் பன்னாட்டுக்குழு எல்லா நாடுகளிலும் பரவியிருந்தது என்பதை 'எழுபத்தொன்பது வள நாட்டு பதினென்பூமி பதினெண் விஷயத்தோம்'[16] என்ற தொடர்கள் உணர்த்துகின்றன. பதினெண் விஷயத்தார்கள் பல்வகைப் பொருளில் வணிகம் நடத்தக் கூடியவர்கள். உடையார் பாளையம் கல்வெட்டானது அவர்கள் புடவை, மிளகு, பாக்கு, பொன், அரிசி, நெல், சந்தனம், நூற்பொதி, பயறு, உப்பு, கருப்புக்கட்டி போன்ற பொருட்களில் வியாபாரம் செய்தவர்கள் என்று குறிப்பிடுகின்றது.[17] சின்னமனூர் கல்வெட்டு ஒன்று துறைமுகத்திற்குப் பொருட்களை எடுத்து வருவதும் துறை முகத்திலிருந்து பொருட்களை வெளியில் கொண்டு செல்வதும் அவர்களுடைய தொழில் என்று குறிப்பிடு கின்றது.[18] .மேலும் இதே கல்வெட்டு நாட்டில் பண்டக சாலைகளில் அதாவது சரக்கறைகளில் பொருள்கள் எடுப்பார் களுடனும் அவர்களுக்கு தொடர்பு இருந்தது என்றும் குறிப்பிடு கின்றது. இந்த வணிகக்குழுவானது மற்ற எல்லா வணிகர்களையும் பொருளாதார ஆதிக்கத்துக்குட்பட்ட ஒரு சமூக அமைப்பினையும் உருவாக்கி வைத்திருந்தது. அதாவது, இந்த வணிகக் குழுவின் தீர்மானத்தின் பேரில், எல்லா விதமான வணிகர்களும், அதாவது தலைச்சுமையாகப் பொருட்கள் எடுத்துச் செல்பவர்கள் கூட, காணிக்கைகளைச் செலுத்துவதற்கு உடன் பட்டிருந்தார்கள் என்ற விவரம் உடையார் பாளையம் கல்வெட்டு மூலம் அறிந்து கொள் கின்றோம்.

பதினெண் விஷயத்தார்கள் அளக்கக் கூடிய, நிறுக்கக்கூடிய மடிக்கக் கூடிய, உரைத்துப் பார்க்கக் கூடிய எடுக்கக் கூடிய பொருட்கள் அனைத்திலும் வியாபாரம் செய்து வந்தார்கள். மேலும், ஆங்காங்கே சில நகரங்களிலும் அதன் அமைப்புகளிலும் உறுப்பினராக இருந்து, நகரங்களுடன் சேர்ந்து கொண்டு வணிகம் நடத்தியிருக்கிறார்கள். சின்னமனூர் கல் வெட்டானது நாலு நகரத்துப் பதினெண் விஷயத்தாரும், தரகரும் சேர்ந்து கொண்டு பொருட்களின்மீது காணிக்கையாக வரி விதித்த செய்தியினைக் குறிப்பிடுகின்றது.[19]

பதினெண் விஷயத்தார், திசையாயிரத்து ஐந்நூற்றுவர் என்றும் அழைக்கப்பட்டனர். இவர்கள் ஊர்களில் ஊடுருவியிருந்து வணிகம் நடத்தியிருந்தார்கள் என்பது திருக்கோட்டியூர் மணியம் பலத்துத் திசையாயிரத்தைந் நூற்றுவரோமும், அளகை மானகரத்து திசையாயிரத்தைந்நூற்றுவரோமும் என்ற பகுதிகள் மூலம் அறியப்படுகின்றது.[20]

திசையாயிரத்து ஐந்நூற்றுவர் என்பது ஒரு பொதுவான குழுவினைத்தான் குறிக்குமேயன்றி அதுவே எல்லா பன்னாட்டு வணிகக்குழுவின் தலைமைப் பகுதி என்று சொல்ல இயலாது. அதில் பல பிரிவுகளிலிருந்தன என்று திருமலைக் கல்வெட்டு குறிக்கப்படுகின்றது.[21]

1. பாண்டிய மண்டலம் பெருநிரவி திசையாயிரத்தைந்நூற்றுவர்

2. தேசிவல்லப் பெருநிரவித் திசையாயிரத்தைந் நூற்றுவர்

3. ஏறுசாத்து, இறங்கு சாத்துக் கொழிக்குறிச்சி கடிகைத் தாவளத் திசையாயிரத்தைந்நூற்றுவர்

4. வடகளவழிகாட்டு களந்தாங்களிந் திசையாயிரத்தைந்நூற்றுவர்

5. திருக்கோட்டியூர் மணியம்பலத்து திசையாயிரத்தைந் நூற்றுவர்

6. வேம்பற்றூர் தெனம் திசையாயிரத்தைந்நூற்றுவர்

7. புதுத்தெருவான வாரணவாசி. வடைப்பட்டணத்துத் திசையாயிரத்தைந் நூற்றுவர்.

8. அளகைமானகரம் திசையாயிரத்தைந்நூற்றுவர்

மேற்கண்ட பட்டியல் திசையாயிரத்தைந் நூற்றுவர் என்னும் வணிகர்களில் பலதரப்பட்ட வணிகர்கள் இருந்தனர் என்று குறிப்பிடுகின்றது. இதில் மொத்த வியாபாரிகள் இருந்தனர். ஏற்றுமதி, இறக்குமதி செய்பவர்களிருந்தனர். தாவளங்கள் அதாவது சந்தைகள் வைத்து நடத்துபவர்களிருந்தனர். ஊர்களில் சென்று தங்கி வணிகம் செய்பவர்களிருந்தனர். நகரங்களில் சென்று தங்கி வணிகம் செய்பவர்களிருந்தனர் என்றும் அறிய முடிகின்றது.

இங்ஙனம் பன்னாட்டு வணிகர்கள் தங்கியிருந்த இடங்கள் வேளாபுரம் என்றும் கடிகைத் தாவளங்கள் என்றும் அழைக்கப் பட்டன. வேளாபுரம் அல்லது வளர்புறம் என்பவைகளை கென்னத் ஆர். ஹால் கடற்கரைப் பட்டினங்களென்றும், கடிகைத் தாவளங்களை வாரச் சந்தைகள் கூடுமிடங்கள் என்றும் பொருள் கொண்டுள்ளார்.[22] கடிகைத் தாவளங்கள், ஏற்றுமதி இறக்குமதி செய்யும் பொருட்களுக்காக அமைக்கப்படும் இடங்களாகவும் இருக்கலாம் என்றும் பொருள் கொள்ளலாம்.

இந்தப் பன்னாட்டுக் குழுவானது பல இடங்களில் சென்று வணிகம் நடத்தினாலும் இவைகள் சமூகங்களில் ஏற்கனவேயிருந்து வந்த வணிகக் குழுக்களுடனும், விவசாயக் குழுக்களுடனும், ஒன்றிணைந்து தான் பரிவர்த்தனை செய்து வந்தது. இந்தத் தொடர்பு சோழர்கள் காலத்திலேயே ஏற்பட்ட ஒன்றாகும். பர்டன் ஸ்டெயின் கருத்துப்படி, பன்னாட்டு வணிகக்குழு சித்திரமேழிப் பெரிய நாட்டார் என்ற நிலக்கிழார்களின் குழுக்களுக்கு கட்டுப் பட்ட அமைப்பாகச் செயலாற்றியிருந்திருக்கின்றது.[23] ஆனால், இந்த அமைப்பு முறை பிற்காலப் பாண்டியர்கள் காலத்தில் சற்று மாறியுள்ளதாகத் தெரிகின்றது. திருமலைக் கல்வெட்டு[24] திசை யாயிரத்தைந் நூற்றுவர்கள் பலர் சேர்ந்த அமைப்பின் ஒப்பந்தத் தினைச் சித்திரமேழி சாசனம் என்று ஒப்புக்கு அழைத்தாலும். இந்த அமைப்புக் குழுவில் நிலக்கிழார்கள் இடம் பெறவில்லை. திசையாயிரத்து ஐந்நூற்றுவர்களின் கூட்டத்தினைப் பற்றிக் குறிப்பிடும் கோவில்பட்டி கல்வெட்டு[25] பன்னாட்டு வணிகர்களைத் தவிர்த்து மற்ற உள் நாட்டு வணிகர்களான நாட்டுச் செட்டிகள், தளச் செட்டிகள் ஆகியோர்களைக் குறிப்பிட்டு விட்டு கடைசி யாகச் சித்திரமேழிப் பெரிய நாட்டாரைக் குறிப்பிடுகின்றது. இதன் மூலம் இந்தப் பகுதியில் வணிகர்களின் ஆதிக்கம் ஓங்கி யிருக்குமோ என்று ஊகிக்க இக்கல்வெட்டு வழி செய்கின்றது.

## முடிவுரை

பிற்காலப் பாண்டியர்கள் கால நகரங்கள், சோழர்கள் காலத்து நகரங்களைப் போலவே, கிராமப்புறங்களிலிருந்து முற்றிலும் விலகித் தனியான அமைப்புகளைப் போலத் தோன்றவில்லை. இவ்வமைப்பானது, இடைக்கால ஐரோப்பிய நகரத் தோற்றத்துக்கு மாறுபட்டதாகும். வணிகர்கள் கிராமப் பண்பாட்டினைக் கைக்கொண்டே தம் வணிகத்தினைச் செயலாற்றியிருந்திருக் கின்றார்கள். எனவே, நகரங்கள், கிராமங்களைப் பாதிப்பதை விட கிராமங்களே நகரங்களைப் பாதித்திருக்கின்றன என்று கூறுவதே சரியாகப் படுகின்றது. இரண்டாவதாக, பன்னாட்டு வணிகக் குழு தன்னுடைய முழு வணிக பலத்தினையும் பயன்படுத்தி, கிராம, நகரங்களில் ஊடுருவி நிலக்கிழார்களை தம் வசப்படுத்தி வணிகம் நடத்திச் சென்றது எனக் கருதலாம். ஆனால் இக்கருத்து உறுதி பெற பாண்டியர்கள்கால எல்லாக் கல்வெட்டுக்களையும் ஆராய்ந்து பார்க்க வேண்டும்.

## அடிக்குறிப்புகள்

1. Kenneth R. Hall, Trade and State Craft in the Age of the Colas 1980.
2. Noboru Karashima, South Indian History And Society: Studies from Inscripitions AD 850-1800 (OUP, 1984), p.55

3. டெஸ்ம்ஸ் ஹே **A General History of Europe: Europe in the Fourteenth and Fifteenth Centuries** (London 1966).

*4. இக. 1930, எண் 350*

*5. தெக* **V**, *எண் 415*

*6. இக 1923 எண் 283*

*7. தெக* **V**, *எண் 303*

*8. பார்க்க அகு.2*

*9. இக 1935-36, எண் 125*

*10. இக 1935 - 36, எண் 124, 125*

*11. தெக* **V**, *எண் 213*

*12. தெக* **V**, *எண் 427, 447*

*13. தெக* **V**, *எண் 253*

*14. இக 1928, எண் 296*

*15. பார்க்க அகு.1*

*16. இக 1914, எண் 88*

*17. இக 1914, எண் 88*

*18. தெக* **XXIII** *எண் 430*

*19. தெக* **XXIII.** *எண் 433*

*20. இக 1924, எண் 10*

*21. இக. 1924, எண் 1*

*22 பார்க்க அகு.1*

*23.* Burton Stein, ***Peasant State and Society in Medicucal South India*** (OUP, 1980).

*24. இக. 1924, எண் 10*

*25. இக. 1964 - 65, எண் 284.*

# 32. குமிழி, மடை அமைப்பு முறைகள்

கி. இரா. சங்கரன், தஞ்சாவூர்

கிபி. எட்டாம் நூற்றாண்டிலிருந்தே, குளமுறை நீர்ப்பாசனம் வேளாண்மையில் சிறப்பாகப் பின்பற்றப்படுவது புதுக்கோட்டை வட்டாரக் கல்வெட்டுச் செய்திகளில் அறியமுடிகிறது. பருவகால மழைநீரை விரையமாக்காமல் குளங்களில் தேக்கி வைத்து சிக்கன மாகப் பயன்படுத்த குமிழியும், மடையும் பெரிதும் துணை நிற்கின்றன. குமிழி, மடை பற்றிய குறிப்புகள் கல்வெட்டுக்களில் மிகுதியாக கிடைத்தாலும் இவற்றின் தொழிற்நுட்ப செயல்பாடு பற்றிய செய்திகள் கிடைக்கின்றன. கள ஆய்வில் கல்வெட்டுக்களில் பேசப் பட்ட குமிழி, மடைகளைக் கண்டறிகையில், சில குமிழிகளும் மடைகளும் இன்றளவும் பயன்பாட்டில் இருந்து வருவதை அறிய முடிந்தது. அவற்றின் இயக்கமும் தொழில்நுட்பமும் கருத்திற் கொள்ளப்பட்டன. மேலும், பயன்பாட்டில் இல்லாத சில மடை களின் நீர்புகும் உள் வாய்ப்பகுதி மண்ணுக்குள் புதைந்திருந்ததால், மண்ணை அகழ்ந்து அவற்றின் அமைப்புகள் கண்டுணரப்பட்டன. சில வரைபடங்களில் காட்டப்பட்டுள்ளன.




குமிழியும் மடையும் குளத்தின் ஆழமான பகுதியிலிருந்து நீரை வெளியேற்றும் ஒழுங்கு செய்யப்பட்ட கற்களிலான அமைப்பு கள் ஆகும். பிற்காலங்களில் இவை சுட்ட செங்கற்களினாலும் அமைக்கப்பட்டன. இவை பெரும்பாலும் குளங்களில் ஆழிடங் களிலேயே அமைக்கப்பட்டுள்ளன. துளையிடப்பட்ட பலகைக்கல்

இத்துடன் செங்குத்தாக நடப்பட்டு (படம்-7-அ) தரைகீழ் வாய்க்கால் (படம்-7-ஆ) இணைக்கப்பட்டிருக்கும். இவை குமிழி மடையின் அடிப்படை கூறுகளாகும். நீர் துளையில் புகுந்து தரையின்கீழ் வாய்க்கால் மூலம் வெளியேறும். இத் தரைக்கீழ்வாய்க்கால் நீளமான கற்சட்டங்களால் மூடப்பட்டிருக்கும். துளைகள் (படம் - 7, அ1, அ2) உள்வாய் எனக்கொள்ளப்படும். இவ் அமைப்பு பொதுவாக 'மடை' என்றழைக்கப்படுகிறது. எளிய இவ்வமைப்பை குமிழி, மடைகளின் தொழில்நுட்பத்தின் முதல் படிநிலை எனலாம். இது ஆலங்குடி வட்டத்தின் கற்குறிச்சி எனும் ஊரிலுள்ள குளத்தில் காணப்படுகிறது. ஆனால் இங்கு இணைத் தூண்கள் காணப்படவில்லை (படம்-8,ஈ). அவை இருந்ததற்கான அடையாளங் களும் இல்லை. இம்மடை தற்போது பயன்பாட்டில் இல்லை. குளத்தூர் வட்டத்திலுள்ள நார்த்தாமலை என்ற ஊரிலுள்ள அருமைக்குளத்தின் கற்குமிழியினுடைய தரைக்கீழ் வாய்க்கால் குளத்திற்கு இயற்கையாகவே கரையாக அமைந்துள்ள கற் பாறையைக் குடைந்து வடிவமைக்கப்பட்டதாகும். இத் தரைக்கீழ் வாய்க்கால் குமிழியின் தூண்களிடையே வைக்கப்பட்டுள்ள படுக்கைப் பலகைக் கல்லில் துளையிலிருந்து புறப்படுகிறது (படம்-8). இதன் கீழே மேலும் ஒரு துளை உள்ளது (படம்-8,இ). பொதுவாக இத்துளை மூடப்பட்டிருக்கும். குளம் தூர் வாருகிற காலங்களில் மட்டுமே திறக்கப்படும். குமிழியில் படிந்துள்ள மண்ணை வெளியெடுக்க இது பயன்படுகிறது. குமிழியின் இணைத் தூண்கள் துளையுள்ள பலகைக் கற்களால் இணைக்கப் பட்டுள்ளன (படம்-8, ஊ). தெளிவாகக் காட்டும் பொருட்டு பிற படங்களில் இவை தவிர்க்கப்பட்டுள்ளன. இந்த இணைத் தூண்கள் குளத்து நீரின் அளவைக் காட்டும் நீர் நிறைவான காலங்களில் குமிழி, மடைகளின் இருப்பிடத்தைக் கண்டுகொள்ளவும் பெரிதும் பயன்டுகின்றன. இவை குமிழிக்கால்[1], குமரிக்கல்[2], மணவாளக்கால்[3] என்று கல்வெட்டுகளில் குறிக்கப்படுகின்றன.

படம் - 10 அ



முகத் தோற்றம்

படம் - 11



நீள்வெட்டுத் தோற்றம்

படம் - 12



மேல் தோற்றம்

"இந்தக் குமிழியில் மணவாளக்கால் சேவித்தான்"[4] என்ற கல்வெட்டுத் தொடரில் 'இந்தக் குமிழியில்' என்று குறிப்பிடுவதால் இணைத் தூண்கள் குமிழி அமைப்பின் புதியகூறு என்றும், அவை ஏற்கனவே பயன்பாட்டில் இருந்துள்ள குமிழியில் புதிதாக பொருத்தப்பட்டுள்ள கால்கள் என்றும் ஊகிக்கலாம். இவை புதிதாக நடப்பட்டுள்ளன என்பதை 'நாட்டின குமிழிக்கால்,'[5] 'குமிழிக்கால் நாட்டினேன்'[6] என்ற தொடர்கள் உறுதிசெய்யும். கால்கள் இல்லாமலேயே குமிழிகள் முதலில் இயங்கியுள்ளன என்று தெரிகிறது. எனவே குமிழியிலும் மடையிலும் இணைத் தூண்கள் அமைப்பது இதன் கட்டுமானத் தொழில்நுட்ப வளர்ச்சியைக் காட்டுகிறது. மேலும் குமிழி மடைகளை வலுவூட்ட இணைத் தூண்களில் முன்புறம் அவற்றையொட்டி தாங்கு கற்களாலான கல்லமைப்பும் அமைக்கப்பட்டுள்ளன (படம் 8, உ). இந்த தாங்கு கல்லமைப்பும், இணைத் தூண்களின் அடிப்பகுதியும் ஒட்டுமொத்தமாக இணைந்து குமிழி, மடைகளின் உள்வாயை ஒரு தொட்டி போன்று ஆக்குகின்றன (படம் - 8, ஓ). குமிழி களையும் மடைகளையும் மேலும் வலுவூட்ட கனத்த கல் ஒன்று இணைத் தூண்களின் பின்புறத்தையொட்டி தரைக்கீழ் வாய்க் காலின் மேல் குறுக்காக வைக்கப்பட்டுள்ளது (படம் -13,ஐ). இவ்வமைப்பை ஆலங்குடி வட்டத்தில் வல்லநாட்டுக் குளத்துப் பெரிய மடையில் காணலாம் (படம்-13). குமிழி மடைகள் கட்டு வதற்கு செங்கற்கள் பயன்பாட்டிற்கு வந்த பின்பு, அவற்றின் அடிப்பகுதியைச் சுற்றி 'ப' வடிவில் செங்கற் கட்டிட அமைப்பும், தாங்குசுவரும் செய்யப்பட்டன. இவை திருமயம் வட்டம் நெய் வாயில் குளத்து மடையில் உள்ளது போன்று ஏற்கனவே பயன் பாட்டிலிருந்த குமிழி, மடைகளிலும் கட்டப்பட்டுள்ளன (படம்-9,எ). திருமயம் வட்டத்தின் கோட்டையூரிலுள்ள மேலைக் குளத்து மடையின் சிறப்புக் கூறு அதன் குத்துவச பலகைக் கல்லில் உள்ள மூன்று துளைகளாகும் (படம்-16, அ1, அ2, அ3). குமிழி அல்லது மடையிலுள்ள துளைகளின் எண்ணிக்கை, அவை அமைந்துள்ள குளத்தின் மீதான உரிமை கொண்டவர்களின் எண்ணிக்கை விழுக்காட்டில் இருந்திருக்கலாம்.

வல்லநாட்டுக் குளத்தின் சிறிய மடையில் உள்ள குத்துவசக்கல் வெவ்வேறு அளவிலான விட்டத்தையுடைய நான்கு துளைகளைக் கொண்டுள்ளது. இக்குளத்துப் பெரியமடையின் சிறப்புக்கூறு என்னவெனில், இதன் நீர்புகும் உள்வாய் துளையுள்ள படுக்கைக் கல்லும் (படம்-13) குத்துவசப் பலகைக் கல்லும் (படம் - 14) இணைந்து 'பேழை' போன்ற அமைப்பைப் பெறுகிறது. இதிலுள்ள குத்துவசப்பட்டிக் கல்லின் துளை நீள் சதுர வடிவிலும், படுக்கை வச பட்டிக் கல்லிலுள்ள துளை வட்ட வடிவிலும் உள்ளன. இதுபோன்ற அமைப்புடைய உள்வாயைக் கொண்ட குமிழி




*படங்கள் - 13, 14, 15*

*மடைகளை 'நீர்ப்பேழை - குமிழி', 'நீர்ப்பேழை - மடை' என்றழைக்கலாம். திருமயம் வட்டத்து சுந்தரம் எனும் ஊரிலுள்ள குளத்துமடையின் நான்கு துளைகளுள்ள நீர்ப்பேழை தனிச்சிறப்பு வாய்ந்ததாகும். இந்நீர்ப் பேழை எதிர்எதிரே அமைந்த மூன்று துளைகள் உள்ள இரு குத்துவசப்பட்டிக் கற்பலகைகளைக் கொண்டுள்ளது (படம் - 19, அ1, 2,3). இதன்மேல் துளையுள்ள ஒரு படுக்கைவசக்கல் வைக்கப்பட்டுள்ளது (படம்-19). திருமயம் வட்டத்து சேரனூரின் குளத்திலுள்ள மடையின் நீர்ப்பேழை இதுபோன்றிருந்தாலும், குத்துவசப்பட்டிக் கற்களின் மேல் உள்ள படுக்கைவச பட்டிக் கல்லில் துளையில்லை. மாறாக துளையுள்ள படுக்கைவசப் பட்டிக் கல் மடையின் இணைத் தூண்களின் பின்புறத்தில் பொருத்தப்பட்டுள்ளது (படம் - 24கக).*



இந் நீர்ப்பேழைகள் நீரல்லாத பிற பொருட்கள் உட்புகுவதைத் தடுக்கும்; உள்வாய்க்குள் புகும் நீரின் வேகத்தை பெருமளவு குறைத்து நீரின் அழுத்தம் தரைக்கீழ் வாய்க்காலை பாதிக்காமல் தடுக்கும்; தூரெடுக்கும் காலங்களில் உள்ளே படிந்து போன மண்ணை வெளியெடுக்க வசதியாயிருக்கும். சுருக்கமாக இவற்றை 'நீர்வடிகட்டி' எனலாம்.

நீர்ப்பேழைகளைக் கொண்ட குமிழி, மடைகளின் தரைக்கீழ் வாய்க்கால்கள் பொதுவாக ஒழுங்குபடுத்தப்படாத கற்களால் அமைக்கப்பட்டுள்ளன. இவ்வாய்க்கால் சுவர்களில் பயன்படுத்தப் பட்ட கற்கள் சுண்ணாம்பு மணல்கலந்த சாந்தினால் இணைக்கப் பட்டுள்ளன (படம்-13 ஆ1, ஆ2). இந்த இரு இணைச் சுவர்களுக்கு இடையேயுள்ள இடைவெளி வாய்க்காலாகப் பயன்படுகிறது. இதன் மேற்பகுதி கற்களால் மூடப் பட்டுள்ளது (படம்-15ஒ). இந்த கற்கட்டிட தரைக்கீழ் வாய்க்கால் மூன்றுபுறமும் சுமார் 3 அடி கனஅளவிற்கு செங்கற் கட்டிட அமைப்பினால் ஒட்டுமொத்தமாக மூடப்பட்டுள்ளது. செங்கற்கள், சுண்ணாம்பு மணல் கலந்த சாந்தினால் பிணைக்கப்பட்டுல்ளன.

குமிழி மடைகளின் நீர்புகும் உள்வாய்களில் நீர்புகுதலைத் தடுக்க மூன்று முறைகள் பின்பற்றப்பட்டு வருகின்றன. நார்த்தாமலையிலுள்ள குமிழியின் உள்வாயை அடைக்க கல் அல்லது மரக்கட்டை பயன்படுத்தப்படுகிறது. கோட்டையூரின் மேலைக் குளத்து மடையில் கற்துண்டுகள், தேங்காய்நார், துணி மற்றும் களிமண் கலவையாக பயன்படுத்தப்படுகின்றன. இவ்விரண்டு முறையும் மிகவும் ஆபத்தானவை. நீரில் மூழ்கிய நிலையில் ஒரு ஆள் இவற்றைச் செய்ய வேணடும். மூன்றாவது முறையாக ஒரு நீள மரக்கட்டை இணைத்தூண்களை இணைக்கின்ற இடைக் கற்களிலுள்ள துளைகள் வழியே செலுத்தப்பட்டு படுக்கைவசப் பட்டிக்கல்லின் துளை அடைக்கப்படுகிறது (படம் - 9, எ). இம் மரக்கட்டை நீரில் ஊறிப் பருத்து துளையை இறுக்கமாக அடைக் கின்றது. நெல்வாயின் குளத்து மடையை இயக்க பின்பற்றப்படும் இம்முறை மிக எளிதானதும் பாதுகாப்பானதும் ஆகும்.



முன் தோற்றம் நீள்வெட்டுத் தோற்றம் மேல் தோற்றம்

படம்-22

முன் தோற்றம்

படம்-23

நீள்வெட்டுத் தோற்றம்

படம்-24

மேல் தோற்றம்

## குறிப்புகள்

1. கரு. இராஜேந்திரன், 'புதுக்கோட்டை மாவட்டக் குமிழிக் கல்வெட்டுகள்', ஆவணம், இதழ் 3, சூலை 1993, ப. 12-16.

2. கரு. இராஜேந்திரன்,'புதுக்கோட்டை மாவட்ட குமிழிக் கல்வெட்டுகள்', ஆவணம், இதழ் 1, அக்டோபர் 1991, ப. 38-40.

3. மேலது.

4. கரு. இராஜேந்திரன்,'புதுக்கோட்டை மாவட்டக் குமிழிக் கல்வெட்டுக்கள்', ஆவணம், இதழ் 3, சூலை1993, ப12-16.

5. மேலது.

6. மேலது.

# 33. அம்மையநாயக்கனூர் ஜமீன்தார் கனகயநாயக்கர் செப்பேடு

கு. சேதுராமன், மதுரை.

கி.பி. 1801ல் பாளையப்பட்டுக்களின் கிளர்ச்சிகள் ஒடுக்கப் பட்டபின் ஜமீன்தாரிமுறை தோற்றுவிக்கப்பட்டது. பாளையக் காரர்கள் அதிகாரம் குறைக்கப்பட்ட சிறு சிறு ஜமீன்தார்களாக ஆக்கப்பட்டனர். அவ்வாறு உருவாக்கப்பட்ட ஜமீன்களில் மதுரை மாவட்டத்தில் நிலக்கோட்டைப் பகுதியில் உள்ள அம்மைய நாயக்கனூர் ஜமீனும் ஒன்றாகும். இந்த ஜமீனின் முதல்ஜமீன்தார் பெஞ்சமாக்கய நாயக்கர் ஆவார். இவரைத் தொடர்ந்து சுமார் இருபத்தேழு ஜமீன்தார்கள் இவ்வமிசத்தில் ஆண்டு வந்துள்ளனர். இவர்களில் 26வது ஜமீன்தார் கனகய நாயக்கர் ஆவார். சுமார் 19 ஆண்டுகள் ஆண்டதாகச் சொல்லப்படும் இவர் பல நற்பணி கள் புரிந்துள்ளார்.

இவர்காலத்தினைச் சார்ந்த பட்டயம் ஒன்று அண்மையில் கண்டறியப்பட்டது. இப்பட்டயம் கனகய நாயக்கர் உட்பட ஒரு எட்டுப் பேர் சேர்ந்து கிராமக்காவல் காக்கும்படி ஆரியப்பட்டி மதுரைக்கோட்டை கருத்தவீரத்தேவர் மகன் குமாரத்தேவன் மற்றும் இராசத்தேவன் மகன் சின்ன வீரத்தேவன் ஆகிய இருவருக்கும் ஆணையாகக் கன்னட மொழியில் எழுதப்பட்ட சாசனமாகும். கன்னட மூலத்தைத் தமிழில் எழுதியவர் திண்டுக்கல் கருப்பன் செட்டியாராவார். இப்பட்டயம் நிலக்கோட்டை வட்டம் அணைப் படிக்கு அருகிலுள்ள சித்தர்கள் நத்தம் இராமக்குடும்பன் மகன் சடையாண்டிக் குடும்பன் வீட்டில் உள்ளது.

இதன்படி காவலுக்குக் கூலியாக வீடு ஒன்றிற்கு மூன்று குறுணி தானியம் தரப்படும் என்றும் பகலில் மாடுகள் காவலைமீறி நிலத்தில் மேய்ந்தால் காவலாளிக்குத் தண்டனையாக ஐந்து பொன்னும் இரவில் மாடு மேய்ந்தால் ஏழு பொன்னும் கட்ட வேண்டும் என்றும் கூறப்பட்டுள்ளது.

இச்செப்பேட்டில் இரண்டாவது பகுதியில் புதிய கண்மாயில் தண்ணீர்ப் பாத்திய உரிமை கருப்பணக்குடும்பன் மகன் அய்யா குடும்பனுக்குத் தரப்பட்டுள்ளது. சில இடங்களில் எழுத்துப் பிழைகள் உள்ளன. இதன் காலம் கி.பி.1845 என்று கூறலாம். பட்டயத்தின் துவக்கத்திலும் முடிவிலும் கத்திகேடயச் சின்னங்கள் பொறிக்கப்பட்டுள்ளன.

செப்பேட்டின் பாடம்

1. பாத்திவ வருஷம் ஆவணி மீ 15 தி
2. அம்மயநாயக்கனூர் ஜமீந்தார் கனகய
3. நாயக்கறவர்கள் 1 சித்தர்கள் நத்தம் ராச
4. ய நாயக்கற் 2 சங்கறராமய்யற் 3மல்லய
5. ம் பட்டி வசமபண்டாறம் 4 சித்தர்கள் நத்தம்
6. குளந்தைவேல் மணியகாரன் 5 குண்டலாமாப்பட்டி
7. சாமி செட்டியார் 6 சித்தர்கள் நத்தம் நாட்டாண்
8. மை மொண்டிக் கவண்டன் 7 வாடியிலிருக்கு
9. ம் ராசநாசாரி 8-ப் பேர்களும் கூடி கருநாடகத்தி
10. ல் ஒலைப்பத்திரத்தில் யெளிதியிருஞ்சுத்தை ஆரிய
11. பட்டி மதுரைக்கோட்டை கருத்த வீரத்தேவன்
12. மகன் குமாருத்தேவனுக்கு மேற்படி ராசதேவன்
13. மகன் சின்னவீரத்தேவன் ரெண்டு
14. பேர்களுக்கு மேல்க்கண்ட 8 பேற்களும் கிரா
15. மங்காவல் கார்க்கும்படியா யிச் செம்புப்பட்
16. டையத்தில் யெளிதிக் குடுத்திருப்பதால் வீட்
17. டுக்கு 3[குறுணி] கூலியாகவும் ரவையி
18. ல் மாடு போனால் 7 பொன் பகல் மா
19. டு போனால் 5 பொன்னும் வாடிக்கிள
20. க்கு அரமனைக் கண்மாயிக்கி கிள
21. க்கு 7 தாரமானிபம் றத்தமானிபம் அதில்
22. க் குத்துக்கல் 2 நட்டிருக்கிறது மேல்க்க
23. ண்ட 8 பேர் வம்முசத்திலும் குமா
24. ருத்தேவன் வகையரா வம்சத்திலும் க
25. ல்லுங் காவேரி புல்லும் பூமி உள்ளவ
26. ரைக்கும் இதை அளித்தவன் வெள்ளி
27. மலையாண்டி, முத்தாலையம்மன், அனு
28. மார், பெருமாள், கேள்க்கும் யெளிதின
29. து திண்டுக்கல் கருப்பன் செட்டியார்
30. கருப்பணக் குடும்பன் மகன் அய்யா குடும்பன்
31. பழய கம்மாய் கீழ்புரம் புதுக்கண்மாய்
32. தண்ணீர் பாத்தியம் காணிக்கு 1 கட்டும்
33. முக்குருணியும், காட்டுக்கு 1 தளுக்கும் குரு
34. ஷிதானியம்1 சேர் மொச்சை கொடுப்பது.

# 34. வியத்நாம் - கம்போடியாவில் இந்தியப் பண்பாட்டுச் சின்னங்கள்

ப. சண்முகம், சென்னை

தோக்கியோ பல்கலைக் கழகப் பேராசிரியர் நொபொரு கராஷிமா அவர்கள் தலைமையில் இந்திய - சப்பானிய ஆய்வாளர் குழு* அண்மையில் வியத்நாம் மற்றும் கம்போடியா நாடுகளில் கள ஆய்வு மேற்கொண்டது (மார்ச், 1995.) பல அரிய தகவல்களை இக் குழு திரட்டியது.

**வியத்நாம்**

வியத்நாமின் மத்திய பகுதி சம்பா என்று அழைக்கப்படுகிறது. தொன்மையான சீன வரலாற்று நூல்கள் 'ஹோான் உவாங்' (Hoan Vuong) என்று இப்பகுதியைச் சுட்டுகின்றன. ஆயினும் கி.பி. 875க்குப் பிறகு 'சம்பாபுரம்' என்ற பெயரின் அடியொற்றிய 'சாங் செங்' (Chang cheng) என்ற பெயரை சீன நூல்கள் பயன்படுத்தி உள்ளன.

சம்பா பகுதியுடன் இந்தியா மேற்கொண்ட பண்பாட்டு - வணிக உறவுகள் கி.பி. முதல் நூற்றாண்டிலிருந்து தொடங்குகின்றன. இந்து மற்றும் புத்த மதங்கள் சம்பா பகுதியில் பரவி வேறுான்றியது இக்கால கட்டத்தில் தான். ஆயினும் தெளிவான சான்றுகள் கி.பி. 6 ஆம் நூற்றாண்டிலிருந்துதான் கிடைக்கின்றன. இங்குள்ள கோயில்கள், இந்தியக் கட்டிடக்கலை பாணியை ஒத்து இருந்தாலும், கிமர் ((Khmer) கலைப் பண்பாட்டின் சாயல்கள் பல அவற்றுள் உள்ளன. இக்கோயில்கள் பெரும்பாலும் சிறுகுன்றுகள் அல்லது செய்குன்றுகள் மீது வடிவமைக்கப்பட்டுள்ளன. கருவறை, சுற்றாலை, கோபுரங்கள் ஆகியனவற்றைக் கொண்டுள்ளன. இக் கோயில்கள் பெரும்பாலும் செங்கற்களால் கட்டப்பட்டவை. ஒருவிதமான ஒட்டுப்பிசினை இடையில் வைத்துக் கட்டியுள்ளனர். இக்கோயில் விமானங்கள் பல தென்னிந்திய விமானங்களை ஒத்து உள்ளன. மீசோனில் (Mison) உள்ள சில கோயில் விமானங்கள் சாலை அமைப்புடன் திகழ்கின்றன. சில பிரமிட் வடிவத்தை

---

* சப்பானியப் பேராளர்களான இஷிஷவா, ஒகுரா, மத்சுநமி, இந்தியப் பேராளர்களான கே.வி. இரமேஷ், கே.வி. இராமன், எ. சுப்பராயலு ஆகியோருடன் கட்டுரை ஆசிரியரும் இக் குழுவில் அடங்குவர்.

உடையன. அலங்கரிக்கப்பட்ட தேவ கோட்டங்கள் விமானச் சுவர்களின் உள்ளன.

இக் கோயில்கள் பெரும்பாலும் 'தேவராஜர்' வழிபாட்டின் வடிவம் ஆகும். மறைந்து போன மன்னரைத் தெய்வமாக வழிபடுவதற்கு அவனுக்கு கோயில் கட்டினர். மிசோன் (Mison, 8முதல் 12ம் நூற்றாண்டுகள்), ஹோலை (Holei), 9ம் நூற்றாண்டுகள்), டாங் டுவாங் (Dong Duang, 10ம் நூற்றாண்டு), நகா த்ராங் (Naha Trang, 12ம் நூற்றாண்டு), பின்டிங் (Binh Ding, 12, 13ம் நூற்றாண்டுகள்,) ஆகிய இடங்களில் உள்ள கோயில்களை முக்கியமாகக் குறிப்பிடலாம்.

இக்கோயில்கள் சிவ, விஷ்ணு வழிபாட்டின் முக்கிய இடங்களாகும். சிவனை, லிங்க உருவிலும், முருகன், கணேசன் ஆகிய கடவுள்களையும் வழிபட்டுள்ளனர். இக்கடவுள் சிலைகள் பல இக்கோயில்களில் இன்றும் காணலாம். 13 தலை ஆதிசேஷன் மீது அமர்ந்த நிலையிலும், அனந்த சாயி ஆகவும் விஷ்ணு காட்சி அளிக்கிறார். இந்திரன், பிரம்மன், யமன், திக் பாலகர்கள், ஆகியோருக்கும் கோயில்கள் இருந்துள்ளன. காண்டமிருக வாகனத்தில் அக்னி இங்கே காட்சியளிக்கிறார். துர்கை, சரஸ்வதி ஆகிய பெண் தெய்வங்களும் வழிபடப்பட்டுள்ளன அப்சரஸ்கள், கஜசிம்மம் ஆகியோர் சிற்பங்களும் இங்கு உண்டு.

தனாங் (Da Nang), ஹீயே (Hue) மற்றும் ஹோ சி மின் (Ho chi Ming) ஆகிய நகரங்களில் உள்ள அருங்காட்சியாகங்களில் பல தொன்மையான சிலைகளைக் காணலாம். நடனமாடும் சிவ பெருமான், அனந்தசாயி, கோவர்த்தன மலை ஏந்திய கண்ணன், கணேசர், உமை, லட்சுமி, கருடர், யக்ஷர்கள், ஆகிய சிற்பங்களும் காட்சிக்கு வைக்கப்பட்டுள்ளன. சில தொன்மையான தொல்லியல் அகழாய்வுப் பொருள்களும் வைக்கப்பட்டுள்ளன.

இந்தியாவிலிருந்து சென்ற மஹாயான புத்தமதத்தின் வஜ்ராயனப் பிரிவு இங்கு தழைத்து ஓங்கியது. இதன் பிரதிபலிப்பாக லோகேஸ்வரர் சிலைகளைக் காணலாம்.

### கம்போடியா

'காம்போஜம்' என்று வழங்கப்பட்டு வந்த இன்றைய கம்பூசியா (கம்போடியா) உடன் இந்தியத் தொடர்புகள் பன்னெடுங் காலமானவை. பூனான் (Funan) பேரரசின் பகுதியாகவும், கிமர் (Khmer) ஆட்சியின் (கி.பி. 800) மையமாகவும் இப்பகுதி திகழ்ந்தது. இந்நாட்டின் பல பகுதிகளில் குறிப்பாக, வடமேற்குப் பகுதியில் (அங்கோர், அங்கோர் வாட்) இந்தியப் பாணி கோயில்கள் பலவற்றைக் காணலாம்.

இந்தியப் பாணி கோயில்கள் சற்றேறக் குறைய கி.பி. 7ம் நூற்றாண்டு முதல் காணப்படுகின்றன. இவற்றில் அக் யும்

(Ak yum) ஊரில் உள்ள கம்பிரேஸ்வரர் கோவில் மூன்றுதள விமானம் கொண்டது; செங்கற்களால் கட்டப்பட்டது; கிபி. 7ம் நூற்றாண்டைச் சார்ந்த வடமொழிக் கல்வெட்டு ஒன்றும் இங்குள்ளது. இந்தியத் தொடர்புகள் 14-15ம் நூற்றாண்டு வரை இருந்துள்ளது. ஆரம்பகாலத்தில் இக்கோயில்கள் செங்கற்களால் கட்டப்பட்டன. குன்று போன்ற அமைப்பிலேயே இக்கோயில்கள் வடிவமைக்கப்பட்டன. பின்னர் ஒருவிதமான கருங்கல்லைக் கொண்டு கட்டடம் எழுப்பினர்.

ஒன்பதாம் பத்தாம் நூற்றாண்டுகளில் ரோலஸ் (Rolus) என்ற ஊருக்கு அண்மையில் அமைந்த பிராகோ (Prako), பகேங் (Bakong) மற்றும் பினாம் பகேங் (Phnan Bakong) ஆகிய கோயில்கள் கட்டப்பட்டன. இவற்றுள் பிராகோ, இந்திரவர்மனால், கிபி. 879ல் கட்டப்பட்டது. இது இந்துக் கோயில் என்றாலும் இரண்டாம் ஜயவர்மனின் சமாதியின் மீது கட்டப்பட்டதாகும். இங்குள்ள ஒரு வடமொழிக் கல்வெட்டு, கிபி. 877ல் சிவன், விஷ்ணு, இந்திரன் மற்றும் சூரியனுக்கு கோயில்கள் கட்டப்பட்டதென உரைக்கிறது.

கம்பூசியாவில் உள்ள மிகப் பிரசித்தி பெற்ற கோயில்களில் முக்கியமானது அங்கோர் (Angkor) ஆகும். இக்கோயில்கள் 12ம் நூற்றாண்டில் 2ம் சூரியவர்மனால் ஒரு செய்குன்றின் மீது கட்டப்பட்டது. வெளிப்புறச் சுவர்கள் 1025 x 800 மீட்டர் அளவுடையவை. இக் கோயிலைச் சுற்றி 190 மீட்டர் அகலமுள்ள அகழி உள்ளது. இக் கோயிலின் வெளிப்புறச் சுவர் முழுவதிலும் மாபாரத் போர், இராமயணக் கதை, சாமதகனம், சூர்யவர்மனின் படைகள், யமதர்மராஜனின் அவை, மற்றும் அமிர்தம் கடைந்தெடுத்தல் போன்ற காட்சிகள், புடைப்புச் சிற்பங்களாக செதுக்கப் பட்டுள்ளன.

மற்றொரு சிறப்புவாய்ந்த கலைக் கூடமாகத் திகழ்வது அங்கோர் தோம் (Angkor Thom) ஆகும். இது கிமர் (Khmer) அரசின் தலைமையிடமாகும். ஐந்து பெரு வாயில்களைக் கொண்டுள்ளது. அசுரர்களும், தேவர்களும், வாசுகிப் பாம்பைக் கயிறாகக் கொண்டு அமிர்தம் கடையும் காட்சி ஒவ்வொரு வாயிலின் முன்பாகவும் பிரம்மாண்டமாக சித்தரிக்கப்பட்டுள்ளது. நுழை வாயில்களில் உள்ளள கோபுரங்கள் பல அவலோகிதீஸ்வரர் முகங்களைக் கொண்டு அமைக்கப்பட்டுள்ளன. இந்நகரத்தில் நடுவே அமைந்துள்ளது பயோன் கோயிலாகும். இது புத்தமத்தைச் சார்ந்த கோயிலாகும் இக்கோயில் பெரிய அளவு அவலோகிதீஸ்வரரின் சிலைகள் 57 உள்ளன. இக்கோயிலின் வெளிப்புறச் சுற்றாலையின் சுவர்களில் புடைப்புச் சிற்பங்கள் உள்ளன. கடற்படை, போர்க்காட்சிகள், ஊர் மக்களின் வாழ்க்கை

முறைகள், போன்றவற்றைச் சித்தரித்துள்ளனர். பயோனுக்கு அருகே உள்ள யானை மேடையில், யானைகள், கருடன் ஆகியோ,ரது பெரிய பெரிய புடைப்புச் சிற்பங்களைக் காணலாம்.

இந்து, புத்த சமயம் சார்ந்த பல சிற்பங்கள் இங்கு கண்டெடுக்கப்பட்டுள்ளன. சிவலிங்கங்கள், துர்கை, பிரம்மன், ஏர்ப்படையைக் கொண்ட பலராமன், வாலி சுக்ரீவன் போர்க் காட்சிகள் ஆகியனவும் சிற்பங்களாக வடிவமைக்கப்பட்டுள்ளன. இங்கு அதிக அளவில் அமைக்கப்பட்டவை அமிர்தம் கடையும் சிற்பங்களாகும். அப்சரஸ்கள், மற்றும் அலங்காரச் சிற்பங்களும் நிறைய உள்ளன விஷ்ணுவின் விஸ்வரூபம், விஷ்ணுவைச் சுமக்கும் கருடர், போன்ற பல சிற்பங்களை இங்கே காணலாம். புத்தர் சிலைகளும், அவலோகிதேசுவர் சிலைகளும், பினாம் பென் (Phom Penh) அருங்காட்சியகத்தில் வைக்கப்பட்டுள்ளன.

கம்போடியாவுடனான தொடர்புகள் ஏறக்குறைய 15ம் நூற்றாண்டு வரை தொடர்ந்து இருந்துள்ளது. ஆயினும் கம்போடியப் பண்பாட்டின் சிறப்பான சில தன்மைகளை இணைத்தே கோயில்களையும் சிற்பங்களையும் ஆக்கியுள்ளனர்.

# 35. வெளியீடுகள்

*35:1.* **Asko Parpola, Deciphering the Indus Script,** (Cambridge University Press,1994 396 pp., 135 line diagrams, 141 half tones, 8 tables 32 maps)

சிந்துசமவெளி முத்திரை எழுத்து வரிவடிவங்கள் பற்றி அஸ்கோ பர்போலா எழுதிய இந்நூல் நான்கு இயல்களைக் கொண்டது. இந்நூலில் தொல்திராவிட மக்களின் மொழி, பண்பாட்டுக் கூறுகள் எவ்வாறு சிந்துசமவெளியில் இடம் பெற்றுள்ளன என்பதைப் பல்வேறு சான்றுகளுடன் விளக்கி யுள்ளார்.

**இயல் 1 :** சிந்துசமவெளி நாகரிகமும் அதன் வரலாற்றுச் சிறப்பும்

**இயல் 2 :** தொன்ம எழுத்து முறைகள்; புலப்படாத எழுத்து முறைகளைப் படித்தறிதல் முயற்சி; சிந்து எழுத்து வரிவடிவங்கள் பற்றிய அணுகுமுறை; சிந்துசமவெளி எழுத்துக்களும் அகச் சான்றுகளும்; மொழியமைப்பும் புறச்சான்றுகளும்; சிந்துவெளி எழுத்துக்களும் புறச்சான்றுகளும்.

**இயல் 3 :** சிந்துமொழி; திராவிட மொழிகளும் அரப்பா பண்பாடும்.'

**இயல் 4 :** சிந்துவெளி எழுத்துக்களுக்கு விளக்கம்; 'மீன்' குறியீடுகள்; வானசாத்திரம்,சோதிடம்; அரப்பாவில் முருகு வழிபாட் டிற்குரிய சான்றுகள்; அரப்பாவில் தாய்த்தெய்வ வழிபாட்டிற்குரிய சான்றுகள்; நிறைவுரை

என நான்கு இயல்களில் பல உட்தலைப்புக்களில் செய்திகள் ஆராயப்பட்டுள்ளன. 1. தொல்திராவிட மொழி பேசும் மக்கள் தென்னிந்தியாவிலும் வடக்கு மற்றும் கிழக்குப் பகுதி இந்தியா விலும் வாழ்ந்துள்ளனர். 2. சிந்து சமவெளியில் இடம்பெறும் எழுத்துக்கள் தொல் திராவிட மொழி பேசிய மக்களுக்குரியவை என்பன முக்கிய முடிவுகளாகும்.

**இராசு பவுன்துரை**
தஞ்சாவூர்.

*35:2* Nagaswamy, R., **Roman Karur,** (Brahad Prakashan, Madras,1995, pp. 153 plates 43).

டாக்டர் இரா. நாகசாமியின் தொல்லியல்துறை ஆய்வு, அனுபவம், செய்தி சேகரிப்பு முயற்சிகள் இந்நூலின் சிறப்பிற்கு உதவுகின்றன. இந்நூல்

1. ரோமன் கரூர்

2. சேரர் கரூர் (வரலாறு)

என இரண்டு இயல்களைக் கொண்டது. முதல் இயல் நாணயங்களின் வெளிப்பாடாக அமைத்துள்ளார். 1. சேரர், ரோமர், முத்திரை நாணயம், ரோமானியர் தலையுடையவை, சாதவாகனர், பல்லவர் நாணயங்கள், துர்க்கை, இலட்சுமி நாணயங்கள், சதுர வடிவம் கொண்ட சேரர், சோழர் நாணயங்கள் 2. கரூர் அகழாய்வுச் சான்றுகள், 3. கரூரின் தொன்மை, 4. அழகன் குளம்; இந்திய ரோமானியர் வணிகத் துறைமுகம், 5.கல்வெட்டுச் சான்றுகள்; மட்பாண்ட ஓடுகள், புகளூர், சத்தியபுத்திரர் மோதிர எழுத்து 6. இலக்கியச் சான்றுகள 7. தமிழகத்தில் ரோமானியர்கள் 8. ரோமானியக் கலையின் தாக்கம் எனும் தலைப்புகளில் இப்பகுதி அமைகின்றது.

சேரர் கரூர் (வரலாறு) எனும் இரண்டாம் இயல் 1. சங்க காலம் 2. காப்பியக் காலம், 3. பல்லவர் காலம், 4. சோழர் காலம் என வரலாற்று அடிப்படையிலும், 5. சேக்கிழார், 6. அருணகிரிநாதர், 7. கரூர் புராணம் என இலக்கியச் சான்றுகளின் வாயிலாகவும்; 8.தற்காலக் கரூர் 9. பாடல்களில் கரூர் (பெதா. அப்புசாமி அவர்களின் மொழிபெயர்ப்பு வரிகள்) எனும் சான்றுகளின் வாயிலாகவும் வெளிப்படுத்தும் பகுதியாக அமைகின்றது. தமிழகத்தில் ரோமானியரின் தொடர்பை அறிய இந்நூல் பெரிதும் உதவும். இந்நூலில் மிகுதியாக இடம்பெற்றுள்ள அச்சுப் பிழைகள் பெரும் குறையாக உள்ளன.

இராகு பவுன்துரை
தஞ்சாவூர்.

**35:3.** கா. நெடுஞ்செழியன், திரு நாங்கூர்
(அருண் பதிப்பகம் ஜெயங்கொண்டம் 1994,
பக். 141, படங்கள் 22)

திருநாங்கூர் எனும் ஊர் சீர்காழிக்கு அருகிலுள்ளது. சங்க காலம் முதல் தற்காலம் வரையுள்ள இவ்வூரின் வரலாற்றுச் செய்திகளை வெளிப்படுத்தும் நூலாகும். திருநாங்கூரின் வரலாறு, இங்குள்ள சைவ, வைணவக் கோயில்களின் அமைப்பு, சிற்பங்கள், கோயிற் திருவிழாக்கள் கல்வெட்டுக்களின் வாயிலாகப் பெறப்படும் வரலாற்றுச் செய்திகள், சயாம் (தாய்லாந்து) தக்குவாபா கல்வெட்டுச் செய்திகள், தற்பொழுதுள்ள திரு நாங்கூர் மக்களின் சமுதாய நிலை எனப் பல்வேறு கோணங்களில் தொகுத்தளித்துள்ளார். திருநாங்கூரின் முழுமையான வரலாற்றை அறிய இந்நூல் பெரிதும் உதவும்.

இராகு பவுன்துரை,
தஞ்சாவூர்.

35:4. பா. சுப்பிரமணியன், ம.சா. அறிவுடைநம்பி, சி. இலட்சுமணன், **தமிழக வரலாற்றறிஞர்கள்** (கருமணி பதிப்பகம், முன்றில் - 3 தமிழ்ப் பல்கலைக்கழக ஆசிரியர் குடியிருப்பு, தஞ்சாவூர், 1993), 244 பக்கங்கள், விலை ரூ.45/-

ஆங்கிலேய வரலாற்றாசிரியர்களுக்குப் பின்பு தமிழ் மண்ணில் தோன்றிய வரலாற்று அறிஞர்களை வரலாறாக்கிய வகையில் இந்நூல் தமிழில் ஒரு முந்நூல் எனலாம். இந்நூல் வி. கனகசபைப் பிள்ளை, ச. வையாபுரிப் பிள்ளை, தி.வை. சதாசிவப் பண்டாரத்தார், கே.ஏ. நீலகண்ட சாஸ்திரி, கே.கே.பிள்ளை, டி.வி. மகாலிங்கம் மற்றும் மா. இராசமாணிக்கனார் ஆகியோரை உள்ளடக்கியுள்ளது. ஒவ்வொரு வரலாற்றறிஞரின் ஆய்வுத் தன்மைகளும் சிறப்பாகக் காட்டப்பட்டுள்ளன. எடுத்துக்காட்டாக, ஒவ்வொரு கிராமத்தையும் ஆராய வேண்டும்' என்ற இக்கால ஆசிரியர்களின் அவா அன்றே பி.டி. சீனிவாச அய்யங்கார் அவர்களால் வித்திடப்பட்டது. பின்னிணைப்பிலுள்ள அறிஞர்களின் நூல்கள், ஆய்வுக் கட்டுரைகள் மிகவும் பயனுள்ளன என்றாலும் சில விடுபட்டுள்ளன. பதிப்புரையில் உள்ள ஆசிரியர்களின் அறிமுக உரையை பின்னிணைப்பாகக் கொடுத்திருக்கலாம். பதிப்பில் அச்சுப்பிழை தவிர்க்க இயலாதது எனினும் தவிர்த்திருக்கலாம். இந்நூல் வரலாற்று மாணவர்களுக்குப் பெரிதும் பயன்படும்.

பா.ஜெயக்குமார்,
தஞ்சாவூர்.

35:5 **K. Rajan, Archaeology of Tamilnadu (Kongu country), (Book India Publishing Co., Delhi, 1994)** பக்கங்கள் 182, வரைபடங்கள் 58, நிழற்படங்கள் 33, விலை ரூ990/-

தமிழகத் தொல்லியல் என்ற வகையில் தமிழக வரலாற்றில் முக்கிய பங்கு வகிக்கும் கொங்குப் பகுதியின் (தற்போதைய கோயம்புத்தூர், பெரியார் மாவட்டங்கள்) தொல்லியல் வரலாற்றுச் சிறப்புகள் இந்நூலில் அடங்கியுள்ளன. "தொல்லியலுக்கு களஆய்வு மூலதனம் போன்றது" என்பதற்கு இந்நூல் சிறந்த எடுத்துக்காட்டு. ஆசிரியர் களஆய்வு மேற்கொண்டு 125 இடங்களில் புதிதாகக் கண்டுபிடித்த தரவுகளும் பரந்த அளவில் தமிழ்ப் பல்கலைக்கழக கல்வெட்டியல் துறை கொடுமணலில் மேற்கொண்ட அகழாய்வுக் கண்டுபிடிப்புகளும் இந்நூல் எழுதுவதற்கு மூலங்களாகப் பயன்படுத்தப்பட்டுள்ளன. கி.மு.5ம் நூற்றாண்டு முதல் கி.பி.3 ஆம் நூற்றாண்டு முடிய தமிழகத்தின் பண்பாட்டு நிலைகளின் மாற்றங்கள் இதன்வழி வெளிக்கொணரப்பட்டுள்ளன. குறிப்பாகப்

பெருங்கற்படைக்காலப் பண்பாட்டுக் (Megalithic Culture) கூறுகள் தெளிவாக விளக்கப்பட்டுள்ளன. இம்மக்களின் தொழில்களில் இரும்புப் பொருள்கள் தயாரித்தல், அரிய கல்மணிகள் தயாரித்தல் மற்றும் வணிகம் போன்றவை எவ்வகையில் இருந்தன என்பனவும் பிராமி எழுத்தின் வளர்ச்சி, இதில் குறியீடுகள் கொண்டிருக்கும் பங்கு போன்றவைகள் தெளிவாக ஆராயப்பட்டு வரைபடங்களின் உதவியுடன் விளக்கியிருப்பது ஆசிரியரின் ஆய்வு நுட்பத்தைக் காட்டுகிறது. வெளியீட்டாளர் புத்தகத்தை நேர்த்தியான முறையில் உருவாக்கியபோதிலும் பதிப்பின்போது ஏற்பட்ட பிழைகளின் மீது கவனம் செலுத்தியிருக்கலாம். தமிழகத்திலுள்ள ஒவ்வொரு தொல்லியல் வரலாற்று ஆய்வாளரும் படிக்க வேண்டிய நூல்.

**பா.ஜெயக்குமார்,**
*தஞ்சாவூர்.*

*35:6* R. Krishnamurthy, **Late Roman coins from South India: Karur and Madurai,** Garnet Publications, madras, 1994, Page 140, Price Rs. 100.00.

தென்னிந்தியாவில் குறிப்பாக மதுரை, கரூர் பகுதிகளில் கிடைத்த பிற்கால ரோம செப்பு நாணயங்களைப் பற்றி விரிவாக எடுத்துரைக்கிறது இந்நூல். இந்நூலாசிரியர் நாணயவியலில் கொண்ட பத்தாண்டு கால அனுபவத்தை இந்நூல் உணர்த்து கின்றது. பொதுவாக அகஸ்டஸ் காலம் தொட்டு கரகல்லா காலம் வரை வெளியிட்ட தங்க, வெள்ளி நாணயங்களுக்கு முக்கியத்துவம் அளித்து ஆய்வு நடத்திய போதும் தமிழகத்தின் இருண்ட காலம் எனப்படுகின்ற களப்பிரர் ஆட்சிக் காலத்தில் கிடைத்த பிற்கால ரோம செப்பு நாணயங்களுக்கும் உரிய இடம் கொடுத்துள்ளார். ரோமப் பேரரசு தொடக்ககாலம் தொட்டு தமிழகத்துடன் கொண்ட வணிகத் தொடர்பை சுட்டிக்காட்டி கி.பி. 4ஆம் நூற்றாண்டில் மதுரை, கரூர் பகுதிகளில் அவர்கள் கொண்டிருந்த தொடர்பை இக்காசுகள் மூலம் வலியுறுத்தியுள்ளார். காசுகளின் தேய்ந்து போன தன்மையைக் கொண்டு இவை உலோக மதிப்பாக மட்டுமில்லாமல் நாணயமதிப்பாகவே பயன்படுத்தப் பட்டுள்ளது எனக் கூறுகிறார். இவருக்கு முன்னால் பல நாணய வியலார் மேற்கொண்ட ஆய்வின் சுருக்கத்தைக் கொடுத்திருப்பது இந்நூலின் சிறப்பம்சமாகும்.

ரோமானிய காசுகள் அச்சடித்த நாடாக எகிப்து, சிரியா, துருக்கியையும், இடங்களாக அலெக்ஸாண்டிரியா, ஆண்டி யோகியா, கான்ஸ்டான்டிநோபிள், சைசிகஸ், நிக்கோபிடியாவையும் சுட்டப்பட்டுள்ளன. காசுகளின் முன்பக்கம் தேய்ந்துபோன நிலையிலும் வாலன்டைன், அர்காடிஸ், ஹோனோதிஸ், தியோ டோனிஸ் போன்ற மன்னர்களின் பெயர்களை வெளிப்படுத்தி

யிருப்பது கால ஆராய்ச்சிக்கு உதவியாக உள்ளன. 4000 காசுகளைப் பட்டியலிட்டுக் கொடுத்துள்ளார். சாரதா சீனிவாசன் அவர்களின் உலோகப் பகுப்பாய்வு மூலம் இச்செப்புக் காசுகள் தமிழகத்தில் சமகாலத்தில் கிடைத்த செப்புக் காசுகளிலிருந்து வேறுபடுவதால் இவை ரோம நாட்டில் தயாரிக்கப்பட்டவையே எனத் துணியப்படுகிறது. ரோமநாட்டு அரசர்களின் காலம், வம்சாவளி, காசுகளின் எண்ணிக்கை ஆகியவற்றின் • பட்டியல் நாணயவியலில் ஈடுபட்டுள்ளோருக்கு பெரிதும் உதவும் எனலாம். சேரரின் கரூரிலும், பாண்டியரின் மதுரையிலும் இக் காசுகள் கிடைப்பதாலும் சோழர் தலைநகரமான உறையூரில் கிடைக் காமையாலும் ரோமர்களின் வணிகத்திற்கு கரூர், மதுரையில் மட்டும் காணப்பட்ட ஏற்புடைய அரசியல் சூழ்நிலையே காரணம் என்ற ஆசிரியரின் கருத்து மேலும் ஆராயப்பட வேண்டும்.

கா. ராஜன்
தஞ்சாவூர்.

*35:7* சூரக்குடிக் கோயில், ஆசிரியர்: மா. சுந்தர மூர்த்தி, எம்.ஏ., வெளியிட்டோர்: மணிவாசகர் பதிப்பகம், 8/7 சிங்கர் தெரு, பாரிமுனை, சென்னை, 600 018, 1994, பக்கம் 160, விலை: ரூ.20/-

நாட்டுக்கோட்டை நகரத்தார் வழிபாட்டில் உள்ள கோயில் களின் வரலாறுகள் வரிசையில் இந்நூல் ஏழாவதாகும். மிகவும் அறிமுகமான இவ் ஆசிரியர் காரைக்குடி வட்டத்தில் அமைந்துள்ள (நகரச்) சூரக்குடிக்கோயிலைப் பற்றி 11 பகுதிகளில் விவரிக்கிறார். இன்றைய கட்டுமானம் 19ம் நூற்றாண்டு நகரத்தாருடையது என்றாலும் அடித்தளம் 12-13ம் நூற்றாண்டு பாண்டியர் காலத்தது என்று சிற்பச் சுவடுகள் மூலம் கணிக்கிறார். இது தொடர்பான ஆய்வுகளுக்கு முக்கியத்துவம் அளிக்கவில்லையென்றாலும், பாண்டியர் காலச் சிற்பங்கள் பலவற்றை அடையாளம் காட்டுகிறார். கட்டுமான முறை, சிற்பங்கள், ஆகியவற்றை மிக நுணுக்கமாக விவரிக்கிறார். கோயில் பணிகள், பலவற்றையும் இந்நூல் தொகுத்தளிக்கிறது. கோயிலின் வரைபடமும், சில ஒளிப்படங்களும் நூலுக்கு அணி சேர்க்கின்றன.

ப. சண்முகம்
சென்னை.

*35:8* A.V. Narasimha Murthy (தொகுப்பாசிரியர்), **Studies in South Indian Coins, Vol. 5, New Era Publications**, சென்னை 28, பக். 150, 1995, விலை ரூ.200/-.

தென்னிந்திய நாணயவியல் கழகத்தில் இவ்ஐந்தாம் தொகுதி யில் 24 ஆய்வுக்கட்டுரைகள் இடம் பெற்றுள்ளன. தென்னிந்திய நாணயவியலில் அண்மைக் காலப் புதிய கண்டுபிடிப்புகள், ஆய்வு நிலை வளர்ச்சி ஆகியன இத் தொகுப்பில் நன்கு பிரதிபலிக்கிறது. தமிழகத்தில் அண்மைக் காலத்தில் கண்டெடுக்கப்பட்ட நாணயங் கள் பற்றிய விவரக் கட்டுரைகள் பல உள்ளன. கரூரில் அமராவதி ஆற்றிலும், அழகன்குள அகழாய்விலும் கண்டெடுக்கப்பட்ட கிரேக் கத் தீவுகள், மற்றும் ரோமானியக் காசுகள், படைவேடு அகழாய்வில் கிடைத்த புதிய காசுகள் பற்றிய ஆய்வுக் கட்டுரைகளும் உள்ளன. காஞ்சிபுர அகழாய்வில் கிடைத்த பல்லவர் கால நாணய அச்சுக்கள், இராமானுஜர், திருவள்ளுவர் உருவம் பொறித்த காசுகள் பற்றிய விவரக் கட்டுரைகளும் இடம்பெற்றுள்ளன. தமிழகத்தில் கிடைத்த ஔரங்கசீப்பின் காசு பற்றியும், தமிழகக் கல்வெட்டுக்கள் தரும் நாணயவியல் செய்திகளும், நாணயச் சாலைகள் பற்றிய கட்டுரை யும் இடம்பெற்றுள்ளன.

ப. சண்முகம்,
சென்னை.

# 36. செய்தித் திரட்டு

### 36:1. கடுமண் முத்திரை

திருநெல்வேலி கட்டபொம்மன் மாவட்டம் விளாத்திகுளம் அருகேயுள்ள சூரங்குடி எனும் சிற்றூரில் இம்முத்திரை கண்டு பிடிக்கப்பட்டது. இதிலுள்ள எழுத்தமைதியைக்காணும்போது பிராமி எழுத்துக்களிலிருந்து வட்டெழுத்து முறைக்கு மாற்றம் பெறும் கி.பி. 4-5 ஆம் நூற்றாண்டிற்குரியதாகக் கருதலாம்.

இராசு பவுன்துரை, தஞ்சாவூர்



### 36:2 கங்கைகொண்ட சோழபுரத்தில் பல்லவர்காலச் சிற்பங்கள்

கங்கை கொண்ட சோழபுரத்திலிருந்து தென்கிழக்கே 15 கி.மீ. தொலைவில் அமைந்துள்ள சொர்க்கப்பற்றம் என்ற இடத்தில் திரு கோபால்சாமி ரெட்டியார் என்பவருக்குச் சொந்தமான புன்செய் நிலத்தில் பல்லவர் காலத்தைச் சார்ந்த திருமால், ஸ்ரீதேவி சிற்பங்கள் பூமியில் பீடம், கால்பகுதிகள் புதையுண்டு கிடந்தன. திருமாலின் பின்னிரு கைகள் சங்கு, சக்கரம் பற்றியுள்ளன. முன்வலதுகை உடைந்த நிலையில் உள்ளது. தலையில் கிரீடமகுடம் தலையின் பின்புறத்தில் சிரச்சக்கரம், கழுத்தில் நான்கு வகையான மாலைகளும் வலது மார்பில் ஸ்ரீவத்சமும், வயிற்றில் உதரபந்தமும், மார்பில் புரிநூலும் காணப்படுகின்றன. சதுர வடிவமான பரந்த முகமும் எடுப்பான நாசியும், புன்முறுவல் பூத்த முகமும் கொண்டு இச்சிற்பம் வடிக்கப்பட்டுள்ளது. திருமாலின் வலதுபுறத்தில்

ஸ்ரீதேவி நின்ற நிலையில் காணப்படுகிறது. ஸ்ரீதேவி சிற்பம் இடதுபுறமாக இடுப்பை சற்று வளைத்து நிற்கும் பாங்கு அழகாக உள்ளது. இச்சிற்பங்களிலிருந்து இவ்விடத்தில் பல்லவர்காலக் கோயில் ஒன்று இருந்தது என்பதை ஊகிக்கலாம். வைணவப் பெரியார் நாதமுனிகள் இவ்வூரில் இறந்தார் என்று கூறப்படுகிறது. இப்பகுதிக்கு உலகளந்த சோழ நல்லூர் என்ற பெயரும் வழங்கி வருகிறது.

**கா.நெடுஞ்செழியன்,**
கங்கைகொண்ட சோழபுரம்.

### 36:3 அலெக்ஸாண்டரின் கல்லறை

அண்மையில் கிரேக்க ஆய்வுக்குழு ஒன்று இரு சுண்ணாம்புக் கற்பலகைகளை எகிப்தில் சிவா (Siva) எனுமிடத்தில் கண்டு பிடித்துள்ளது. இப்பலகையில் பொறிக்கப் பெற்றுள்ள செய்தி எகிப்து நாட்டின் மேல்புறப் பாலைவனச் சோலைப் பகுதியான சிவா என்ற இடத்தில்தான் அலெக்ஸாண்டரது கல்லறை இருந் திருக்க வேண்டும் என்ற நம்பிக்கையைத் தந்துள்ளது. லிபியாவின் மேற்கு எல்லையிலிருந்து சுமார் 80 கி.மீ. தொலைவில் சிவா அமைந்துள்ளது.

இதுவரை அலெக்ஸாண்டரது கல்லறை புதையிடம் ஒரு புரியாத புதிராகவே இருந்து வந்துள்ளது. மாஸிடோனியா வீரரான அலெக்ஸாண்டர் பாபிலோனியாவில் இறந்து விட்ட தாகவும், அவரது உடல், அங்கிருந்து சீரியாவிற்கு கொண்டு செல்லப்பட்டு பிறகு எகிப்திற்கு எடுத்துச் செல்லப்பட்டதாக வரலாறு கூறினாலும், அவ்விடங்களில் எங்கும் அக் கல்லறை காணப்படவில்லை.

கி.மு. 570-இல் பாரோ அமாசிஸ் என்ற மன்னன் ஏமுன் என்ற சூரியக் கடவுளுக்கு ஆலயம் ஒன்று கட்டினார். அவ்வால யத்தில் உள்ள மந்திரபீடமானது, 'தீர்க்க தரிசன' முறையில் எவ்வித கடினமான கேள்விகளுக்கும் பதில் அளித்து விடும் என்று நம்பப்பட்டது. பிற்காலத்தில் கிரேக்கர்கள் அதை ஜூபிடர் (கடவுள்) என்று அழைத்தனர்.

கி.மு. 332-இல் அலெக்ஸாண்டர் அத்தீர்க்கதரிசியுடன் உரை யாட சிவாவிற்குச் சென்றதாகவும், தீர்க்கதரிசி அலெக்ஸாண்டரிடம் அவர் தெய்வத்தன்மை கொண்டவர் என்றும், எகிப்தின் உரிமை பெற்ற தலைவன் என்று கூறியதாகவும் கதைகள் கூறப்படுகின்றன. அலெக்ஸாண்டர் எவ்விதப் போராட்டமும் இன்றி எகிப்தைக் கைப்பற்றியதை வரலாறு கூறுகிறது.

4 ஆண்டுகள் சிவாவில் மந்திராலயத்திற்கு அருகில் அகழாய்வு செய்யப்பட்டதன் விளைவாக சென்ற வாரம் கண்டுபிடிக்கப்பட்ட சமாதியின் மூலம் இவ்விரு கற்பலகைகளும் வெளிக்கொணரப் பட்டன.

நன்றி: 31.3.1995 நாளிட்ட இந்தியன் எக்ஸ்பிரஸ், மதுரை

கா. ராஜன்,
தஞ்சாவூர்.

### 36:4 இராமேஸ்வரம் கருத்தரங்கு

தமிழ்நாடு தொல்லியல் கழகத்தின் ஐந்தாவது கருத்தரங்கும் ஆவணம் 5 வெளியீட்டு விழாவும் கடந்த 1994 செப்டம்பர் 17, 18இல் வரலாற்றுச் சிறப்புமிக்க இராமேஸ்வரத்தில் நடைபெற்றன. இராமநாதபுரம் வரலாற்று ஆய்வாளரும், கழகத்தின் செயற்குழு உறுப்பினருமான டாக்டர் எஸ். எம். கமால் அவர்கள் இக்கருத் தரங்குக்கான எல்லா ஏற்பாடுகளையும் சீரிய முறையில் அமைத்து உதவினார்.

செப்டம்பர் 17 காலை 10.30 மணிக்கு முதல்நாள் நிகழ்ச்சி தொடங்கியது. கழகத்தின் தலைவர் பேராசிரியர் திரு கோ. விஜய வேணுகோபால் அவர்கள் நிகழ்ச்சிக்குத் தலைமை தாங்க பல ஊர்களில் இருந்தும் ஆர்வத்துடன் வந்திருந்த பேராளர் நாற் பதின்மரையும் உள்ளூர் பெருமக்களையும் செயலர் டாக்டர் எஸ்.எம். கமால் அவர்கள் வரவேற்றார்.

அடுத்து, தொடக்க உரையாற்றிய கேரள அரசு முன்னாள் தலைமைச் செயலர் டாக்டர் திரு கே. சங்கரநாராயணன் இ.அ.ப. அவர்கள் இந்தக் கருத்தரங்கு இராமேஸ்வரத்தில் வரலாறு பற்றிய ஆய்வுகளை மேற்கொள்வதற்குத் தூண்டுதலாக அமையும் என்று நம்பிக்கையினைத் தெரிவித்தார். இராமநாதபுரம் மன்னர் இளைய சேதுபதி உயர்திரு ந. குமரன் சேதுபதி அவர்களும், இராமேஸ்வரம் தீவின் சமுதாயத் தொண்டர் பூஜ்ய. திரு பிரணவானந்தா அவர்களும் விழாவினை வாழ்த்தினர்.

கழகத்தின் **ஆவணம்** இதழ் 5 திரு கே. சங்கரநாராயணன் அவர்களாலும், கழக உறுப்பினர் திரு இரா. கோவிந்தராஜ் அவர்கள் எழுதிய **தமிழ்நாட்டு எழுத்து வளர்ச்சி** என்ற நூல் டாக்டர் கோ. விஜயவேணுகோபால் அவர்களாலும் அறிமுகம் செய்யப்பட்டன. இதனைத் தொடர்ந்து, கழகத்தின் துணைத் தலைவர் கல்வெட்டு இயல் அறிஞர் திரு என். சேதுராமன் தம் சிறப்புரையில் இராமேஸ்வரம் திருக்கோயிலின் வரலாற்றுச் செய்திகளைத் தொகுத்து வழங்கியதுடன் பாண்டியர் ஆட்சியின் பின்னணியான இலங்கைக்கும் இராமஸ்வரத்திற்குமிடையே ஏற்பட்ட நெருக்கமான தொடர்புகளையும் நினைவுபடுத்தினார்.

17-ஆம் நாள் பிற்பகலும் 18-ஆம் நாள் முழுவதும் கருத்தரங்கு நடைபெற்றது. சேதுநாடு பற்றிப் பல ஆய்வுக் கட்டுரைகள் வழங்கப்பட்டு கருத்துப் பரிமாற்றம் செய்யப்பட்டது.

செ. இராசு
தஞ்சாவூர்

### 36:5 எட்டாவது உலகத்தமிழ் மாநாட்டில் தொல்லியலும் வரலாறும்

1995 ஆம் ஆண்டு சனவரித் திங்கள் 1-5 ஆம் தேதிகளில் தஞ்சையில் எட்டாவது உலகத் தமிழ் மாநாட்டு ஆய்வரங்கம் தமிழ்ப் பல்கலைக் கழக வளாகத்தில் நடைபெற்றது. ஆய்வரங்கம் முதன்மை ஆய்வுரை, சிறப்பு ஆய்வுரை, குழு ஆய்வுரை, கட்டுரை என நான்கு பகுதிகளாகப் பிரிக்கப்பட்டிருந்தது.

முதல் நாள் முதன்மை ஆய்வுரை நொபொரு கராஷிமா அவர்களால் "தென்கிழக்கு ஆசிய நாடுகளுடன் இந்திய வணிகத் தொடர்பு" பற்றி கொடுக்கப்பட்டது.

சிறப்பு ஆய்வுரைகளில் திரு ஐராவதம் மகாதேவன் அவர்களின் பண்டைக் காலத் தமிழ் எழுத்துக்கள் பற்றிய புதிய கண்ணோட்ட உரையும், பேராசிரியர் அஸ்கோ பர்போலாவின் சிந்துவெளி எழுத்துக்களுடன் திராவிட மொழி, சமயத் தொடர்பான உரையும் இடம் பெற்றன.

குழு அமர்வுகளில் தமிழகத் தொல்லியல் புதிய கணிப்புகள், ரோமானிய - தமிழகத் தொடர்பு, தமிழகக் காசுகள், தொல்லியல் சின்னங்களினமைப்பும் பாதுகாப்பும், சோழர் - விஜயநகரக் காலத்திய நாட்டார் பற்றிய கட்டுரைகள் முதலியன இடம் பெற்றிருந்தன.

கட்டுரை அமர்வுகளில் அரப்பா நாகரிகம், சிந்துவெளி எழுத்தும் குறியீடுகளும், பெருங்கற்படைப் பண்பாட்டுப் பானை ஓடுகள், வெளிநாடுகளில் அண்மையில் கண்டுபிடிக்கப்பட்ட கல்வெட்டுக்கள், இடைக்காலத்தில் சந்தைமுறை, நாயக்கர் - போர்ச்சுகீசியர் தொடர்பு, சோழர் கால எழுத்துக்கள், தஞ்சை நகர அமைப்பு, ஓலைச் சுவடிகள் பாதுகப்பு, மோடி ஆவணங்களின் வரலாற்றுச் சிறப்பு போன்ற கட்டுரைகள் படிக்கப்பட்டன.

### 36:6 தஞ்சைக் கண்காட்சியில் கல்வெட்டுகள்

எட்டாம் உலகத் தமிழ் மாநாட்டையொட்டி அரண்மனை வளாகத்தில் ஒரு கண்காட்சி ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. பொதுப் பணித்துறை அரங்கில் பல கல்வெட்டுகள் இடம் பெற்றிருந்தன. குறிப்பிடத்தக்கவை: அதியமான் பெருவழிக் கல், மகதேசன் பெருவழிக் கல், சேலம் மாவட்டம் தாசசமுத்திரம் ஏரிக்கல், விழுப் புரம் ஏரிக் கல் ஆகியன.

கொடுமுடி சண்முகன்.

*36:7 பிற்காலச்சோழரின் தமிழ்க் காசு*

*தஞ்சையில் அண்மையில் கிடைத்த ஒரு தங்கக் காசின் முன்பக்கத்தில் வலதுபக்கம் நோக்கி அமர்ந்திருக்கும் புலியும், அதன் பக்கங்களில் குத்துவிளக்கும் உள்ளது. பின்பக்கத்தில் 'சேதிகுல' என்று கி.பி. 11-ஆம் நூற்றாண்டு எழுத்தமைதியில் எழுதப்பட்டு உள்ளது. காசின் எடை 100 மில்லி கிராம். பிற்காலச் சோழர் காசுகளில் தமிழ், கிரந்தம் இரண்டுமே பொறிக்கப்பட்டிருக்கும். ஆனால் இந்தக் காசில் நான்கு எழுத்துக்களுமே தமிழில் உள்ளது சிறப்பாகும்.*

*இராஜராஜனின் தாயார் வானவன்மாதேவி, மனைவி வானவன் மாதேவி ஆகியோர் சேதிகுல நாட்டுச் சிற்றரசுக் குடும்பத்தைச் சேர்ந்தவர்கள். மலாடு எனவும், சேதிநாடு எனவும் வழங்கிய மலையமானாட்டில் பிறந்த தன் தாயாரின் நினைவாக இந்தக் காசை இராஜராஜன் சிறப்பு வெளியீடாக சோழ நாட்டில் வெளியிட்டிருக்கலாம்.*

*பிற்காலச் சோழர்களின் காசுகளில் அமர்ந்த நிலையில் உள்ள புலி இலச்சினையையும், தமிழ் எழுத்துக்களையும் மட்டும் தாங்கியுள்ள வரலாற்றுச் சிறப்புமிக்க முதற்பொற்காசு இதுவேயாகும்.*

**ஆறுமுக சீதாராமன்**
*தஞ்சாவூர்*

## கட்டுரையாளர்கள்

ம.சா. அறிவுடை நம்பி,
முதுநிலை விரிவுரையளர்,
அரிய கையெழுத்துச்
சுவடித்துறை,
தமிழ்ப் பல்கலைக்கழகம்,
தஞ்சாவூர் - 613 005.

ஆறுமுக சீதாராமன்,
11 உமா நகர்,
தஞ்சாவூர் - 613 007.

சு. இராசவேலு,
முதுநிலைக் கல்வெட்டாய்வாளர்,
தென்மண்டலக்
கல்வெட்டியல் பிரிவு,
இ.தொ.அ.து.
கோட்டை,
சென்னை - 600 009.

கரு. இராசேந்திரன்,
மேலைப்பனையூர் (அஞ்சல்)
விரையாச்சிலை (வழி)
புதுக்கோட்டை
மாவட்டம், 622 420.

சி. இலட்சுமணன்,
நியூ காலனி,
சிங்கம்புணரி - 624 502.

சு. கருப்பையா,
கல்வெட்டாய்வாளர்,
தென்மண்டலக் கல்வெட்டியல்
பிரிவு,
இ.தொ.அ.து.
கோட்டை,
சென்னை - 600 009.

மா. கலைவாணன்,
காப்பாட்சியர்,
13, சித்தி விநாயகர் கோயில்
தெரு,
ஆர்க்காடு - 632 503,

மா. கணேசன்,
தமிழியல் துறை,
பாரதியார் பல்கலைக் கழகம்,
கோயம்புத்தூர் - 642 046.

ம. காந்தி
காப்பாட்சியர்,
அரசு அருங்காட்சியகம்,
வேலூர் - 632 004.

கி. இரா. சங்கரன்,
ஆய்வாளர்,
கல்வெட்டியல் துறை,
தமிழ்ப் பல்கலைக்கழகம்,
தஞ்சாவூர் - 613 005.

ப. சண்முகம்,
பேராசிரியர்,
தொல்லியல் துறை,
சென்னைப் பல்கலைக்கழகம்,
சென்னை - 600 005.

த. சந்திரகுமார்,
இணைப் பேராசிரியர்,
சிற்பத்துறை,
தமிழ்ப் பல்கலைக்கழகம்,
தஞ்சாவூர் - 613 005.

பி. சந்திரசேகரன்,
விரிவுரையாளர்,
வரலாற்றுத்துறை,
ராஜுக்கள் கல்லூரி,
இராசபாளையம் - 626 117.

அ. சந்திரபோஸ்,
கொத்தமங்கலம் (அஞ்சல்)
ஆலங்குடி (வட்டம்)
புதுக்கோட்டை - 614 624.

தி. சுப்ரமணியன்,
காப்பாட்சியர்,
தமிழ்நாடு அரசு தொல்பொருள்
ஆய்வுத்துறை, தர்மபுரி - 636 701.

S. Swaminathan,
Senior Epigraphist,
O/o Director (Epigraphy),
ASI, Mysore 570 005.

D. Dayalan,
Deputy Supt. Archaeologist,
ASI, Bhopal circle,
G.T.B. Complex,
T.T. Nagar,
Bhopal 462 003.

ஜி. திருமூர்த்தி,
முதுநிலை தொல்லியல்
உதவியாளர்,
இ.தொ.அ.து.
சென்னை வட்டம்,
கோட்டை,
சென்னை - 600 009.

இல. தியாகராசன்,
முதுநிலை வரலாற்று
விரிவுரையாளர்,
அரசினர் கலைக்கல்லூரி,
அரியலூர் - 621 713.

கா. நெடுஞ்செழியன்
தமிழ்நாடு அரசு
தொல்பொருள் ஆய்வுத்துறை
கங்கைகொண்ட சோழபுரம்

பொ. பரமேஸ்வரி,
ஆய்வாளர்,
கல்வெட்டியல் துறை,
தமிழ்ப் பல்கலைக்கழகம்,
தஞ்சாவூர் - 613 005.

இராசு. பவுன்துரை
விரிவுரையாளர்
கட்டிடக் கலைத் துறை
தமிழ்ப் பல்கலைக்கழகம்.

பி.டி. பாலாஜி,
தொல்லியல் துறை,
சென்னைப் பல்கலைக் கழகம்,
சென்னை 600 005.

ஆர். மாணிக்கம்,
உதவிப் பொறியாளர்,
பொதுப்பணித்துறை,
நகர் பிரிவு,
தர்மபுரி 636 705.

கா. ராஜன்
கல்வெட்டியல் துறை
தமிழ்ப் பல்கலைக் கழகம்

நா. வள்ளி,
1/1 செட்டியார் தெரு,
காரைக்குடி - 623 001.

புது.பொ. வேங்கடராமன்,
30 இராஜவீதி,
புதுரெட்டியூர்,
கடத்தூர் (அஞ்சல்),
தருமபுரி 635 303.

ஆ. வேலுசாமி சுதந்திரன்,
எண் 8 கனகசபை நகர்,
தஞ்சாவூர் - 613 007.

பா. ஜெயக்குமார்,
ஆய்வாளர்,
கல்வெட்டியல் துறை,
தமிழ்ப் பல்கலைக்கழகம்,
தஞ்சாவூர் - 613 005.

கி. ஸ்ரீதரன்,
91ஏ, மேல்அடைய
விளஞ்சான் வீதி
திருவரங்கம்,
திருச்சி - 620 006.

வுக்காவோ ஜுன்இச்சி,
ஆய்வாளர்,
கல்வெட்டியல் துறை,
தமிழ்ப் பல்கலைக்கழகம்,
தஞ்சாவூர் - 613 005.
(Fukao Junichi
Tsukuba University, Japan)

அஞ்சலி

# தவத்திரு குன்றக்குடி அடிகளார்

தமிழகத்தின் தொன்மையான ஆதீனங்களில் ஒன்று ஐந்து கோயில் தேவஸ்தான ஆதீனம். அதன் புகழ்வாய்ந்த தலைவராக விளங்கியவர் தமிழ்மாமுனிவர் குன்றக்குடி அடிகளார். தவத்திரு அருணாசல தேசிக பரமாச்சாரிய சுவாமிகள் என்ற திருப்பெயருடைய அவர் தமிழ் அன்பர்களால் 'அடிகளார்' என்றே விருப்புடன் அழைக்கப்பட்டார்.

அருள்நெறித் திருக்கூட்டம், திருவருள் பேரவை, திருக்குறள் பேரவை, தெய்வீகப் பேரவை போன்றவை களின் தோற்றத்திற்கும் வளர்ச்சிக்கும் பெருந்தொண்டு ஆற்றியவர். பிரான்மலையில் பாரி விழாவெடுத்துப் பல அறிஞர்கட்குப் பட்டமும் பதக்கமும் அளித்துப் பாராட்டினார். குன்றக்குடியை ஒரு மாதிரிக் கிராமமாக மாற்றினார்.

தமிழக மேலவை உறுப்பினராகவும், தமிழ்ப் பல்கலைக்கழக ஆட்சிக்குழு, திட்டக்குழு, பாடத்திட்டக் குழு ஆகிய பலவற்றின் உறுப்பினராகவும் சிறப்புடன் பணியாற்றியவர்.

மத நல்லிணக்கத்திற்கும், தமிழில் அறிவியல் வளர்ச்சிக்கும் அரும் பணியாற்றினார். அனைத்திந்திய அறிவியல் விருது பெற்றவர். காரைக்குடி சுதேசி விஞ்ஞான இயக்கத்தின் தந்தையாக விளங்கினார். உடல் நலம்பெற அமெரிக்கா செல்ல மருத்துவர்கள் வற்புறுத்தினர். மருத்துவம் பார்ப்பதிலும் சுதேசியாகவே இருக்க விரும்பி மறுத்துவிட்டார்!

24.7.1993 இல் காரைக்குடியில் நடைபெற்ற நம் தமிழகத் தொல்லியல் கழகத்தின் மூன்றாம் ஆய்வரங் கத்தைத் தொடங்கிவைத்து ஆவணம் இதழை வெளி யிட்டார். அவராகவே விரும்பி இக்கழகத்தின் ஆயுள் உறுப்பினர் ஆனார்.

15.4.95 சனியன்று நள்ளிரவில் அடிகளார் அமரர் ஆனார். பல்துறை அறிஞரான அடிகளாரின் மறைவு தமிழ்கூறும் நல்லுலகுக்கு பேரிழப்பாகும்.

# அஞ்சலி

## முனைவர் சி.ஆர். சீனிவாசன்

சி.ஆர்.எஸ். என்று யாவராலும் அன்பாக அழைக்கப்பட்டு வந்த திரு. சி.ஆர். சீனிவாசன் (பிறப்பு: 8-9-1934) கடந்த ஏப்ரல் 16ம் தேதி அன்று காலமானார். பல ஆண்டுகள் இந்தியத் தொல்லியல் அளவீட்டுத் துறையில் கல்வெட்டியல் பிரிவில் பணிபுரிந்து '92ல் ஓய்வு பெற்றிருந்த தேர்ந்த தமிழ்க் கல்வெட்டாய்வாளர் இவர். பணியடிப்படையில் 1981 - 83இல் தமிழ்ப் பல்கலைக் கழகக் கல்வெட்டியல் துறையின் தலைவராகப் பொறுப்பேற்று அத்துறையின் வளர்ச்சிக்கு அடிகோலினார். தம் துறையின் சார்பாக பல அரிய வட்டெழுத்துக் கல்வெட்டுக்களைக் கண்டுபிடித்து வெளிக்கொணர்ந்துள்ளார். பலவற்றைத் தாமே Epigraphia Indica முதலிய ஏடுகளில் பதிப்பித்துள்ளார். பல மொழி வல்லுநரான இவர் Kanchipuram Through the Ages என்ற ஆய்வுக்கட்டுரைக்காக முனைவர் பட்டம் பெற்றார். அக்கட்டுரை நூலாகவும் வெளிவந்துள்ளது.

சி.ஆர்.எஸ்.ஸின் மறைவு கல்வெட்டாய்வாளர்களுக்கு ஒரு பெரும் பேரிழப்பாகும்.

## TAMIL NADU ARCHAEOLOGICAL SOCIETY, THANJAVUR
## RECEIPTS AND PAYMENTS ACCOUNTS FOR THE YEAR ENDED 31.3.95

| RECEIPTS | | PAYMENTS | |
|---|---|---|---|
| **Opening Balance** | | | |
| Cash on hand | 1,630.20 | To Xerox | 30.75 |
| Cash on Bank | 6,140.00 | Freight charges | 109.00 |
| Fixed Deposit Received | 15,000.00 | Audit fees | 250.00 |
| Life member fees | 12,100.00 | Typing charges | 165.30 |
| Patron | 15,000.00 | Bank charges | 162.00 |
| Interest of F.D | 1,719.00 | Travelling | 421.00 |
| Interest on SB A/c | 309.00 | Auto Hire | 50.00 |
| Sales of Journal | 4,130.00 | Tread expenses | 12.00 |
| Grant from ICHR | 9,750.00 | Courier services | 115.00 |
| Loan from Treasurer | 1,000.00 | Printing charges | 6,270 00 |
| | | Stationery | 343.00 |
| | | Terry Towel | 62.00 |
| | | Salary | 200.00 |
| | | Indian Bank FD Account | 15,000.00 |
| | | State Bank of India FD a/c | 25,000.00 |

| | | | |
|---|---|---|---|
| | | **Cash & Bank Balance** | |
| | | Cash at Indian, Bank | 2,992.00 |
| | | Cash at state bank of India | 14,307.00 |
| | | Cash in hand | 214.15 |
| **Total** | **66,778.20** | **Total** | **66,778.20** |

## CERTIFICATE

**The above Receipts and Payments account has been prepared from the books of accounts produced by Tamil Nadu Archaeological Society, Thanjavur.**

**Place: Thanjavur**

**Date: 7.4.95**

**Tamil Nadu Archaeological Society, Thanjavur**
**Income & Expenditure Account For the Year Ended 31.3.95**

| Expenditure | | Income | |
|---|---|---|---|
| To Xerox | 30.75 | Life member fees | 12,100.00 |
| Freight charges | 109.00 | Patron | 15,000.00 |
| Audit fees | 250.00 | Interest | 2,028.00 |
| Postage | 1,075.00 | Sales of Journal | 4,130.00 |
| Typing charges | 165.30 | ICHR Grant | 9,750.00 |
| Bank charges | 162.00 | | |
| Travelling expenses | 421.00 | | |
| Auto Hire | 50.00 | | |
| Tread expenses | 12.00 | | |
| Courier services | 115.00 | | |
| Printing charges | 6,270.00 | | |
| Stationery | 343.00 | | |
| Terry Towel | 62.00 | | |
| Salary | 200.00 | | |
| Excess of Income over expenditure | 33,742.95 | | |
| **Total** | **43,008.00** | **Total** | **43,008.00** |

## BALANCE SHEET AS ON 31.3.95

| LIABILITIES | | | ASSETS | |
|---|---|---|---|---|
| **Capital Fund a/c** | | | Indian Bank FD account | 15,000.00 |
| Opening Balance | | 22,770.20 | State Bank of India FD a/c | 25,000.00 |
| **Add:** Excess of Income over, expenditure | 33,742.95 | 56,513.15 | **Cash & Bank Balance** | |
| | | | Indian Bank SB a/c | 2,992.00 |
| Loan from Truserer | | 1,000.00 | State Bank of India SB a/c | 14,307.00 |
| | | | Cash in hand | 214.15 |
| **Total** | | **57,513.15** | **Total** | **57,513.15** |

### CERTIFICATE

The above Income & Expenditure and Balance Sheet has been prepared form the books of accounts produced by Tamil Nadu Archaeological Society, Thanjavur.

**Place: Thanjavur**

**Date: 7.4.95**

## ஆவணம் இதழில் பங்கேற்போர் நினைவுக்கு

தமிழக வரலாற்றை வளப்படுத்தும் அடிப்படைச் சான்றுகள் குறித்துக் கருத்துப் பரிமாற்றம் செய்து கொள்ளல் தமிழகத் தொல்லியல் கழகத்தின் முதன்மையான குறிக்கோள். அந்தக் குறிக்கோளை அடையும் வகையில் கீழ்க்குறிப்பிட்ட பரந்த தலைப்புக்களை ஒட்டிக் கட்டுரைகளும் குறிப்புகளும் வரவேற்கப்படுகின்றன.

1. புதியனவாகக் கண்டுபிடிக்கப்பட்ட தொல்பொருள்கள், தொன்மையான ஊரிருக்கைச் சின்னங்கள், கலைப் பொருள்கள், காசுகள், கல்வெட்டுக்கள், செம்பு அல்லது ஓலைப் பட்டயங்கள், சுவடிகள் ஆகியன பற்றிய குறிப்புகள்.

2. கல்வெட்டு முதலிய எழுத்தாவணங்களானால் அவற்றின் மூல பாடம், மைப்படி அல்லது கண்படி (eye copy).

3. மூலச்சான்றுகளை அடிப்படையாக வைத்து எழுதப்பட்ட வரலாற்றுக் கட்டுரைகள், திறனாய்வுகள்.

4. புதிய நூல்கள், கட்டுரைகள் பற்றிய மதிப்பீடு அல்லது குறிப்புகள்.

5. நாளேடுகளில் வந்த அரிய வரலாற்றுச் செய்திகளின் திரட்டு.

6. கருத்தரங்க நிகழ்ச்சிகள் பற்றிய செய்தித் திரட்டு.

7. மேற்கண்ட யாவற்றுக்கும் ஒளிப்படமும் வரைபடமும் அனுப்பலாம்.

கிரந்த எழுத்துக்களை எழுத்துப் பெயர்ப்பு செய்ய ஆவணம் வழங்கிவரும் முறையைப் பின்பற்றலாம்; அல்லது மூல எழுத்துக்களை அப்படியே மாற்றாமல் தரலாம். எல்லா வரைவுகளும் தெளிவாகவும் சுருக்கமாகவும் தட்டச்சில் இருபடிகள் எ. சுப்பராயலு, "ஆவணம்" பதிப்பாசிரியர் மே/பா. கல்வெட்டியல்துறை, தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர் - 613 005 என்ற முகவரிக்கு அனுப்ப வேண்டும்.

### உறுப்பினர் கட்டணம்

தமிழகத் தொல்லியல் கழக வாழ்நாள் உறுப்பினர் கட்டணத்தை ( ரூ.300/-) "கா. ராஜன், பொருளாளர், த.தொ.க மே/ பா கல்வெட்டியல் துறை, தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர் - 613 005 என்ற முகவரிக்கு அனுப்ப வேண்டும். காசோலை, வரைவோலைகள் "தமிழகத் தொல்லியல் கழகம்" (TAMIZHAGA TOLLIYAL KAZHAGAM) என்ற பெயரில் இருக்க வேண்டும்.

# ஆவணம்

## தமிழகத் தொல்லியல் கழகத்தின் பருவ இதழ்

ஆவணம் தமிழக வரலாற்றை வளப்படுத்தும் எல்லா அடிப்படைச் சான்றுகளையும் வெளியிடும் நோக்கம் கொண்டது. இதுவரை வெளியிடப்படாத கல்வெட்டுக்கள், செப்பேடுகள், ஓலைச்சுவடிகள், காகித ஆவணங்கள், தொல்பொருள்கள், காசுகள், கலைப் பொருள்கள் ஆகியவற்றைப் பற்றிய செய்திகளையும், கட்டுரைகளையும் ஏந்தி வருகிறது. இது தமிழக வரலாற்றில் ஈடுபாடுடைய யாவருடைய நூலகங்களுக்கும் இன்றியமையாத வரலாற்றுக் கருவூலம்.

### விலை விவரம்

| | |
|---|---|
| ஆவணம் 1 | இருப்பு இல்லை |
| ஆவணம் 2 | இருப்பு இல்லை |
| ஆவணம் 3 | ரூ.100.00 |
| ஆவணம் 4 | ரூ.100.00 |
| ஆவணம் 5 | ரூ.100.00 |

வரலாற்றுப் போக்கில் தென்னகச் சமூகம் : முதல் தொகுதி
நொபொரு கராஷிமா
ரூ.150 (நூலகப் பதிப்பு) ரூ.100 (உறுப்பினர் பதிப்பு)

### கழிவு

| | |
|---|---|
| நிறுவனங்களுக்கு | 15% |
| கழக வாழ்நாள் உறுப்பினருக்கு | 50% |
| தனிப்பேருக்கு | 30% |

குறிப்பு : ஆவணம் இதழுக்கான தொகையை வரைவோலையாக (Demand Draft) இருந்தால் தமிழகத் தொல்லியல் கழகம் (Tamizhaga Tolliyal Kazhagam) என்ற பெயருக்கு எடுத்து அனுப்பவும். காசோலையாக (cheque) இருந்தால் மேற்கண்ட தொகையுடன் ரூ.10ஐச் சேர்த்து அனுப்பவும்.

பிற தகவல்களுக்கு செயலர் , தமிழகத் தொல்லியல் கழகம், மே/பா கல்வெட்டியல் துறை, தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர்.

AVANAM, Journal of Tamil Nadu Archaeological Society, C/o, Dept. of Epigraphy, Tamil University, Thanjavur - 613 005.